13th March 1959]

MR. SPEAKER : நான் உங்களைத் தானே ஸப்போர்ட் செய்தேன். I supported you. This is the place where you can raise it. I will give my ruling to-morrow.

### III.—GOVERNMENT MOTION *RE* ELECTION OF MEMBERS TO THE COMMITTEE OF PRIVILEGES FOR THE FINANCIAL YEAR 1959-60.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That, with reference to rule 178 of the Madras Assembly Rules this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker, to elect fifteen mebers to be members of the Committee of Privileges for the financial year 1959-60.

The motion was put and carried.

MR. SPEAKER : "In accordance with the regulations framed by me for the holding of elections according to the principle of proportional representation by means of the single transferable vote, I fix 11 a.m. on Monday, the 16th March 1959, as the time within which nomination papers of candidates for election to the Committee of Privileges should reach the Secretary. Nomination forms can be had on application to the Secretary. 9 a.m.

The nomination papers will be taken up for scrutiny at 3 p.m. on Monday, the 16th March 1959. I also fix 11 a.m. on Tuesday, the 17th March 1959 as the last hour and date for the withdrawal of candidature

If the number of candidates nominated exceeds the number of seats to be filled, namely 15, a poll will be taken on Wednesday the 18th March 1959 between the hours of 9 a.m. and 1 p.m."

### IV.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1959-60—*cont.*

(1) DEMAND IX—HEAD OF STATE, MINISTERS AND HEADQUARTERS STAFF.

(2) DEMAND XI—ELECTIONS.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,02,67,100 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff.'

MR. SPEAKER : I understand that the cut motion of the hon. Member Sri M. Kalyanasundaram, is being supported by the Opposition. I call upon Sri Kalyanasundaram to move his cut motion.

[13th March 1959

SRI M. KALYANASUNDARAM: Sir, I move—

'That the allotment of Rs. 1,02,67,100 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff, be reduced by Rs. 100.'

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 16,96,700 under Demand XI—Elections.'

MR. SPEAKER: I understand that the Opposition Parties have agreed to support the cut motion of the hon. Member, Sri M. Jagannathan. Now, Sri Jagannathan will move his cut motion.

SRI M. JAGANNATHAN: Sir, I move—

'That the allotment of Rs. 16,96,700 under Demand XI—Elections—be reduced by Rs. 100.'

MR. SPEAKER: Now the Demands and the cut motions are before the House for consideration. The hon. Member, Sri Kalyanasundaram will initiate the discussion and the hon. Member, Sri Anbazhagan will speak before the Hon. Minister replies. I have allotted fifteen minutes each for Sri Kalyanasundaram and Sri Anbazhagan. I think 45 minutes would be enough for the Hon. Minister to reply.

SRI M. KALYANASUNDARAM: கனம் சபாநாயகர் அவர்களே, கடிதப் போக்குவரத்தில் ஏற்படும் தாமதம் சம்பந்தமாக ஒரு வெட்டுப் பிரேரபணை பிரேரேபிக்க வேண்டுமா என்று தோன்றக்கூடும். கடிதங்கள் எழுதுவதில் ஏற்படும் தாமதம், ஏதோ, சர்க்காரின் திறமைக் குறைவைக் காட்டவில்லை; சில உள் விஷயங்கள் அதிகமாக இருப்பதால்தான் இவ்வளவு காலதாமதம் ஆகிறது என்பதை இந்த சபையின் கவனத்திற்குக் கொண்டுவருவதற்காகத் தான் நான் இந்த வெட்டுப் பிரேரணையை இந்த ரூபத்தில் கொடுக்க நேர்ந்தது என்பதை முதலில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். காலதாமதம் ஏற்படுவதால் மக்களின் பல பிரச்னைகள் ஒத்திப்போடப்படுகின்றன. விரைவாக முடிவு எடுக்க முடியாமல் போகிறது. அப்படி ஏதாவது முடிவு எடுக்கப் பட்டாலும்கூட எந்த அங்கத்தினர்கள் கடிதங்கள் எழுதினார்களோ அவர்களுக்கு அது சம்பந்தமாக பதில் எழுதப்படுவதில்லை; "இல்லை" என்ற பதில்கள் மட்டும் அநேகமாக வந்து விடுகின்றன. நடவடிக்கை எடுத்தால் பதில் எழுதுவதில்லை. அதற்குக் காரணம் என்ன? அங்கத்தினர்கள் குறிப்பிட்ட விஷயத்தில் ஏதாவது உண்மை இருந்து அதன் பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டிருந்தால், அதைக் குறிப்பிட்டு சம்பந்தப் பட்ட அங்கத்தினர்களுக்கு பதில் எழுதுவார்களானால் அதனால் அந்த அங்கத்தினரின் தொகுதிக்கோ அவர் சார்ந்திருக்கும் கட்சிக்கோ அனுகூலம் ஏற்பட்டு விடும் என்ற காரணத்தால் பதில் எழுதாமல் விட்டு விடுகிறார்களோ என்ற சந்தேகம் எனக்கு இருக்கிறது. ஆனால் சில பிரச்னைகளில் சர்க்கார் எவ்வளவு துரிதமாக முடிவெடுத்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஆகையால் தான் சர்க்கார் திறமைக் குறைவால் கஷ்டப்படவில்லை என்று நான் அபிப்பிராயப் படுகிறேன். உதாரணமாக நகரசபைத் தேர்தல்கள் இப்போது நடந்து கொண்டிருக்கின்றன. நகரசபைத் தேர்தல்களுக்கு முன்பு புதியமுறையில் வார்டு பிரிவினைகள் செய்ய வேண்டுமென்ற யோசனைகள் சர்க்காருக்கு வந்திருக்கின்றன. அவைகளின் பேரில் சர்க்கார் நடவடிக்கை எடுக்கவில்லை.

13th March 1959] [Sri M. Kalyanasundaram]

சர்க்கார், பழைய முறையிலேயே இந்தத் தேர்தல்கள் நடக்கட்டும் என்று விட்டுவிட்டார்கள். ஆனால் திருச்சி போன்ற நகர சபைகள் சம்பந்தப்பட்ட வரையில் மட்டும் தேர்தல் நடப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பு ஒரு உத்திரவு போட்டிருக்கிறார்கள். அந்த உத்திரவின்படி அங்கே உள்ள 33 வார்டுகளும் பிரித்து புதிய முறையில் அமைக்கப்படுகின்றன. ஒரு வார்டு கூட பழைய முறையில் வைக்கப்படவில்லை. இவ்வளவு துரிதமாக நடவடிக்கை எடுக்க வேண்டிய காரணம் என்ன? மற்ற விஷயங்களில் நிராகரிப்பைச் செய்துவிட்டு இந்த ஒரு நகரசபை விஷயத்தில் மாத்திரம் இவ்வளவு கவனம் செலுத்தவேண்டிய அவசியம் என்ன என்று கவனிக்கும்போது, சாதாரண நிர்வாகத் தேவைகளுக்கு அப்பாற்பட்ட விஷயங்கள் இதில் அடங்கியிருக்கின்றன என்ற முடிவிற்கு நான் வருகிறேன் என்பதை இந்த சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். தேர்தல்கள் விஷயத்தில் ஆட்சியாளர்கள் தங்கள் கட்சி நலனுக்காக சர்க்கார் வசதிகளை பயன்படுத்தக் கூடாது. கனம் அமைச்சர்கள் தங்கள் கட்சிப் பிரசாரத்திற்குப் போகட்டும், வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. கனம் அமைச்சர்கள், காங்கிரஸ் தலைவர்கள் என்ற முறையில் பிரசாரம் செய்யட்டும், கூட்டங்கள் போடட்டும், எதிர்க் கட்சிகள் செய்யும் தவறுகளை எடுத்துச் சொல்லட்டும், தாங்கள் செய்திருக்கும் சேவைகளைப் பற்றிப் பேசட்டும். அவைகளையெல்லாம் வரவேற்கலாம். ஆனால் இவர்கள் முனிசிபல் தேர்தல்கள் நடைபெறக் கூடிய சமயத்தில் முனிசிபாலிடிகளுக்குச் சென்று அங்கே முனிசிபல் நிர்வாக சம்பந்தமான காரியங்களில் கலந்துகொள்வது, முனிசிபல் நிர்வாக சம்பந்தமான ஸ்தாபனங்களுக்கு அஸ்திவாரக்கல் நாட்டுவது, குழாய்களைத் திறந்து வைப்பது, இவைகள் போன்ற காரியங்களைச் செய்வது, வோட்டர்களுடைய எண்ணங்களை காங்கிரஸ் சார்பாக—ஒரு கட்சியின் சார்பாக—திருப்பி விடுவதற்காகச் செய்யப்படும் ஒரு மறைமுகப் பிரசாரம். இதில் சர்க்காரின் நிர்வாக வசதிகளையும் அதிகாரங்களையும் உபயோகிப்பது ஜனநாயகத்திற்கு உகந்தது அல்ல என்பதை இவர்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். திருச்சி முனிசிபல் தேர்தல் 30-ம் தேதி நடக்கவிருக்கிறது. நமது கனம் முதல் அமைச்சர் 25-ம் தேதி அங்கே சென்று அங்கே ஒரு ரிஸர்வாயர் கட்டுவதற்கு அஸ்திவாரக்கல் போடப் போகிறார். இதை இரண்டு மாதங்களுக்கு முன்பு செய்திருக்கலாம், அல்லது தேர்தலுக்குப் பிறகு செய்யலாம். இதையெல்லாம் பார்க்கும்போது, சர்க்கார் வேண்டுமென்று, முனிசிபல் தேர்தல்களில் தாங்கள் எப்படியாவது ஜெயிக்க வேண்டும் என்று, தீவிரமான நடவடிக்கைகளில் இறங்கியிருக்கிறார்கள் என்று தான் நான் நினைக்கிறேன். ஒரு சமயம் ஸ்ரீரங்கத்தில் பேசியபோது கனம் உள்நாட்டு அமைச்சர், எதிர்க் கட்சிகளுக்கு வோட்டுப் போட்டால் என்ன பிரயோஜனம் என்று கேட்டதாக நான் கேள்விப்படுகிறேன். தாம் அப்படிப் பேசவில்லை என்று அவர் சொன்னால் எனக்கு ரொம்ப சந்தோஷம். நடை முறை எப்படி இருக்கிறது? டாக்டர் மதுரம் அங்கே எதிர்க்கட்சி சேர்மனாக இருந்து வந்திருக்கிறார். அவர் ஒரு அறிக்கை விட்டிருக்கிறார். கனம் மந்திரிக்கு அதில் ஏதாவது சம்பந்தம் உண்டா என்று அறிய விரும்புகிறேன். காங்கிரஸில் சேர்ந்திருந்தால் தான் சர்க்காரின் ஒத்துழைப்பு கிடைக்கும், ஏதாவது காரியங்கள் நடக்கும் என்பதால் தேர்தலுக்குப் பிறகு காங்கிரஸில் சேர தாம் தீர்மானித்திருப்பதாக அவர் அந்த அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறார்.

MR. SPEAKER : How is the hon. Member in order in referring to such matters? He is discussing about a thing which the Hon. the Chief Minister is going to do on the 25th instant. That cannot be a matter for discussion here. He may not do it. Therefore, the hon. Member should not refer to a thing which may happen in future.

Secondly he cannot censure the Government for a thing which some individual Member did.

[13th March 1959

SRI M. KALYANASUNDARAM : இந்த இரண்டுக்கும் சம்பந்தம் இல்லாவிட்டால் நான் இதைப் பற்றி இங்கே பேச வேண்டியு அவசியமே இல்லே. சர்க்கார் போட்ட உத்தரவில் நிர்ப்பந்தம் கொடுத்ததன் காரணமாகத் தான் அவர் அவ்வாறு அறிக்கை விட நேர்ந்திருக்கும் என்பது என் அபிப்பிராயம். தாம் 25-ம் தேதி அங்கே போகவில்லே என்று கனம் முதல் அமைச்சர் சொல்லி விடட்டுமே !

THE HON. SRI K. KAMARAJ : நான் அங்கே 25-ம் தேதி போகப் போகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : தாம் 25-ம் தேதி அங்கே செல்லப்போவதாக இப்போதுகூட கனம் முதல் அமைச்சர் சொல்கிறுர்.

MR. SPEAKER : அவர் இப்போது அவ்வாறு சொன்னுல்கூட அவர் அன்று அங்கே செல்லாவிட்டால் என்ன செய்ய முடியும்? The hon. Member should not refer to a thing which may happen in future.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர்கள் தேர்தல் காலத்தில் இந்த மாதிரியான நிகழ்ச்சிகளே வைத்துக்கொண்டு தேர்தல் பிரசாரத்திற்கு சர்க்கார் வசதிகளேயும் சர்க்கார் அதிகாரங்களேயும் பயன்படுத்துகிருர்கள் என்பதை இவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். நிர்ப்பந்தம் ஒருபுறம் இருக்கட்டும். எல்லா வசதிகளேயும் தாங்கள் செய்துகொடுப்பதாக மக்கள் கருத வேண்டும், மக்கள் மனதில் அந்த எண்ணத்தை உண்டாக்கி தங்கள் கட்சிக்கு வோட்டுச் சேகரிக்க வேண்டும் என்பதற்காக இவர்கள் தேர்தல் காலத்தில் இத்தகைய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்கிருர்கள் ; தேர்தல் காலத்தில் இத்தகைய வேலேகளே வைத்துக்கொள்ளுகிருர்கள். இன்னும் சில இடங்களில் நமது மதிப்பிற்குரிய மராமத்து அமைச்சர் தாம் செல்லும் இடங்களில் ஹரிஜனங்களுக்கு நிலம் வாங்கிக்கொடுக்கும் பிரச்னேகளில் ஒரு நிர்ப்பந்தத்தைக் கொடுக்கிருர். நான் ஒரு அதிகாரியைப் பார்த்து அவரிடம் சில பிரச்னேகளேப் பற்றி "ரெப்ரெஸென்டேஷன்" பண்ணினேன். நான் எப்போதுமே, வழக்கமாகவே, "ரெப்ரெஸன்டேஷன்ஸ்" செய்து வருகிறேன். அவர் "நான் தேர்தல் காலத்தில் எந்தப் பிரச்னேயிலும் தலேயிட மாட்டேன்" என்று சொன்னுர். "நான் பிரச்னேயை கவனித்து நடவடிக்கை எடுத்தால் அது உங்களுக்கு அனுகூலமாக இருக்கும் அல்லது இன்னெருவருக்கு அனுகூலமாக இருக்கும். நான் இவருக்காக இதைச் செய்தேன் என்றே, அவருக்காக இதைச் செய்தேன் என்றே பிறர் சொல்லக்கூடும். ஆகவே தேர்தல் காலத்தில் நான் எந்தப் பிரச்னேயிலும் தலேயிட மாட்டேன்" என்று அவர் சொன்னுர். இதற்கு நான் ரொம்ப சந்தோஷப்படுகிறேன். ஆனல், எல்லா அதிகாரிகளும் இப்படி இருக்க வேண்டும் என்றும் சொல்ல விரும்புகிறேன்.

என்னுடைய தொகுதியில், 11-வது வார்டில் அங்குள்ள ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டம் நடைமுறையில் இருக்கிறது. காங்கிரஸ் கொடியைப் போட்டு வைத்திருக்கும் " டிப்ரஸ்ட் கிளாஸ் லீக் "-ஐ சேர்ந்தவர்களுக்குத் தான் வீடுகள் கிடைக்கும், அதில் சேராதவர்களுக்கு வீடு கிடைக்காது என்று அமைச்சர் அந்தக் கூட்டத்தில் பேசியதாக அங்குள்ள ஹரிஜன மக்கள் என்னிடம் வந்து சொன்னுர்கள். அது சம்பந்தமாக அங்கே குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. டிப்ரஸ்ட் க்ளாஸ் லீக்-ஐ சேர்ந்தவர்கள் என்றும், அதைச் சேராதவர்கள் என்றும் பிரித்து வைக்கப்பட்டு, அதில் சேராதவர்களுக்கு வீடுகள் கொடுப்பதில்லே என்ற புகார் இருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN : சமீபத்தில் நான் திருச்சிக்குப் போயிருந்தேன். அங்கே என்னிடம் சொன்னுர்கள், கல்யாணசுந்தரம் அங்கே போய் தான் சொல்கிற ஆட்களுக்குத் தான் வீடுகள் கொடுக்கப்பட வேண்டுமென்று சொல்லி தகராறு கிளப்பியிருப்பதாகச் சொன்னுர்கள்.

13th March 1959]

Mr. SPEAKER : The hon. Member must not refer to those matters.

Sri M. KALYANASUNDARAM : அந்தத் தெருவில் இருக்கிறவர்களுக்கு வீடுகள் கொடுக்காமல் ஊரில் இல்லாதவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இதைச் சொல்லும்போது நான் விசாரணைக்குத் தயாராயிருக்கிறேன். நான் சொல்பவர்கள் என்றோ அல்லது நீங்கள் சொல்கிற ஆட்களுக்கு என்றோ இல்லை. அங்கு இருப்பவர்களுக்கு வீடு கொடுக்காமல் எங்கெங்கேயோ வேலை பார்த்து வருகிறவர்களுக்கு வீடு கொடுக்கப்படுகிறது.

Mr. SPEAKER : The hon. Member should not put the House or the Speaker in a very difficult situation in deciding who is telling the truth. He must refer to a thing that has taken place and not to things which are likely to take place. How am I going to decide who is correct? The hon. Member is a seasoned legislator and he should not drag in here municipal politics. He can talk about the work of the Ministers, but cannot make allegations about something which happened in some municipality. How can this House decide and how can I decide about those things? Let him please be careful in what he says?

Sri M. KALYANASUNDARAM : அதைத்தான் நான் அதிகாரிகள் கவனத்திற்கு கொண்டு வந்தேன். நான் சொல்கிறவர்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லவில்லை. தகராறு இருக்கிற இடங்களில் இரு சாராரையும் சேர்த்து வைப்பதில் எனக்கு அக்கறை உண்டு. என் கட்சியைச் சார்ந்தவர்களுக்கு கொடுககவேண்டும், மற்றவர்களுக்குக் கொடுக்கக்கூடாது என்று நான் சொல்லவில்லை. அது பற்றிய விசாரணைக்கு நான் த்யாராயிருக்கிறேன். என்னுடைய கவனக் குறைவால் எந்தவித தவறும் செய்து விட்டதாகத் தெரியவில்லை. இன்ன இடத்தில் இன்னார் இன்னின்ன மாதிரி பேசியிருக்கிறார்கள் என்று தான் குறிப்பிட்டேனே தவிர, கண்மூடித்தனமாக ஒரு குற்றச் சாட்டையும் நான் சொல்லவில்லை. உண்மையைச் சொல்லும்போது அவர்களுக்கு கஷ்டமாக இருக்கிறது. பொறுமையாக இருந்து இவைகளுக்கு பதில் சொல்லும்போது பதில் சொல்லுவதற்குள்ள பொறுமை அமைச்சர்களுக்கு இல்லையே என்று தான். . .

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, when personal allegations are made, I think it should be refuted then and there. The hon. Member cannot expect me to say in my reply what Mr. Kakkan said there. Even here, it is not within his personal knowledge; he also says that somebody came and told him. Who is that somebody and what that somebody said, we do not know. This is not a court of law, but still, there should be some limit. Somebody might have made representations according to his own light and that should not be made the basis of attack by the hon. Member.

Mr. SPEAKER : I entirely agree with that. I request the hon. Member to proceed on those lines and refer to something which is on record.

Sri M. KALYANASUNDARAM : அப்படியானால் இந்தச் சபையில் எந்த விஷயத்தைப் பற்றியும் பேச முடியாது. மந்திரிகள் பேசும் கூட்டங்களுக்கெல்லாம் நாங்கள் நேரில் போய்க் கேட்கவேண்டும் என்று சொல்லுகிறீர்களா? கலெக்டருக்கு எழுதியனுப்பியிருக்கும் விஷ

யத்தைத்தான் நான் குறிப்பிடுகிறேன். அந்தத் தெருவில் இருப்பவர்கள், நான் மேற்குறிப்பிட்ட கழகத்தில் சேராதிருக்கிற காரணத்திஞல் அவர்கள் புறக்கணிக்கப்படுகிருர்கள் என்பதைத் தான் நான் உங்கள் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Now the hon. Member says that it is on record, and it has been sent to the Collector. Is it stated that only persons belonging to this Depressed League should alone be preferred and nobody else should be given? Is it on record?

SRI M. KALYANASUNDARAM : கலெக்டருக்கு அப்படி 20 பேர்கள் கையெழுத்து போட்டு அனுப்பியிருக்கிருர்கள். அந்தக் கிராமத்தில் நாங்கள் குடியிருக்கிறோம், இருந்தும் அந்தக் கழகத்தில் சேராதவர்களுக்கு கொடுக்க மாட்டோம் என்று சொல்லிவிட்டதாக புகார் எழுப்பப்பட்டிருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : Now he goes back on that. The charge was that the Minister wanted that only Depressed Class League members should be preferred and that he made an announcement of it. Now he goes back and says that somebody else complained on such a way to the Collector. Really, it is not fair. I do not think the hon. Member is justified in making such allegations on the basis of some complaints made by some persons.

MR. SPEAKER : In the interest of fair debate, the hon. Member should not attack the Hon. Minister on that point.

SRI M. KALYANASUNDARAM : ஒழுங்கீனமான காரியத்தை நான் என்ன செய்து விட்டேன்? நான் கேள்விப் பட்டதைச் சொல்லக் கூடாதா? அமைச்சர்கள் சொன்னதை நான் இங்கு சொல்லக் கூடாதா? எதிர்க்கட்சியினர் பொதுக்கூட்டங்களில் சொல்வதைப்பற்றி அமைச்சர்கள் தாக்கிப் பேசவில்லையா? நிர்வாக அதிகாரத்தை, தங்களுக் குள்ள அதிகாரத்தை உபயோகப்படுத்திக்கொண்டு அமைச்சர்கள் தங்கள் இஷ்டம்போல் செய்வது சரியல்ல என்பதை நான் எந்த ரூபத்தில்தான் இந்தச் சபையின் கவனத்திற்குக் கொண்டு வருவது ?

MR. SPEAKER : I agree. A certain amount of latitude must be given, but there must be a limit. The hon. Member cannot make allegations against a Minister and there is no need for that. He should go on something which is on record.

SRI M. KALYANASUNDARAM : இதையெல்லாம் அலிகேஷன்ஸ் என்று சொன்ஞல், இந்த சபையில் நிர்வாகத்தைப் பற்றியோ, அமைச்சர்களைப் பற்றியோ, அதாவது அமைச்சர்களின் நடவடிக்கை கள் பற்றியோ அல்லது எந்த இலாகாவைப் பற்றியுமோ பேசவே முடியாது. தேர்தல்கள் நல்ல முறையில், ஒழுங்காக நடைபெறவேண்டும், அமைச்சர்கள் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்கள் என்பதிஞல் அவர்களது பொறுப்பு இதில் அதிகம் இருக்கிறது என்பதை நான் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். பல பஞ்சாயத்து . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : The hon. Member seems to think that because Election is included here (in the Demand)—Election here is with reference to the General Elections to the Assembly and the Parliament, etc.—to speak of Panchayat elections

13th March 1959] [Sri C. Subramaniam]

and municipal elections is not correct; that should be done under Local Administration and this is not the occasion for that. Anyhow, if he wants to discuss our conduct with reference to municipal and panchayat elections, generally about the conduct of municipal elections, then I should tell the hon. Member that I will not be in a position to answer them.

MR. SPEAKER: I should like to know his (Mr. Kalyanasundaram's) view before I give a ruling.

SRI M. KALYANASUNDARAM: பஞ்சாயத்து, நகர சபைத் தேர்தல்களைப் பற்றியல்ல நான் பேசுவது, அந்தத் தேர்தல்கள் நடக்கக்கூடிய காலத்தில் அமைச்சர்கள் நடந்து கொள்ளக்கூடிய விதம் பற்றியும், அவர்களின் நடவடிக்கைகளைப் பற்றியும்தான் நான் குறிப்பிட விரும்புகிறேன்.

MR. SPEAKER: That is all right. Let us see. Let the hon. Member proceed.

SRI M. KALYANASUNDARAM: மந்திரிகள் அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்டிருந்து, தங்கள் அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்யாமலிருக்கவேண்டுமென்று நான் சொல்வது அவர்கள் மனதை உறுத்துகிறது. நான் சொல்வதை பொறுமையாகக் கேட்டால் நாட்டு மக்களுக்கு நன்மையாக இருக்கும்.

MR. SPEAKER: Not only Ministers, I also feel like that sometimes. I am not interested in municipal elections, though I am raising that point. I am not interested in that. When the hon. Member carries on a debate, it should be at some level. It must look fair even to one who is not interested in municipal elections.

SRI M. KALYANASUNDARAM: மந்திரிகளுக்கும் நகரசபைத் தேர்தல்களில் அக்கறையுண்டு, எதிர் கட்சியினராகிய எங்களுக்கும் அதில் அக்கறையுண்டு. சபாநாயகர் அவர்களுக்கு அதில் அக்கறையில்லாமல் இருக்கலாம். இதன் முக்கியத்துவம் உங்களுக்குப் புரியாமல் இருக்கலாம்.

MR. SPEAKER: That allegation would not be correct. I hope the hon. Member will withdraw that.

SRI M. KALYANASUNDARAM: என்ன ?

MR. SPEAKER: The hon. Member said that the Speaker did not understand the importance of this. I do not think it is correct.

SRI M. KALYANASUNDARAM: நான் அப்படி சொல்லவில்லை. நான் சொல்லும் குற்றச்சாட்டுகளின் முக்கியத்துவத்தை. . .

SRI R. CHIDAMBARA BHARATHI: On a point of order, Sir.

(Sri V. K. Kothandaraman rose.)

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாண சுந்தரம் அல்லவா பேசுகிறார் ? ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் உட்காரலாம்.

SRI R. CHIDAMBARA BHARATHI: ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார், கனம் அங்கத்தினர் அவர்கள் முனிஸிபல் எலெக்ஷனில் எங்களுக்கும் அக்கறையுண்டு, எதிர் கட்சியினருக்கும் அக்கறையுண்டு என்று சொன்னார்கள். அதோடு ஸ்பீக்கர் அவர்கள்...

**MR. SPEAKER:** அவர் இல்லை என்று சொன்னால் அப்புறம் என்ன இருக்கிறது.

**SRI R. CHIDAMBARA BHARATHI:** நான் சொல்லப்போவது வேறு............

**MR. SPEAKER:** அது, நீங்கள் சொல்லக்கூடிய அர்த்தமாக யிருக்கலாம். அவர் இல்லையென்று சொன்னால் அதை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

9-30 a.m.

**SRI M. KALYANASUNDARAM:** நான் நகரசபைத் தேர்தல் சம்பந்தமாக மந்திரிகளுடைய நடவடிக்கைகளைப்பற்றி பேச ஆரம் பித்த உடனேயே இவ்வளவு உஷ்ணம் கிளம்பியதால் நான் சொல்லக்கூடிய விஷயங்களில் உண்மை இருக்கிறது என்பது நிரூபிக்கப் படுகிறது. அது போகட்டும். மற்ற விஷயங்களில் அமைச்சர்களுடைய நட வடிக்கைகளை பார்ப்போம். இதிலேயே எனக்கு ஐந்து நிமிஷங்கள் ஆகி விட்டன. ஆகவே, தயவு செய்து எனக்கு இன்னும் ஐந்து நிமிஷம் கூட கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

உணவுப் பிரச்னை பற்றி சில விஷயங்களை அமைச்சர்களுடைய கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். திருச்சி, தஞ்சை, மதுரை, சேலம் ஆகிய ஜில்லாக்களிலிருந்து எனக்கு செய்திகள் வந்திருக்கின்றன. அங் கெல்லாம் நெல், அரிசி இப்பொழுது கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. மதுரை தொழிலாளர்கள் கூட்டுறவு சங்கத் திற்கு அரிசி கிடைக்கவில்லை. நமது அமைச்சர்களிடமிருந்து 10 நாட் களுக்குத் தேவையான அரிசிக்கு அனுமதி வாங்கிக்கொண்டுபோய், 2 நாட்களுக்குத் தேவையான அரிசி கூட வாங்கமுடியவில்லை. சேலம் மாக் னிஸைட் தொழிலாளர்களுக்கும் அரிசி கிடைக்காமல் முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையே பல தகராறுகள் ஏற்பட்டிருக்கின்றன. தஞ்சையில் அரிசி, நெல் மில்களுக்கு வருவது இல்லை. வியாபாரி களுக்கும் கிடைப்பதில்லை என்ற புகார் வந்திருக்கிறது. நிலப் பிரபுக்கள் தான் அதிகமாக தேக்கி வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கேள்விப் படுகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** இம்மாதிரி கூட்டு றவு சங்கங்களுக்கு அரிசி கிடைப்பதில்லை என்பது பற்றி தகவல் வந்திருக்கிறது. அவசியமானால் வியாபாரிகளிடமிருந்தாவது, "ப்ரொடி யூஸர்களிடமிருந்தாவது" "ரெகுவிஸிஷன்" செய்து இந்த சங்கங்களுக்கு வாங்கிக்கொடுக்கவேண்டுமென்று கலெக்டர்களுக்கு உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறது.

**SRI M. KALYANASUNDARAM:** அந்த உத்தரவு எப்பொழுது பிறப்பிக்கப்பட்டதோ தெரியாது. நான் 6-ம் தேதி சேலம் ஜில்லா கலெக்டர் அவர்களைப் பார்த்து மாக்னிஸைட் தொழிலாளர்களுக்கு தேவை யான அரிசி வாங்கிக்கொடுக்கவேண்டுமென்று கேட்டேன். ..

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கனம் அங்கத்தினர் அவர்களுக்கு நான் சொல்ல விரும்புவது என்னவென்றால், மந்திரி களைப்பற்றியும் இந்த விவாதத்தில் பேசலாம். ஆனால் ஒவ்வொரு இலாகாவைப் பற்றியும் உள்ள பிரச்னைகளை எழுப்பிப் பேசினால் நான் எல்லாவற்றிற்கும் எப்படி பதில் சொல்ல முடியும்? நான் பதில் சொல்ல வேண்டுமென்றுமென்பதற்காகத் தான் அங்கத்தினர்கள் இதைப்பற்றி பேசுகிறார் என்று நினைக்கிறேன். உதாரணமாக உணவுப் பிரச்னையைப் பற்றி பேசுகிறார். உணவுக்காக ஏதாவது ஒரு விவாதம் இருக்குமானால் அதிலே இந்த சிறிய விஷயங்களை எடுத்துச்சொல்லலாம். அப்பொழுது அந்த இலாகா அமைச்சர் அதற்கு பதில் சொல்லுவார். இந்த விவாதத் தில் பொதுவாக மந்திரிகள் அனுசரிக்கக்கூடிய கொள்கைகளைப்பற்றி

பேசினால்தான் நான் அதற்கு பதில் அளிக்க முடியும். நான் பதில் சொல்லவேண்டிய அவசியம் இல்லை என்று நினைத்தால், அங்கத்தினர் எதைப்பற்றி வேண்டுமானாலும் பேசுவதற்கு எனக்கு ஆட்சேபனை இல்லை.

**Mr. SPEAKER :** அங்கத்தினர் பேசுவது தவறு என்று சொல்ல முடியாது. அவர் பேசியதற்கு மந்திரி அவர்கள் பதில் அளிக்க வில்லை என்றால் அவர் மீது தவறு ஒன்றும் சொல்ல முடியாது. (சிரிப்பு).

**Sri M. KALYANASUNDARAM :** சபாநாயகர் அவர்களின் தீர்ப்பு சரியான தீர்ப்பு. மந்திரிகள் கூட்டு முயற்சி எடுக்கக்கூடிய விஷயங் களைப்பற்றித்தான் நான் இங்கே பேசுகிறேன். அவரவர்கள் இலாகாவின் தனி நிர்வாகத்தைப் பற்றி பேசவில்லை. "ஸ்டேட் டிரேடிங்" கூட்டு முடிவு எடுக்கக்கூடிய ஒரு விஷயம் தான். ஆகையினாலே அது சம்பந்த மாக இருக்கக்கூடிய சிக்கல்களை நான் மந்திரிகளின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அது மிகவும் அவசியமாக இருக்கிறது. 6-ம் தேதி சேலம் கலெக்டர் எங்களுக்குச் சொன்னது என்னவென்றால், "கலெக்டருக்கு வந்திருக்கக்கூடிய உத்தரவைப்படி சர்க்காருடைய ஸ்டாக்கி லிருந்து கொடுக்க முடியாது. தனிப்பட்ட வியாபாரிகள் வைத்திருந்தால் அவர்களிடமிருந்து வாங்கிக்கொடுக்க முடியும். தனிப்பட்ட வியாபாரிகளை எனக்குக் காட்டுங்கள்" என்பதுதான். பொது மக்களுக்கு விற்கக்கூடிய ஸ்டாக் இல்லை என்று எல்லாக் கடைகளிலும் போர்டு போட்டிருக்கிறார்கள். சர்க்கார் ஸ்டாக்கிலிருந்து கொடுப்பதற்கு தனக்கு அதிகாரம் இல்லை என்றும், அமைச்சர்களிடம் போய் சொல்லவேண்டுமென்றும் அவர் எங்க ளுக்கு தெரிவித்துவிட்டார். ஆகவே, இந்த உத்தரவினால் போதுமான அளவுக்கு பலன் ஏற்படவில்லை. அவசியமானால் சர்க்கார் ஸ்டாக்கிலிருந்து இம்மாதிரி சங்கங்களுக்கு அரிசி ஒதுக்கிக்கொடுக்கவேண்டும் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பிக்கவேண்டும். ஸ்டாக் வைத்திருப்பவர்களைக் காட்டுங்கள் என்று சொன்னால், இப்பொழுது வியாபாரிகள் கையில் அதிகமாக ஸ்டாக் இல்லை. நிலப்பிரபுக்கள் கையில்தான் அதிகமாக ஸ்டாக் இருக்கிறது. சர்க்கார் எடுத்திருக்கக்கூடிய முடிவுகளின் விளைவுகளினாலே, உணவுப் பண்டங்களை விலைக்கு வாங்கி சாப்பிடக்கூடிய மக்களுக்கு உணவுப் பண்டங் கள் கிடைக்காத நிலை ஏற்பட்டு ஸ்தம்பித்துப் போயிருக்கிறது என்பதை எல்லா அமைச்சர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இது மிகவும் முக்கியமான பிரச்னையாகவும், அவசரமாகவும் இருப்பதினாலே இதைப் பற்றி இப்பொழுது பேசினேன்.

தொழில் அமைதி வேண்டும், உற்பத்தி பெருக வேண்டும் என்று மந்திரிகள் விரும்புகிறார்கள். தொழில் அமைதியை பாதுகாக்க வேண்டும், அப்பொழுது தான் உற்பத்தி பெருகும் என்பதிலே சர்க்காருக்கு சந்தேகம் கிடையாது, எதிர்க்கட்சியினர்களுக்கும் சந்தேகம் கிடையாது. தொழில் அமைதியில் குறைவு ஏற்படுவதற்குக் காரணம் என்னவென்பதை பல முறை இந்தச் சபையில் எடுத்துக் கூறியிருக்கிறோம். அமைச்சர் அவர்கள் பட்ஜெட் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கக்கூடிய தவறுகளையும் எடுத்துக் காட்டியிருக்கிறோம். விலைவாசி அதிகமாகப் போய்க் கொண்டிருக்கிறது, தகராறுகள் அதிகமாக இருக்கின்றன. சர்க்கார் இலாகா உள்பட, தனியார் நடத்தும் தொழில்களில் தொழில் அமைதி ஏற்படக்கூடிய நடவடிக்கைகளை எடுத்திருக்கிறார்களா என்று பார்த்தால், நடவடிக்கை மிகக் குறைவாக இருக்கிறது. தொழிற்சாலைகளை மூடுவதற்கு எதிராக, வேலை நிறுத்தங்கள் ஏற்படுவதை தடுப்பதற்கு மத்திய சர்க்கார் எடுத்திருக்கக்கூடிய முடிவுகளைக் கூட, நம்முடைய ராஜ்ய சர்க்கார் எடுக்கவில்லை. தொழிலாளர்கள், முத லாளிகள், சர்க்கார் ஆகியோர்கள் அனுசரிக்கக்கூடிய விதி முறைகளைப்பற்றி முக்கூட்டு மகாநாட்டில் விவாதிக்கப்பட்டு முடிவுகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த முடிவுகள் பல இலாகா மந்திரிகளுக்கும், பல இலாகா அதிகாரி களுக்கும் தெரியாது. எல்லா இலாகா அதிகாரிகளுக்கும் தெரிவிக்கும்படி உத்தரவிட்டு, இந்த விதி ஒழுங்குகளை அமுலுக்குக் கொண்டுவரவேண்டும். பப்ளிக் வொர்க்ஸ் டிபார்ட்மெண்டு சம்பந்தப்பட்ட மட்டில் ஹைவேஸ்

[Sri M. Kalyanasundaram] [13th March 1959

யூனியன் இருக்கிறது, பப்ளிக் வொர்க்ஸ் டிபார்ட்மெண்டு யூனியன் இருக்கிறது, சர்க்காரின் கீழே நேரடியாக வேலே செய்யக்கூடிய தொழிலாளிகள் இருக்கிறார்கள். நான் என்.ஜி.ஒ.-க்களைக் குறிப்பிடவில்லை. தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளிகளைப் பற்றித் தான் குறிப்பிடுகிறேன். அவர்கள் முக்கூட்டு மகாநாட்டில் முடிவுசெய்யப்பட்ட ஒழுங்கு முறைகளை அமுல் நடத்தவில்லை. மாற்றுக் கட்சியைச் சார்ந்தவர்கள் சில சங்கங்களின் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதற்காக, அமைச்சர்கள் இந்த சங்கங்களுடன் பேச மறுக்கிறார்கள். என்ன நியாயம் இருந்தாலும், அவர்கள் சொல்லக்கூடிய கோரிக்கைகளை ஒத்துக்கொள்ளாமல் அமைச்சர் அவர்கள் முடிவு எடுப்பார்கள். பப்ளிக் வொர்க்ஸ் டிபார்ட்மெண்டில் இம்மாதிரி நடந்துகொண்டிருக்கிறது. இம்மாதிரி இருந்தால் ஜனநாயகத்தை எப்படி பாதுகாக்க முடியும்? எதிர்க்கட்சிகள் ஒத்துழைப்பு வேண்டுமென்று சொல்லுகிறார்களே? இப்படி நிலைமை இருந்தால் எப்படி எதிர்க்கட்சிகள் ஒத்துழைக்க முடியும்? அவர்கள் தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்யத் தூண்டினார்களா, அல்லது ஏதாவது நாசவேலைக்கு தூண்டினார்களா? அப்படி ஏதாவது இருந்தால் குற்றச்சாட்டைக் கொண்டுவாருங்கள். எந்தவிதமான விசாரணைக்கும் நாங்கள் தயார். தமிழ்நாடு தொழிற் சங்கத்தைப் பொறுத்தவரையில் 2½ லட்சம் தொழிலாளிகள் அதில் இருக்கிறார்கள். அதனுடைய பிரதிநிதித்துவத்திற்கு என்ன முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார்கள். உணவுப் பிரச்னைக்கு ஒரு கமிட்டி போடவேண்டுமென்று அமைச்சர் அவர்கள் கேட்டார்கள். எங்கள் கட்சி சார்பாக ஸ்ரீ என். கே. பழனிசுவாமியை சேர்த்துக்கொள்ளலாமா என்று கேட்டார். நான் சபையின் அங்கத்தினர்களை மட்டும் கொண்ட ஒரு கமிட்டி அமைக்கப் போகிறார்கள் என்று கருதி சரி என்று சொன்னேன். கமிட்டி அங்கத்தினர்களுடைய லிஸ்டு வந்தபிறகு பார்த்தால் ஸ்டேட் டிரேடிங்குக்கு விரோதமாக இருக்கக்கூடியவர்கள்கூட கமிட்டியில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது வெளியிலிருந்தும் சில பேர்களை சேர்த்துக் கொள்ளலாம். உணவுப் பிரச்னையில் மிக அக்கறை உடையவர்கள் விவசாயிகள், தொழிலாளிகள். தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகளை சேர்த்துக்கொள்ளக்கூடாதா? ஐ.என்.டி.யு.ஸி. யின் பிரதிநிதியை சேர்த்துக் கொள்ளுவதில் எனக்கு ஆட்சேபனையில்லை. அல்லது ஏ.ஐ.டி.யு. ஸி.யின் பிரதிநிதியையும் சேர்த்துக்கொள்ளட்டும். இம்மாதிரிபெரியதொழிற்சங்க ஸ்தாபனங்களை புறக்கணித்துவிட்டு உணவுப் பிரச்னையை தீர்ப்பதற்கு எப்படி நடவடிக்கை எடுக்க முடியும்? உண்மையாகவே இதில் சர்க்காருக்கு அக்கறை இருக்குமானால், இம்மாதிரி முக்கியமான விஷயங்களில் தொழிற் சங்கங்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டும். இன்னும் இரண்டு விஷயங்களைப்பற்றி பேசி முடித்துக்கொள்ளுகிறேன்.

Mr. SPEAKER: I have given an allowance of five minutes for interruptions. Let the hon. Member finish his speech in two minutes.

Sri M. KALYANASUNDARAM: சர்க்கார் நடத்தக்கூடிய தொழிலாக இருந்தாலும் சரி, அதை நாம் திறமையாக நடத்தவேண்டும். அதற்கு நாம் ஊக்கம் அளிக்கவேண்டும். பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்கள் வியாபாரமாக இருந்தாலும் சரி தொழிலாக இருந்தாலும் சரி, தனியார் ஆதிக்கம் இருக்கக்கூடாது, சர்க்காருடைய ஆதிக்கம்தான் இருக்கவேண்டும் என்று தினந்தோறும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால், நம்முடைய அமைச்சர்கள் எடுத்திருக்கக்கூடிய நடவடிக்கைகளில் சர்க்கார் ஆதிக்கம் ஒழுங்கான முறையில் இருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். விதைப் பண்ணைகளைப் பற்றி எஸ்டிமேட் கமிட்டி சொல்லியிருக்கக்கூடிய யோசனைகள், அவர்கள் செய்திருக்கக்கூடிய பரிசீலனைகள், ஓரளவுக்கு இம்மாதிரி சர்க்காருடைய இலாகா போய்க்கொண்டிருந்தால், அது எவ்வளவு அபாயகரமாக இருக்கும் என்பதை எடுத்துக்காட்டுகின்றன. சர்க்கார் நடத்தக்

13th March 1959] [Sri M. Kalyanasundaram]

கூடிய தொழிலே மக்கள் சிறுமைப்படுத்தக்கூடிய நிலே எற்படக்கூடாது. விதைப்பண்ணைகளுக்கு நிலம் வாங்கிய முறை, குத்தகைக்கு எடுத்துக் கொண்ட முறை, இவ்வளவு நஷ்டம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன என்பதையெல்லாம்பற்றி தனியாக ஒரு விசாரணை நடத்தி, தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதை நான் மிகவும் வலியுறுத்திக் கூறுகிறேன். அப்பொழுது தான் மந்திரிகள் பேரில் ஒருவித தவறும் இல்லை என்பது புலனுகும். சில மந்திரிகள், எம்.எல்.ஏ. க்கள் இவர்கள் சம்பந்தப்பட்டவர்களுடைய நிலம் வாங்கப்பட்டிருக்கிறது, குத்தகைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது, எடுத்த பிறகு கைவிடப்பட்டிருக்கிறது என்பது பற்றி மக்கள் பேசிக்கொள்ளுகிறுர்கள். சர்க்கார் இதைக் கவனிக்கவேண்டும். வாங்கிய முறை, குத்தகைக்கு எடுத்த முறை, நிர்வகித்த முறை, மேலும் என்னென்ன குறைபாடுகள் இருந்தன என்பதைப் பற்றியெல்லாம் பரிசீலனை செய்து ஒரு அறிக்கை வெளியிடவேண்டும். அப்பொழுது தான் எல்லோருக்கும் திருப்தி ஏற்படும். இனி சர்க்கார் எடுக்கக்கூடிய துறையில் சர்க்கார் திறமையாக நடத்த முடியும் என்ற முடிவுக்கு வரலாம். இது சர்க்காரின் பொறுப்பு என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

9-40 a.m.

இறுதியாக ஒரு வார்த்தைச் சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். மந்திரிகள் தங்களுடைய நிர்வாக அதிகாரத்தை ஆளும் கட்சியினர்களுக்குச் சாதகமாகவும், எதிர்க்கட்சியினர்ருக்குப் பாதகமாகவும் உபயோகிக்கும் போக்கை நிறுத்தவேண்டுமென்று அவர்களை வற்புறுத்துக் கேட்டுக்கொள்ளுகிறேன். நான் இதற்கு பல உதாரணங்களைக் கொடுக்க முடியும். சில உதாரணங்களைக் கொடுத்திருக்கிறேன். எல்லா இலாகாக்களின் நிர்வாகமும் நியாயமான முறையில் நடக்கவேண்டும். அப்பொழுது தான் எதிர்க்கட்சிகளின் ஒத்துழைப்பு இருக்க முடியும். ஜனநாயகத்தில் நம்பிக்கை பிறக்கும். அப்பொழுதுதான் மந்திரிகள் அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்கிறுர்கள் என்ற குற்றச்சாட்டிற்கு ஆளாகாமல் இருக்கலாம். எதிர்கட்சிகள் எப்படியிருக்கவேண்டும், ஆளும் கட்சிகள் எப்படியிருக்கவேண்டும், எதிர்கட்சியைச் சேர்ந்தவர்கள் எப்படி பேசவேண்டும், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் எப்படி பேசவேண்டும் என்பதைப்பற்றியெல்லாம் ஒரு பொதுவான முடிவுக்கு வருவதற்கு அதைப் பற்றி ஆலோசிப்பதற்கு நாங்கள் தயாராக இருக்கிறோம். அதேபோன்று தான் பொதுமக்களின் பிரதிநிதிகளாக இருக்கின்ற அங்கத்தினர்கள், அதே போன்று பொதுமக்களின் பிரதிநிதிகளாக வந்து இங்கே மந்திரிகளாக இருப்பவர்கள் எந்த முறையில் நடந்து கொள்ளவேண்டும் என்பதைப்பற்றியும் பேசுவதற்கும் நாங்கள் தயாராக இருக்கின்றோம். மற்றவர்களுக்கு எல்லாம் "கோட் ஆப் டிஸிப்ளின்" வேண்டும் என்று சொல்லுகின்ற போது மந்திரிகளுக்கு "கோட் ஆப் டிஸிப்ளின்" எவ்விதமாக இருக்கவேண்டும் என்பதைப்பற்றியும் ஆலோசனை செய்து பேசி ஒரு முடிவு எடுப்பதற்கு நாங்கள் தயாராக இருக்கிறோம், அதே போன்று மந்திரிகள் தயாராக இருக்கின்றார்களா என்பதை கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI N. MAHALINGAM: கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சரவை, சர்க்கார் பிரதம காரியாலயம், தேர்தல் இவைகள் சம்பந்தப்பட்ட மான்யத்தின் மீது, அதை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நம்முடைய ராஜ்யத்திலுள்ள அமைச்சரவை மிகவும் சிறப்பாகவும் நல்ல முறையிலும் நடந்து வருகின்றது என்பதைக்குறித்து யாருக்கும் அபிப்பிராய பேதம் இருக்க முடியாது. பல்வேறு மாகாணங்களில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் சட்டசபை நடவடிக்கைகளையும் அமைச்சரவையில் நடந்து கொண்டிருக்கும் மாறுதல்களையும் நாம் பத்திரிகைகளில் பார்த்துக்கொண்டிருக்கிறோம். அவைகளிலிருந்து நம்முடைய மந்திரிசபை மிகவும் நல்ல முறையில் நடந்து கொண்டிருப்பது தெளிவாகும். அதே போல் நமது மாகாணம் மிகவும் ஒழுங்காகவும், திறமையாகவும்,

[Sri N. Mahalingam] [13th March 1959

ராஜ்ய நிர்வாகம் செம்மையாகவும் நடந்து வருகின்றது என்பதை நாம் காண்கின்றோம். அதைக்குறித்து நாமும் மிக மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைகின்றோம். நம்முடைய அமைச்சரவையில் மிக குறுகிய எண்ணிக்கையிருந்தாலும் அவர்களுடைய காரியமானது மிக திறமையாகவும் செம்மையாகவும் நடந்து வருகின்றது என்பதை குறிப்பிட விரும்புகிறேன். இப்போது முனிசிபல் தேர்தல்கள் நடந்து கொண்டிருக்கின்றன. இந்த தேர்தல் விஷயமாக ஒரு புதிய முறை அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது. அந்த முறை முனிசிபல் தேர்தல்களில் உபயோகிக்கப்பட்டு வருகின்றது. அதாவது வாக்குச்சீட்டுகளை எடுத்து அதில் இருக்கும் அடையாளத்தின்நேரே குறியிட்டு அவற்றை கொண்டுவந்து தேர்தல் அதிகாரியின் முன்னிலையில் இருக்கும் பெட்டியில் போட வேண்டும் என்பது இப்போதுள்ள புதிய முறை. இதன் மூலம் வாக்குச்சீட்டுகளை வெளியே கொண்டு வர முடியாது என்பதை நாம் உணர்ந்துதான் இந்த முறை கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டோம். இப்போது அகில இந்திய ரீதியில் பொது தேர்தல் நடக்கும் போதும், இந்த முறையை அனுஷ்டிக்கலாம் என்பதை தேர்தல் கமிஷன் ஒத்துக்கொண்டிருக்கிறது. இந்த முறையில் நாம் அனுஷ்டித்த முறையை அகில இந்திய ரீதியில் அகில இந்திய பொது தேர்தல்களிலும் கையாளலாம் என்று கமிஷன் ஒத்துக்கொண்டிருக்கிறது என்றால் நம்முடைய ராஜ்ய நிர்வாகத்தின் திறமை எவ்வளவு தூரம் இருக்கின்றது என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடியும். இது போன்ற பல விஷயங்களில் நம்முடைய ராஜ்யம் அனுஷ்டிக்கப்படுகின்ற முறை, கொள்கை, இவைகள் தான் இதர ராஜ்யங்களிலும் பின்பற்றப்பட்டு வருகின்றன என்பதை நாம் பார்க்கின்றோம். மத்திய அரசாங்கமும்கூட சென்னை ராஜ்யத்தில் ஏற்படக்கூடிய பல புதிய முறைகளை பார்த்து அவைகள் எல்லாம் நல்ல முறையில் இருக்கின்றன என்று சொல்லியிருக்கிறார்கள். சமீபத்தில் சென்னைக்கு வந்த மத்திய சர்க்கார் மந்திரிகள் பலர் நாம் புதிதாக ஏற்படுத்தியிருக்கும் கிண்டி தொழில் எஸ்டேட் போன்ற ஸ்தாபனங்களை எல்லாம் பார்த்துவிட்டு சென்னை மாகாணம் இதர மாகாணங்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். தொழில் கல்வித்துறைகளை எடுத்துக்கொண்டாலும் நம் மாகாணம் மற்ற மாகாணங்களை எல்லாம் விட முன்னேறியிருக்கிறது என்பதற்கு சந்தேகமில்லை. இதே போன்று கல்வித்துறையை எடுத்துக்கொண்டால், அரசியலில் மாணவர்கள் கலந்து கொள்ளக்கூடாது என்பது சம்பந்தமாகவும், நமது ராஜ்யத்தில் இருக்கக்கூடிய அரசியல் கட்சிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து கல்வித்துறையில் இருக்கக்கூடிய மாணவர்களை அரசியலில் இழுக்கக்கூடாது என்ற முறையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அது ஓரளவுக்கு வெற்றியும் பெற்றிருக்கிறது. இதில் ஒரு கட்சி மாத்திரம் தனது சம்மதத்தை தெரிவிக்கவில்லை என்று தெரிகிறது. அந்த கட்சியும் தனது சம்மதத்தை தெரிவித்துவிட்டால் கூடிய சீக்கிரம் இந்த ஏற்பாடு நல்ல முறையில் நடைபெறும், இதோடு இதைப் பார்த்து மற்ற மாகாணத்திலுள்ளவர்களும் இந்த முறையை கடைபிடிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. இவ்வாறு பல முறைகளிலும் நம்முடைய ராஜ்யம் இதர மாகாணங்களுக்கு எல்லாம் வழிகாட்டியாக இருக்கிறது. ஆனால் இதில் இப்போது இருக்கின்ற அமைச்சர்கள் தங்களுடைய திறமைக்கு மேலாக தங்கள் மீது அதிகமான சுமையை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். முக்கியமாக நிதி அமைச்சரை எடுத்துக்கொண்டாலும் சரி, விவசாய அமைச்சரை எடுத்துக்கொண்டாலும் சரி, தொழில் அமைச்சரை எடுத்துக்கொண்டாலும் சரி, அவர்களுக்கு எல்லாம் இப்போது அதிகமாக பொறுப்புகள் பெருகி கொண்டே வருகின்றன. நாளுக்கு நாள் இலாகாக்கள் எல்லாம் பெருகிக் கொண்டே வருகின்றன. மக்களுடைய தேவை பெருகப்பெருக அதன் காரணமாக பொறுப்புகளும் அரசாங்கத்தில் பெருகிக்கொண்டேயிருக்கிறது. இதன் காரணமாக அமைச்சர்கள் தங்களுடைய பொறுப்புகளை எல்லாம் சரியாக நிறைவேற்ற முடியாத அளவுக்கு பெருகிவிடுமோ என்று ஐயப்படுகின்றேன். ஆகவே இப்போது இருக்கின்ற அமைச்சரவையை விஸ்தரிப்பது நல்லது என்பது என் கருத்து. சில இலாகாக்கள், முக்கியமாக கூட்டுறவு, கல்வி, விவசாயம் போன்ற இலாகாக்கள் எல்லாம் இன்னும்

13th March 1959] [Sri N. Mahalingam]

சரியான முறையில் இயங்கவேண்டும் என்ருல், மற்ற மாகாணங்களுக்கு எல்லாம் நாம் இந்த விஷயத்தில் வழிகாட்டியாக இருக்கவேண்டுமென் ருல் இவைகளை எல்லாம் பிரித்து, விஸ்தரித்து இதற்கு என்று தனித்தனி அமைச்சர்கள் ஏற்படுத்திஞல் மிகவும் நல்ல முறையில் இயங்க முடியும். ஆகவே இதற்காக இன்னும் கூடுதலாக மூன்று அமைச்சர்களை நியமிப்ப-திஞல் பெரிய தவறு ஒன்றும் ஏற்பட்டு விடாது. இதனுல் அதிகமான செலவுகள் ஒன்றும் ஏற்பட்டு விடப்போவதில்லை என்பதையும் இந்த சமயத்தில் குறிப்பிட விரும்புகிறேன். கூட்டுறவு முறையில் எல்லா தொழில்களையும் விஸ்தரிக்கவேண்டும் என்று முயற்சி செய்து கொண டிருக்கின்ற இந்த சமயத்தில், விவசாயங்கள் எல்லாம் கூட்டுறவு முறையில் நடைபெறவேண்டும் என்று முயற்சி செய்யக்கூடிய காலத்தில் இந்த துறைகளில் எல்லாம் வேலைகள் அதிகமாகி கொண்டிருக்கின்றன என்பதை யாரும் ஒத்துக்கொள்வார்கள். அதோடு அமைச்சரவை யின் பொறுப்பும் இந்த சமயத்தில் அதிகமாகிக்கொண்டுதான் இருக்கும். ஆகவே அமைச்சரவையை விஸ்தரிப்பது நல்லது என்று நான் கருது கிறேன். இன்னும் பல பிரச்னைகளைப்பற்றி கனம் திருச்சி அங்கத்தினர் அவர்கள் குறிப்பிட்டார்கள். வாழ்க்கைத்தரம் உயருவதற்கு இடையூருக இருக்கும் பல கஷ்டங்களைப்பற்றியும், விலைவாசி ஏறியிருப்பதைப்பற்றியும் குறிப்பிட்டு இதற்காக அமைச்சரவை என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்றும், அதற்காக என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என் பதைப் பற்றியும் குறிப்பிட்டார்கள். இப்போது எங்கு பார்த்தாலும் ஒரு சில குறிப்பிட்ட துறையில் இருப்பவர்களுக்கு மட்டும் போதிய அளவு சௌகரியங்கள் கிடைக்கின்றன. அவர்கள் பல விதத்திலும் கூட்டு சேர்ந் திருப்பதிஞல் அவர்கள் பல சௌகரியங்களையும் அனுபவித்து வருகிருர்கள். இதரர்களுக்கு அவ்விதமான சௌகரியங்கள் ஒன்றும் கிடைப்பதில்லை. இன்றையதினம் தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் தொழிலாளர்களோ அல்லது சர்க்கார் உத்தியோகஸ்தர்களோ அல்லது இதுபோன்ற மற்ற தொழிலாளர்களோ வேலை நிறுத்தம் செய்யப்போவதாக மிரட்டுவதிஞலும் மற்ற விதத்திலும் பலவிதமான சலுகைகளை பெறுகிருர்கள். ஆனுல் விவசாயத் துறையை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கு இன்றைக்கு குறைந்தபட்சக் கூலி எந்த அளவில் கிடைத்துவருகின்றது என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அவர்களுக்கு போதுமான அளவில் இன்று கூலி கிடைப்பதில்லை. இன்றைக்கு சர்க்கார் துறைகளிலும் மற்ற துறைகளி லும் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு கிடைக்கக்கூடிய கூலி மிகவும் குறைவாக இருக்கிறது. மற்ற துறைகளில் இருக்கக்கூடியவர்கள் எல் லாம் குறிப்பிட்ட அளவுக்கு அதாவது 8 மணி நேரம் 10 மணி நேரம் என்று வேலை செய்து அதற்கு தகுந்த கூலி பெறுகின்றுர்கள். ஆனுல் விவசாயத் தொழிலாளியோ அதிக நேரம் வேலை செய்தும் குறைவான கூலி தான் பெறுகின்றுன். இவ்விதம் எல்லாத் தொழிலாளிகளும் ஒரே நிலையில் இல்லாத நிலை இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இந்த தொழில்துறையில் ஈடுபட்டு இருக்கும் எல்லாத் தொழிலாளர்களுக்கும் அவர்கள் மாகாண சர்க்காரில் இருந்தாலும் சரி, மத்திய சர்க்காரில் இருந்தாலும் சரி, அவர்கள் செய்யக்கூடிய வேலைக்குத்தகுந்தபடி ஊதியம் கிடைக்கின்ற முறையில் ஒரு கொள்கையை அரசாங்கம் கொண்டு வரவேண் டும். அந்த அடிப்படையில் தொழிலாளர்களுக்கு ஊதியம் கொடுத்தால் தான் அவர்கள் எல்லோரும் நன்மை பெற முடியும். திடீரென்று உணவு விலையை நிர்ணயித்து வியாபாரிகள் எல்லாம் குறிப்பிட்ட விலைக்குத்தான் தான்யங்களை வாங்க வேண்டும் என்று உத்தரவை கொண்டு வந்தார்கள். ஆனுல் வியாபாரிகளுக்கு யார் தான்யங்கள் கொடுப்பார்கள். சமீபத்தில் தான் கேரளத்தில் விலையை கட்டுப்படுத்தியிருக் கிருர்கள். ஆனுல் இவ்விதம் தான்யங்களின் விலையை கட்டுப்படுத்துவதி ஞல் மட்டும் இந்தப் பிரச்னை தீர்ந்து விடும் என்று எண்ண முடியாது. இதற்கு அடிப்படையாக ஒரு கொள்கையை வகுத்து அதற்கு தகுந்தபடி நடவடிக்கை எடுக்கவேண்டும். சில தொழில்களில் அதிகமான லாபம் கிடைக்கின்றது என்பதற்காக அந்த தொழிலில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு அதிகமான போனஸ் முதலியவை கொடுக்கப்

படுகின்றது. இந்தமாதிரி அதிகமான லாபம் கிடைக்கின்றது என்கின்ற காரணத்திற்காக போனஸ் முதலியவைகளை கொடுத்துக்கொண்டிருந்தால் மற்ற தொழிலில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் சரியான முறையில் தங்கள் தொழிலில் ஈடுபட மாட்டார்கள். வேண்டுமென்றால் அதிகமான லாபம் கிடைக்கும் தொழிலில் அதிகமான வரிகளை போடலாம். அதல்லாமல் சில குறிப்பிட்ட துறைகளில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளர்களுக்கு அதிகமான லாபம், போனஸ் முதலியவை கொடுத்துக்கொண்டிருந்தால், மற்றத் தொழில்களில் ஈடுபட்டிருக்கின்றவர்களுக்கு ஊக்கம் குறைந்துவிடும் என்பதை குறிப்பிட விரும்புகிறேன். அமெரிக்காவிலே இது போன்று எந்தத் தொழிலாவது மிக அதிக அளவு லாபம் அடைகிறது என்றால் அந்தத் துறையிலே தயாரிக்கப்படக் கூடிய பொருள்களை உபயோகிப்பவர்களுக்கு, அதிலே பொருள்களின் விலை அதிகமாக இருக்கிறது என்று கருதினால் அதற்காகத் தனியாக சர்க்கார் சில ஸ்தாபனங்களை வைத்திருக்கிறார்கள். மொனுபலிஸ்ட்டிக் கண்ட்ரோல் ஸ்தாபனங்கள் வைத்து அந்த சாமான்களின் விலையைக் குறைக்க ஏற்பாடு செய்கிறார்கள். இப்போது புதிதாக இண்டஸ்ட்ரியல் என்ஜினீயரிங்கில் விலை, உற்பத்தி சம்பந்தமாக இப்போது ஆராய்ச்சி செய்து அதில் முற்போக்கு அடைந்திருக்கிறோம். காஸ்ட் அக்கவுண்ட்ண்ட்ஸ், காஸ்ட் கன்ஸல்டண்ட்ஸ் இவைகளில் தனியாக மிகச் சிறந்த நிபுணர்கள் இருக்கிறார்கள். சர்க்கார் அவர்களுடைய ஸ்டாடிஸ்டிக்ஸ் டிபார்ட்மெண்டில் அவர்களை நியமித்து, தொழில் துறையில், லாபம் வரக் கூடிய இடங்களில் விலையைக் குறைத்து மக்களுக்கு நன்மை செய்ய முடியுமா என்று பரிசீலிக்க வேண்டியது அரசாங்கத்தின் முக்கிய கடமை என்று இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

ஆக, நம்முடைய அரசாங்கம் மிகத் திறமையாகவும் சிறப்பாகவும் நடந்து வந்தாலும் தொழில் துறையில் முன்னேற்றம் அடைய அடைய, எந்தெந்த அளவுக்கு உலக நாடுகளில் ஆராய்ச்சி நடக்கிறதோ அந்தந்த அளவுக்கு நம்முடைய நாட்டில் தொழில்களை ஊக்குவித்து பாதுகாப்புக் கொடுக்கவேண்டுமென்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

நாளுக்கு நாள் புதிதாகத் தொழில் துறையில் செய்யக் கூடிய சாமான்களை உபயோகப்படுத்துபவர்கள் அதிக விலை காரணமாக கஷ்டப்பட்டுக் கொண்டு இருந்து வருகிறார்கள். இதைத் தவிர்க்க அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு இந்த மான்யத்தை ஆதரிக்கிறேன்.

* SRI M. JAGANNATHAN : Sir, in opposing the Demand for the Head of State, Ministers, and Headquarters Staff, and the Demand for Elections, let me say a few words. Sir, speaking first about the Head of State (the Governor) I like to say that there is a growing feeling in our State that the office of the Governor is proving itself to be a white elephant. The expenditure that is incurred on account of the Governor and his Household is enormous. The amount is simply staggering in the context of a poor, under-developed country like ours. The pomp and paraphernalia which always go with the office of the Governor are most unreasonable and unjustifiable, and we cannot allow anybody, much less the Head of State, to go about seignorial pursuits. Hon. Members here might feel that I am speaking against the high salary drawn by His Excellency the Governor of Madras. Far from it, I for one feel that the salary drawn by the Governor is not very much. It is not a big sum. If we look at the budget estimate for the year 1959-60, we will see that the amount put down there for the salary of the Governor is about Rs. 59,000. That is not a big sum. It is calculated, Sir, that when deductions are made for the

13th March 1959] [Sri M. Jagannathan]

purpose of income-tax, surcharge, and super-tax, the balance left over for the Governor towards his salary is almost negligible. About Rs. 3,000 he gets as his salary. This is a sum which is much less than what a judge of the High Court gets. He gets about Rs. 4,000 or more. The salary of the Governor is not much. Therefore, I am not speaking against the salary of the Governor as such, but when we look at the other items of expenditure incurred on account of the Governor and his household, we will see that the amount runs to about Rs. 6,00,000. That is a very big sum indeed, and it should not be tolerated. If I were to say that the Hon. the Finance Minister should stint, save and economize on the various items of expenditure incurred on behalf of the Governor, he will immediately jump up and say, "How dare you suggest that I should reduce the sumptuary allowance of the Governor, or I should reduce the expenditure incurred on account of his flower gardens, or on account of purchasing beautiful portraits and pictures to be hung on the walls of the palace of the Governor?" Therefore, I do not want to suggest the items on which the Hon. the Finance Minister must come forward to stint, save and economize. I leave it to his good sense. That will put an end to the argument between him and me. And we will save time also. Therefore, I feel that the Government must come forward to effect economy in the expenditure that they have allowed for the Governor and his household. Especially, when the Government are committed to a policy of introducing the socialistic pattern of society, there is all the more the necessity for the Government to come forward to implement their policy in action. It is more than 12 years since we attained Independence, and fancy, Sir, that there are hundreds of villages in our State without the ordinary elementary necessities of life, like drinking water wells, roads and pathways. The Hon. the Finance Minister might come forward and say "On considerations of finance, we have not been able to provide these amenities". But at the same time, when we look at the other side of the picture, we see enormous sums of money are being wasted, as it were, on these items. Therefore, it is high time that the Government came forward to establish some sort of relevancy between the words they speak and the deeds they do. They talk about socialism on the one hand, and on the other they do things which do not justify what they talk. So, if, in real life, the Independence that we have attained should percolate down to the underdogs of society, it is high time that the Government came forward to somehow stint and save on these items of expenditure and divert these funds towards the provision of elementary necessities of life to the millions of masses who live in our villages.

Sir, I would like to say a word about the Ministers. I have no doubt in my mind that the Ministers, almost every one of them is the 'beau' ideal of a Minister. At least they think themselves to be so. But look at the work that they are doing. (The Hon. Sri R. Venkataraman : Are we Don Juans also?) They are doing substantial and good work no doubt. But, unfortunately, there is a lurking suspicion in my mind that they are not—I mean—equal to

[Sri M. Jagannathan] [13th March 1959

the task, not in the sense that they are incapable of doing their work but that they are overworked. Their work is so much that they are not able to do full justice to their work. We have been looking here, when the debate is going on, Minister after Minister comes to the Assembly with a heavy load of files. They go on working on their files without paying any heed whatsoever to the debates that are going on here. That is an insult to the members here and as such I think, Sir, it is high time that they did not practise this method of going through their files here. This only shows that either they are trying to put up a show that they are turning out more work or the other reason might be that they are really overworked. If they are really overworked, what is the reason for it? Why should there be such an amount of work thrust upon the Ministers, and why should they be asked to overwork in season and out of season?. Except for the Hon. the Chief Minister, we see all the other Ministers coming to the House with head-loads of files. They go on looking through these files without listening to the speeches made by hon. Members. In the year 1952, I was a Member in the previous Assembly, during the days of the Rajaji Ministry. He had about 15 Ministers in his Cabinet. Work was not so heavy in those days and every Minister came to the Assembly, listened to the speeches made by the hon. Members very keenly and with rapt attention. They did their best to acquit themselves creditably of their office. But, here, because the Hon. the Chief Minister has taken it into his head that he will restrict his Cabinet to a strength of 8 only, we have the present situation. I cannot simply understand the virtue about this number ' eight '.

10 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : I would recommend to the hon. Member that he might read **'Parkinson's Law'**. That will gave him some idea about this matter.

* SRI M. JAGANNATHAN : I hope the Hon. Minister will purchase a copy of that book at his cost and give it to me.

MR. SPEAKER : I think that book is available in the Library. Evidently, the hon. Member has not read the book.

SRI M. JAGANNATHAN : I hope the Hon. Minister will undertake to purchase that book at his cost and present it to me.

THE HON. SRI C. SUBRAMANIAM : It will be available in the library.

* SRI M. JAGANNATHAN : That may be available. I do not deny that. But, I would like the Hon. the Minister for Finance to purchase that book and make a gift of it to me.

Proceeding further, I would like to say that if the Hon. Ministers are to be overworked like this, it will result in a sort of inefficiency and their control over the various departments working under them will be reduced to nothing. So, the efficiency of the administration will go to dogs. Therefore, from that point of view at least, I would earnestly appeal to the Hon. the Chief Minister to somehow see to it and increase the number of Ministers in the cabinet.

Now, I would like to touch upon another matter which is not less important. The Madras Public Service Commission, as we all know, is doing very excellent work. It is autonomous body, an independent body. It is always said that it rises above considerations of politics or any other, in the matter of recruitment of candidates to the various departments and to the various posts. I do not know why under this being Government, more and more posts are being taken away from the purview of the Madras Public Service Commission and brought under the control of the Government themselves. When the Ministers are confronted with the question as to why they are doing this, they immediately come forward and say, " No, no, it is all done in the interests of efficiency. Moreover, it is the Government alone who are more suitable to judge whether a particular post requires a particular technical skill or knowledge on the apart of the applying candidates." Sir, the Madras Public Service Commission is a body which is supposed to know what is best and to assess the various merits and capacities of the candidates who appear before it for recruitment to various posts. For instance, take the post of District Publicity Officer. The other day, the Hon. Finance Minister, during the question-hour in this House, said that the District Publicity Officer's post is a post which requires a particular technical skill or some technical aptitude which the Government alone are capable of deciding and not the Madras Public Service Commission. That is an argument which does not hold water. That is an argument which is very undesirable Because if we allow the Government to grab more and more powers from the Service Commission and if they were to have power to recruit candidates according to their whims and fancies, I am afraid it will lead to what is called nepotism and favouritism. That will result in a sort of demoralization of our public life and official life as such. In their own interest, the Government should come forward to put an end to this evil practice of arrogating to themselves, the power of making recruitments which were under the purview of the Madras Public Service Commission.

The other point which I would like to touch upon is the question of corruption, as we all know, is flourishing rampant in our State. It is so at all levels, particularly in the official level and higher levels. It is really difficult for the Members on this side to come forward and substantiate with facts and figures as to the particular person who took bribery or the particular time when bribery was given and so on. It is very difficult indeed. At the same time, the Government cannot simply dismiss these allegations coming mostly from Members of the Opposition and also from the Members of the Congress Party about the flourishing of corruption. They cannot simply dismiss these allegations with a shrug of their shoulders, 'So long as there is a giver of the bribe, you cannot find fault with the taker of the bribe.' That has been the attitude of the Hon the Minister for Finance whenever he was speaking about the question of corruption. Believe it or not, at all levels, this evil of corruption is flourishing and is rampant. So, it is the bounden duty

of the Government to see to it that this corruption is put an end to in all walks of life. For this purpose, they must create a machinery and empower that machinery to go about finding out instances of corruption and Government must themselves immediately bring to justice the offenders concerned without delay. Otherwise, there will be demoralization of our public life and the country will not be able to make any headway towards progress.

Sir, lastly, I must say a word about elections. The maintenance of the electoral rolls is not very satisfactory. There are factual errors, there are clerical errors and there are so many other errors. These defects must be rectified in the interests of the conduct of fair election. I hope the Government will take note of these suggestions of mine and try to rectify the defects as early as possible. Thank you, Sir.

* **Sri T. V. SANNASI** : சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தை நான் மனப்பூர்வமாக வணக்கத்தோடு வரவேற்கிறேன். கவர்னர் பதவியானதும், அவர் சம்பந்தமாக ஒதுக்கப்படுகிற தொகையும் மிகவும் முக்கியமானதா, அல்லவா என்ற குரல் நாட்டிலே மக்களிடத்திலே இல்லாதுபோனாலும், ஒரு சிலரால் கிளப்பப்பட்டு வருகிற ஒலி இருந்துதான் வருகிறது. சாதாரணமாக, இந்தச் சபைக்கு ஓர் அதிபராகவும் சபைக்குத் தந்தையாகவும் ஓர் சபாநாயகர் இருக்க வேண்டியது எவ்வளவு அவசியமோ அதேபோன்று இந்த ராஜ்யத்திற்கு ஒரு கவர்னர் இருக்கவேண்டியது மிக மிக அத்தியாவசியம் என்பதை சிறிதேனும் சிந்தித்துப் பார்ப்பவர்களுக்கு ஒத்துக்கொள்ளவேண்டிய நிலை ஏற்படுகிறது. கவர்னருக்கு ஒதுக்குகிற தொகையானது அதிகப்படியாக இருக்கிறதே, கொஞ்சம் குறைத்துக் கொண்டால் என்ன என்ற அபிப்பிராயமும் இருந்துதான் வருகிறது. ஆனால், தமிழகத்திலே சிறந்த பண்பு என்னவென்றால் விருந்தோம்பல் என்ற பண்பு தான். தமிழருக்குச் இது சிறந்த பண்பு ஆகும். இதனை எத்தனையோ தடவைகள் அமைச்சர் அவர்களும் மற்றும் அறிவாளிகளும் கூறியுள்ளார்கள். கவர்னருக்கு ஒதுக்குகிற தொகை பூராவும் அவர் வீட்டுக்கு அனுப்பிவிடப் போவதில்லை. அவர் பதவிக்காலம் தீர்ந்தவுடனே அவர் எடுத்துக்கொண்டு போகவும் இல்லை. ஆனால், இந்தத் தொகையை அவர் வீட்டிலிருந்து இங்கு கொண்டுவந்து செலவு பண்ணவும் இல்லை என்று கருத்தைப் பலர் சொல்லியிருக்கிறார்கள். தமிழகத்திற்கு எத்தனையோ நாடுகளிலிருந்து உயர்ந்த பண்புள்ள பிரதிநிதிகள், வெளிநாட்டு விருந்தினர்களாக வருகிறார்கள் என்றால் அவர்களை ஆதரித்த பெருமை கவர்னருக்கு அல்ல ; இந்த ராஜ்யத்திலுள்ள மக்களுக்கே உரியதாகும்.

இது யாரும் சுலபமாக புரிந்துக்கொள்ளக்கூடியது தான். இது புரியாமல் இருக்க முடியாது. இதைப் பற்றி சொல்ல வேண்டிய அவசியம் என்ன வென்றால் அரசியல் சட்ட மூலம் அவருக்கு நிதி ஒதுக்கப்படுகிறது. ஆளும் கட்சியைச் சேர்ந்தவர் என்று இல்லை. எந்த கட்சியைச் சேர்ந்தவரும் அல்ல. ஜனநாயகம் என்ற ரீதியில் பார்த்தால் அவரும் மக்களுக்கு பணியாற்றுகிறவராகத்தான் இருக்கிறார். மன்னர் என்ற நிலையில் இல்லை. இதை யாரும் ஒப்புக்கொண்டு தான் ஆக வேண்டும். இந்த நிலையில் கவர்னருக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகையானது ராஜ்யப் பெருமையை முன்னிட்டு இன்னும் போதாது என்று சொன்னால் கூட அதை நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன். மந்திரிகளுடைய சம்பளமும் அவ்வாறு தான். இந்நாட்டில் நமது ராஜ்யத்திலுள்ள நிர்வாகத் திறமையும், அந்த நிர்வாகத்தைச் செய்கின்ற மந்திரிகளுடைய அறிவின் திறமையும் மற்ற மாகாணங்கள் போற்றக்கூடிய அளவில் தான் இருந்து கொண்டிருக்கிறது. மூன்று கோடி மக்களுக்கு அதிகமாக உள்ள நமது ராஜ்யத்தில் எட்டு மந்திரிகள் தான் இருக்கிறார்கள் என்றாலும் எவ்வளவோ திறமையாக பணியாற்றி வருகிறார்கள். இந்த நிலைமையில் அவர்களுடைய

13th March 1959] [Sri T. V. Sannasi]

அறிவாற்றலையும் திறமையையும் பாராட்டக் கூடிய நிலைமையில்தான் நாம் இருக்கிறோம். மந்திரிகள் தங்களுடைய சம்பளத்தை இன்னும் அதிகப்படுத்திக்கொண்டாலும் பரவாயில்லை. குறைத்துக்கொண்டாலும் அதை மறுக்கப்போவதில்லை. அல்லது சம்பளமே வேண்டாம் என்று சொன்னாலும்கூட அது அவர்கள் வசதியைப்பொறுத்து வரவேற்கத் தகுந்ததுதான். இந்த நிலைமையில் இந்த மானியம் மிக மிக அவசியம்தான்.

பணியாளர்களுடைய குறைகளை சொல்லித்தான் ஆக வேண்டியதாக இருக்கிறது. நிர்வாக அலுவலகங்களில் இருக்கக்கூடிய பணியாளர்கள் வருவாய் போதாத நிலையில் இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் அது வாஸ்தவம் தான். இந்த நிலைமையில் அவர்களால் ஓரளவு வாழ்க்கைக்கான வசதிகளையும் செய்து கொள்ள முடியாமல் இருக்கிறார்கள். மற்ற வகைகளில் வருவாயைத் தேடிக்கொண்டு அவர்களுக்கு அதிகப்படியாகக் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது.

மந்திரிகளுடைய சுற்றுப்பிரயாணத்தில் பிற்போக்கான இடங்கள் முக்கியத்துவம் பெற வேண்டும். நமது ராஜ்யத்தில் பஸ் போகாத இடங்களும், கார்கள் போகாத இடங்களும், நல்ல வாழ்க்கையை கண்டறியாத இடங்களும் பஞ்சத்தில் அடிப்பட்ட வரண்ட பிரதேசங்களும் இருக்கின்றன. அங்கேயெல்லாம் மந்திரிகள் செல்ல வேண்டும். உதாரணமாகச் சொல்லுகிறேன். சில இடங்களில் போலீஸ்காரர்களையே தெரியாதவர்கள் இருக்கிறார்கள். வெளியூர்களுக்கு ரயிலில் பிரயாணம் செய்யாத மக்களும் நமது ராஜ்யத்தில் பல இடங்களில் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட இடங்களுக்கு எல்லா மந்திரிகளும் செல்ல வேண்டும். இப்பொழுது அங்குள்ளவர்கள் எல்லாம் என்ன சொல்லுகிறார்கள் என்றால் மந்திரிகள் பணக்காரர்களும், எம்.எல்.ஏ-க்களும் எம்.எல்.சி.-க்களும் எங்கு இருக்கிறார்களோ அங்குதான் செல்லுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அதற்கு இடம் கொடுக்காமல் பிற்போக்கான இடங்களுக்கும் மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதனால் நல்லபலனுண்டு.

(Sri V. K. Kothandaraman in the Chair.)

மந்திரி சபையில் இப்பொழுது எட்டுப்பேர்கள் இருப்பதை இன்னும் அதிமாக ஆக்கிக்கொண்டாலும் எங்களுக்குச் சந்தோஷம் தான். மந்திரிகளை அதிகப்படுத்தா விட்டாலும் அவர்களுக்கு இருக்கக்கூடிய இலாக்காக்களை குறைத்துக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால்தான் இன்னும் திறமையாக நல்ல முறையில் திறம்படப் பணியாற்ற முடியும். இப்பொழுது மந்திரிகளின் பேரில் சில குறைபாடுகள் சொல்லப்படுகிறது. அதற்கு ஒரு காரணம் சொல்லலாம். சட்டசபை மெம்பர்கள் தங்கியுள்ள ஹாஸ்டலில் படும் வசதியற்ற அவதி அதிகமாக இருக்கிறது. அவர்களுக்கு வேண்டிய வசதிகள் கவனிக்கப்படாமலும் இருக்கிறது. இவ்வளவு வசதியற்ற நிலைமையிலும் அவர்கள் மக்களுக்கு பணியாற்றுவதில் மிக்க கவனம் செலுத்தி வருகிறார்கள். அவர்களுக்கு இன்னும் அதிகப்படியான வசதிகளைச் செய்து கொடுக்கலாம். சட்டசபை மெம்பர்கள் தான் மக்களுடைய பிரதிநிதிகள். இந்த ராஜ்யத்தில் அமைச்சும், அமைச்சுக்கு மேல் கவர்னரும் இருக்கிறார்கள் என்றால் அவர்கள் யாருடைய அடிப்படையில் இருக்கிறார்கள். பாமர தன்மையுடைய மக்களுடைய அடிப்படையில் இருக்கிறார்கள். மக்களுடைய அடிப்படையில் தான் ராஜ்யம், சட்டசபை, அமைச்சு, கவர்னர் எல்லாம் இருக்கின்றன. மக்களை திருத்தி மக்களுக்கு நல்வாழ்வை அளிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்தான் ஜனநாயக சர்க்கார் ஏற்பட்டுள்ளது. நாட்டின் அடிப்படையான அந்த மக்களுக்கு நேரிடைத் தொடர்புள்ள பிரதிநிதிகள் சட்டசபை அங்கத்தினர்கள். இப்படிப்பட்ட பிரதிநிதிகளுடைய சௌகர்யத்தை கவனிக்க வேண்டும். இதைக் கவனிக்காமல் மந்திரிகளுக்கும் கவர்னர் அவர்களுக்கும் அதிகப்படியான வசதிகளைக் கொடுத்து வருவதால்தான் இப்படிப்பட்ட குறைகள் கூறப்பட்டு வருகிறதோ! என்று தோன்றுகிறது. இதனால்தான் மெம்பர்கள் குற்றம் சொல்லுகிறார்களோ என்னவோ? இதுதான் காரணமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

[Sri T. V. Sannasi] [13th March 1959

கவர்னருக்கும் மந்திரிகளுக்கும் அதிகப்படியான வசதிகள் இருக்க வேண்டும். அதன் மூலம் எல்லோருக்கும் பெருமை தரும், நம் நாட்டின் பெருமையாகும். இது எதிர் கட்சியிலுள்ள தமிழகத் தலைவர்களுக்குத் தெரியாமல் இல்லை. ஒரு கட்சித் தலைவர் முன்னே உட்கார்ந்திருக்கிறார். அவருக்குப் பின்னால் அந்த கட்சி அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். பின்னால் இருப்பவர்களில் எவ்வளவோ ஆற்றலும் அறிவும் படைத்தவர்கள் இருக்கலாம், அதாவது அவர்களுடைய தலைவரைக் காட்டிலும், பணம் படைத்தவர்களும் இருக்கலாம், அதிகப்படியான செல்வாக்குப் படைத்தவர்களும் இருக்கலாம். ஆனால், அசெம்பளியில் மற்ற மெம்பர்கள் பேசுவதற்கு ஐந்து நிமிஷங்கள் என்றால் எதிர் கட்சி தலைவருக்கு ஒரு மணி அல்லது ஒன்றரை மணி நேரம் பேசுவதற்கு அனுமதி கொடுக்கப்படுகிறது. அது எதைக் காட்டுகிறது. அது எதிர்க்கட்சிகளுக்கு அளிக்கும் பெருமையைக் காட்டுகிறது. பின்னால் இருக்கிறவர்கள் ஆறடி உயரம் ஆஜானுபாகுவாய்த் தோற்றமளிக்கும் ஆற்றல் படைத்தவர்களாக இருந்தாலும் கூட, குள்ளமானாலும் முன்னால் இருக்கக்கூடிய தலைவருக்குத்தான் அதிகப்படியான பெருமை கொடுக்கப்படுகிறது. இதுவும் அக்கட்சிக்கு அளிக்கும் பெருமையாகும். அந்தப் பெருமை தனித்த முறையில் தலைவருக்கல்ல. தான் சார்ந்த கட்சிக்குத் தான் உரியதாகும். அதைப் போலவே, கவர்னர்களுக்கும், மந்திரிகளுக்கும் நாம் கௌரவம் கொடுத்தால் அந்தப் பெருமையும் கௌரவமும் இந்த ராஜ்யத்திலுள்ள மக்களைச் சார்ந்ததுதான். அப்படிப்பட்ட மக்களுடைய அடிப்படை தொடர்புடையவர்கள்தான் அவர்களுடைய பிரதிநிதிகள், அதாவது சட்டசபை மெம்பர்கள். ஆகவே இப்படிப்பட்ட சட்டசபை அங்கத்தினர்களுக்கு அதிகப்படியான வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அப்படிப்பட்ட வசதிகளையும் செய்துகொடுக்க வேண்டுமாய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க வேண்டும் என்று சொல்லும்போது பங்களா வாங்கிக் கொடுக்கச் சொல்லவில்லை. இருபதாயிரம் அல்லது 22 ஆயிரம் போட்டு கார் வாங்கிக் கொடுக்கச் சொல்லவில்லை. அங்கத்தினர்களில் பணம் படைத்தவர்களும் இருக்கிறார்கள் பணம் இல்லாதவர்களும் இருக்கிறார்கள். ஒவ்வொரு கட்சியிலும் நாட்டிற்கு பணியாற்றி வருகிறவர்கள் இருக்கிறார்கள். கட்சி பேதம் இல்லாமல் நான் எல்லா கட்சியினருடனும் பழகி வருவதால் தான் என்னிடம் மனம் விட்டு எல்லாவற்றையும் சொல்லுகிறார்கள். அதனால் தான் நான் சொல்லுகிறேன். கட்சிகளில் நல்ல ஊழியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய தொகுதி மக்களிடம் அணுகி குறை களைய வேண்டுமென்றால் அவர்களுக்கு வேண்டிய வசதிகள் கிடையாது. அதனால் அவர்கள் போக முடியவில்லை. அவர்களுக்கு வேண்டிய வசதி இல்லையென்றால் நாட்டிற்கு நன்மை அல்ல. சர்க்கார் போடும் திட்டங்கள் எல்லாம் திட்ட அளவிலேயே இருக்குமே தவிர அது மக்களிடத்தில் போவதாகவே இருக்காது. அதனால் மக்கள் பயனடைய முடியாத நிலை ஏற்படும். அரசாங்கத்திற்கும் பெருமை இல்லை. இது எல்லோரும் அறிந்த விஷயம். புதியது அல்ல. மெம்பர்கள் தத்தம் தொகுதியில் பல ஊர்களுக்குப் போவதாக இருந்தால் ப்ளஷர் கார் இல்லாமல் போக முடியாது. சில ஊர்களுக்கு போகவே முடியவில்லை. அப்படி போவதாக இருந்தால் விஞ்ஞான முறையில் போனால் தான் உண்டு. மற்றும் தொகுதிகளில் பிரயாணம் செய்வதாக இருந்தால் எவ்வளவு செலவாகிறது. நாட்டின் நலத்தைக் கருதி, மக்களுக்கு பணி செய்யும் ஊழியர்கள்தான் நாம் என்ற மனப்பான்மையுள்ள சட்டசபை மெம்பர்களுக்கு தேவைக்கான வசதி அளிப்பது தேச மக்களுக்கும் குறிப்பாக தேசத்திற்கும் நல்லது என்று சொல்லிக் கொள்ளுகிறேன்.

தொகுதி மக்களைத் தினசரி போய்ப் பார்க்கக்கூடிய வசதி தேவை. (குறுக்கீடு :—வசதி என்றால் என்ன வசதி ?) வெளிப்படையாகச் சொல்லப்போனால் பணத்தைத் தவிர வேறு எந்த வகையில் வசதி செய்துகொள்ள முடியும் ? இதைப் புரிந்து கொள்ளாதவர்கள்

யாரும் இல்லே. இதில் உள்ள பயங்கரமான சங்கடம் என்னவென்றல், பணத்திற்காக மக்கள் நலத்திற்கு உழைப்பதாகக் கூறுவார்களே என்று பயம்தான். மற்றும், ஓட்டு குறைந்து விடுமே என்ற பயத்தைத் தவிர வேறு ஒன்றும் இல்லே. இந்தப் பண வசதி வேண்டுமென்ற எண்ணம் அவ்வசதியற்ற எல்லோருக்கும் இருக்கிறது. இருந்துதான் ஆக வேண்டும். ஆகையால், இந்த வசதியை கட்சிபேதமின்றி எல்லா ஊழியர் களுக்கும் செய்து கொடுக்க வேண்டும். எம்.எல்.ஏ. என்றல் மக்களுக்கு எஜமான் என்று எண்ணக்கூடிய நிலே இருக்கக்கூடாது. எம்.எல்.ஏ. என்றல் மக்கள் நலத்திற்குப் பணிபுரியும் ஊழியர்கள் என்றுதான் பொருட்கொள்ளவேண்டும். இந்நிலே இல்லாமையாற்றன் மானம், ரோஷம் இருக்கிறவன் எம்.எல்.ஏ. வாக வரவேண்டும் என்று நினைக்க மாட்டான் என்ற நினைவை உண்டாக்குகிறது. மக்களிடத்தில் ஓட்டுக்குப் போகும்போது கொஞ்ச நஞ்ச கஷ்டத்தையா அனுபவிக்க வேண்டி இருக் கிறது ? கொஞ்ச நஞ்ச பேச்சையா மக்கள் வாயிலிருந்து கேட்க வேண்டி யிருக்கிறது ? அதைப் பார்க்கும்போது அவ்வளவு இழிவான முறையில் இந்தப் பதவியை அடைய வேண்டுமா ? என்ற சந்தேகம் உண்டாகிவிடும். மேலே பார்த்து எச்சிலே உமிழ்ந்தால் மார்பிலே விழுமே என்பதை அறிந்து கொள்ளமுடியாத அறிவாளிகள் இதற்குத் துணையாக இருக்கிறர்கள். பதவி என்று ஒன்று இருக்கிறவரை, அதை அடையவேண்டுமென்ற எண் ணம் இருக்கிறவரை இந்தக் கஷ்டம் இருந்துகொண்டு தான் இருக்கும் என்ற எண்ணத்தை உண்டாக்குவதாயிருக்கிறது. வாக்காளர்களே அணுகி அவர்கள் வாழ்வின் நலத்திற்கான பணிபுரியும் வகையில் போதிய வசதி செய்து கொடுக்கும் திறனும், பொறுப்பும் அமைச்சர் அவை கையில்தான் இருக்கிறது. இதனை அகம் கொள்ளவேண்டும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI S. M. ANNAMALAI : சட்டமன்றத் தலேவர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கையின் மீது வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளேச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரை எனக்கு முன் பேசிய சட்ட மன்ற உறுப்பினர் சன்னசி அவர்கள் பேசியதுபோல் உண்மையிலேயே வருகின்ற விருந்தாளிகளே நல்ல முறையில் வரவேற்க முடியாது. நல்ல முறையில் நமக்கு வசதி இருந்தால்தானே விருந்தாளிகளே நல்ல முறையி யில் வரவேற்க முடியும். நாமே பட்டினியாக இருக்கும்போது விருந்தாளி களே எப்படி வரவேற்க முடியும். நாம் பல லட்சக் கணக்கான ரூபாயைக் கவர்னருக்குக் கொட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். இந்த கவர் னர் பதவி நம்முடைய மாகாணத்திற்குத் தேவையற்றது என்று நாம் கண்டிக்க வேண்டிய நிலேமையில் இருக்கிறோம். வெள்ளேக்காரர்கள் ஆளுகின்றபோது இப்படிப்பட்ட கவர்னர் பதவி தேவையில்லே என்று இப் பொழுது ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களாக இருப்பவர்கள் அப்போது பெரும் கூச்சல் போட்டார்கள். அந்தக் கவர்னர் பதவி இப்பொழுதும் தேவையில்லே என்று எதிர்க்கட்சிகாரர்கள் எல்லாம் சொல்லும்போது அவர்கள் அந்தக் கவர்னர் பதவி இப்பொழுது இருக்கும் நிலேமையில் தேவை என்று சொல்லுகிறர்கள். எந்த அர்த்தத்தில் அவ்வாறு சொல் லுகிறர்கள் என்று புரியவில்லே. இந்தக் கவர்னர் சம்பளத்தை உண்மை யில் நாம் பார்த்தோமானல்—ஒரு தனிப்பட்ட மனிதருக்கு, அதுவும் சாதாரண மனிதருக்கு, நம்மைப் போன்றுள்ள மனிதருக்கு, வெள்ளேயன் எந்த அளவுக்குச் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தானே அந்த அளவுக் குச் சம்பளம் நாமும் இந்தக் கவர்னருக்காகக் கொடுக்கவேண்டி இருக் கிறது. மேலும் அந்தக் கவர்னர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி யல்ல. மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்டவர். அப்படி மத்திய சர்க்கா ரால் நியமிக்கப்பட்டவருக்கு நம்முடைய பணத்தில் இருந்து பல லட்சம் ரூபாய் கொட்டித் தரவேண்டுமா ? மாற்றுக் கட்சியைச் சார்ந்துள்ள நாங்கள் இதை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

[Sri S. M. Annamalai] [13th March 1959

மந்திரிகள் சுற்றுப் பிரயாணம் செய்கிறார்கள். அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது பல இடங்களில் பேசுகிறார்கள். அவ்வாறு பேசும்போது

" யாகாவாராயினும் நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு "

என்ற வள்ளுவரின் குறளை நினைவிலிறுத்திக் கொள்ளாமல் பேசுகிறார்கள். ஒரு சட்டம் இயற்றுகிறோம் என்று சொன்னால் அந்தச் சட்டத்தைப் பற்றித் தாங்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது அறிவித்து விடுகிறார்கள். எந்தெந்தச் சட்டங்கள் வருகின்றன ? இந்தச் சட்டங்களை யெல்லாம் கொண்டு வரப் போகிறோம் என்று சொல்லி பணக்காரர்களையும், மிராசுதார்களையும் உஷார்ப்படுத்தி விடுகிறார்கள். ரெவின்யூ அமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும் போது இந்த உச்ச வரம்பைப் பற்றிக்கூறும் போது 100 எக்கருக்கு மேல் தான் வரும் என்று ஜாடையாகப் பேசி இருக்கிறார். முதலமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யும்போது கூட " இந்தச் சட்டத்தைக் கண்டு மிராசுதார்கள் பயப்படவேண்டாம். பயப்பட வேண்டிய அவசியமே இல்லை " என்று திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறார்கள். இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையில் கூட " நாம் எதிர் பார்த்த அளவு விவசாய வருமான வரி கிடைக்கவில்லை " என்று கூறப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன ? " சட்டம் வரப் போகிறது, எல்லோரும் உஷாராக இருங்கள் " என்று மந்திரிகள் முன்கூட்டியே எச்சரிக்கை செய்துவிடுகிறார்கள். ஆகையால் சட்டம் கொண்டு வரப்பட்டு நிறைவேற்றுவதற்குள் மிராசுதார்கள் தங்கள் நிலங்களைப் பிரித்து எழுதி வைத்துவிடுகிறார்கள். அதன் காரணமாக சர்க்கார் எதிர்பார்த்த அளவுக்கு விவசாய வருமான வரி கிடைக்கவில்லை. அதைப்போலவே "சோஷலிஸ்ட் பாட்டர்ன் " என்று சொல்லிக் கொண்டு உச்சவரம்பு கட்டப் போகிறோம் என்று சொல்லிக்கொண்டு காலதாமதம் செய்து வருவதோடு மட்டுமல்லாமல் இவ்வளவு எக்கருக்கு உச்சவரம்பு ' கட்டப் போகிறோம் என்பதைப் பற்றியும் ஜாடைமாடையாகச் சொல்லுகிறார்கள். ஆகவே, இது போல் சட்டம் வருகிறது என்று முன்னாலேயே சொல்லி, பணக்காரர்களுக்கும், மிராசுதார்களுக்கும் ஆதரவாக இருக்காமல் மக்களைப் பாதிக்காத அளவுக்கு இந்தச் சட்டங்களை யெல்லாம் அவசரச் சட்டமாகக் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, இந்தச் சட்டமன்றத்திலே பலவித கோரிக்கைகளை உறுப்பினர்கள் சொல்லுகிறார்கள். சென்ற ஆண்டு பட்ஜட் விவாதத்தின் போது என்னென்ன கோரிக்கைகளைச் சொன்னார்களோ அந்தக் கோரிக்கைகள் எல்லாம் இதுவரை கவனிக்கப்படவில்லை. அதற்கு முக்கிய காரணம் சட்ட மன்ற உறுப்பினர்கள் இந்த மன்றத்தில் விவாதங்களில் கலந்துகொண்டு பேசும்போது ஓரிரு அமைச்சர்கள் மட்டுமே உட்கார்ந்திருப்பதுதான். மந்திரிகள் அவர்களுடைய அறைகளிலே உட்கார்ந்துகொண்டே இங்கு பேசப்படுவதை யெல்லாம் கவனிக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படி அமைச்சர்கள் அனைவரும் உறுப்பினர்கள் சொல்லும் குறைபாடுகளைக் கவனிப்பார்களேயானால் சென்ற ஆண்டு விவாதத்தின் போது சுட்டிக்காட்டிய குறைகளை இந்த ஆண்டும் சொல்ல வேண்டிய அவசியம் இராது. அங்கத்தினர்கள் பலரும் சென்ற ஆண்டு பட்ஜெட் விவாதத்தின்போது குறிப்பிட்ட பல குறைகளை எடுத்து இந்த ஆண்டும் கூறினார்கள். அந்தக் குறைபாடுகள் கவனிக்கப்படாமையால் இந்த ஆண்டிலும் எடுத்துக்கூற வேண்டிய நிலைமை இருக்கிறது. ஆகவே, சட்ட மன்ற உறுப்பினர்கள் எடுத்துக் காட்டிய குறைகளைக் களைய இன்னின்ன நடவடிக்கைகளை எடுத்திருக்கிறோம் என்று உறுப்பினர்களுக்குத் தெரியப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அமைச்சர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது சில இடங்களில் கல்நாட்டு விழாக்கள் செய்கிறார்கள். இப்படி இவர்கள் கல்நாட்டு விழா செய்துள்ள இடங்களில் அந்தக் கட்டிடம் பூர்த்தியானதா என்று பார்க்கும்போது பல இடங்களில் கட்டிடங்கள் கட்டப்படவில்லை என்ற விவரம்

13th March 1959] [Sri S. M. Annamalai]

தெரிகிறது. என்னுடைய தொகுதியைச் சேர்ந்த சந்தவாசல் பிர்க்காவி லுள்ள கேளூர் என்ற கிராமத்தில் மராமத்து அமைச்சர் அவர்கள் வந்து ஒரு பள்ளிக்கூடத்திற்காகக் கல்நாட்டு விழா செய்தார்கள். ஏறத்தாழ $1\frac{1}{2}$ ஆண்டுக் காலம் ஆகியும் கூட அந்தக் கட்டிடம் அங்கே கட்டப்பட வில்லை. காரணம் என்னவென்று கேட்டதற்கு கலெக்டர் அவர்கள் கட்டக்கூடாது என்று உத்தரவு போட்டு விட்டார்கள் என்று சொன்னார்கள். இது அமைச்சர் அவர்களே வந்து கல்நாட்டு செய்த இடம் என்று சொல்லி யும்கூட கட்டக்கூடாது என்று கூறிவிட்டார்கள். ஏதோ மின்சார இலாகா வினர் ஆட்சேபனை செய்கிறார்கள் என்ற காரணத்திற்காக அந்தக் கட்டிடம் கட்டக்கூடாது என்று ரத்து செய்யப்பட்டிருக்கிறது. இதை ஏன் சொல் கிறேன் என்றால் அமைச்சர் அவர்கள் சுற்றுப்பிரயாணம் செய்யலாம், ஆனால் அதன் காரணமாக அவர்களுடைய அலுவல்கள் தடைப்படாமல் நல்ல முறையில் நடக்கவேண்டும் என்பதுதான் என் வேண்டுகோள். முதல் அமைச்சர் வேண்டுமானால் சுற்றுப்பிரயாணம் செய்யலாம். அவர் இலாகாவின் பொறுப்புகள் அனைத்தையும் நிதி அமைச்சர் அவர்கள் கவனித்து வருகிறார்கள். ஆனால் மற்ற அமைச்சர்கள் சுற்றுப்பிரயாணம் செய்வதைச் சற்றுக் குறைத்துக் கொள்ள வேண்டும். காரணம் தொகுதி களில் உள்ள குறைபாடுகளைச் சுட்டிக் காட்டி அவற்றை நீக்கவேண்டுமென்று பல மனுக்களை நாங்கள் அனுப்பி வைக்கிறோம். கிட்டத்தட்ட நூற்றுக்கு மேற்பட்ட மனுக்கள் நான் அனுப்பியதற்கு ரெக்கார்டு வைத்திருக்கிறேன். ஆனால், இரண்டாண்டு காலம், மூன்றாண்டு காலம் ஆனாலும் கூட அதில் எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படுவ தாகத் தெரியவில்லை. இரண்டாண்டு கழித்து ஒரு தபால் வருகிறது என்றாலும் அந்தக் கடிதம் வந்து சேர்ந்தது என்கிற அக்னாலெட்ஜ்மெண்டு தான் வருகிறது. இன்னும் சிலவற்றில் ஒரு அமைச்சருக்கு அனுப்புவது, இன்னொரு அமைச்சருடைய இலாகாவுக்குப் போய்விடுகிறது. இதற்குப் பல உதாரணம் சொல்வேன். ஆனால் இந்தச் சபையில் சொல்ல விரும்ப வில்லை. ஆகவே இலாகா வேலைகளை அமைச்சர்கள் சரியான முறையில் கவனிக்கவேண்டுமே தவிர அடிக்கடி சுற்றுப் பிரயாணம் என்று போவது சரியில்லை என்பதை வற்புறுத்துகிறேன்.

10-30 a.m.

அடுத்தபடியாக தேர்தல் நடக்கிறது என்றால் நடக்கின்றதுபோது பணம் எங்கு பார்த்தாலும் தாண்டவமாடுகிறது. பணம் இப்படித் தாண்டவமாடு வதை லஞ்சம் கொடுப்பதை ஒழிக்க வேண்டுமென்ற அக்கறை இந்தச் சர்க்காருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. ஓட்டுக்குப் 10 ரூபாய் லஞ்சம் கொடுக்கப்படுகிறதே என்று ஸ்தலத்தில் உள்ள போலீஸ் அதிகாரிகளிடத் தில் சொன்னாலும் நாங்கள் பிராசிக்யூஷன் செய்வதற்கு சட்டம் கிடையாது. வேண்டுமானால் நீங்கள் வழக்குத் தொடர்ந்து கொள்ளுங்கள் என்கிறார் கள். இப்படிப்பட்ட காரியங்களுக்கு பஸ் முதலாளிகளும், மில் முத லாளிகளும் ஆதரவாகக் கூட இருக்கிறார்கள். தேர்தல் காலங்களில் இப் படி லஞ்சம் தாண்டவமாடுவதை ஒழித்தாகவேண்டும். மேலும் எவ்வளவு பெரிய தொகுதியாக இருந்தாலும் பணம் படைத்தவர்கள் வோட்டு வாங்கி விட முடியும். எங்களைப் போன்றவர்கள் ஏழைகள். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே தேர்தல் காலங்களில் அதிகமான இன்னல்களுக்கு ஆளா வதாக மதிப்பிற்குரிய என் நண்பர் சொன்னார் என்றால் நாங்கள் படும் இன்னல்கள் சொல்லவே முடியாது. அங்கங்கே பெரிய பெரிய தொகுதி களாக இல்லாமல் சிறிய சிறிய தொகுதிகளாக இருந்தால் தான் நாங்களும் சட்டமன்றத் தேர்தலில் நல்ல முறையில் ஈடுபட வாய்ப்பு இருக்கும். ஜன நாயகம் நல்ல வளர்ச்சி அடையும். அதன் காரணமாக தொகுதிகளை நல்ல முறையில் பிரிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

**SRI M. A. MUTHIA CHETTIAR :** தலைவர் அவர்களே, இந்த மானிய விவாதத்திலே நான் கலந்து கொள்வதன் அபிப்பிராயம்—இதர மானியங் களின் மீது பேசுவதற்குச் சந்தர்ப்பம் இல்லாதது தான். அதோடு இந்த மானியத்தின்மீது பேசும்போது அரசியலார் நடத்துகிற எந்த இலாகாவைப் பற்றி வேண்டுமானாலும் பேச உரிமை இருக்கிறது. பொதுவாக இப்போ

[Sri M. A. Muthia Chettiar] [13th March 1959

துள்ள அமைச்சரவை திறம்பட எல்லாக் காரியங்களேயும் செய்து வருகிருர்கள் என்பதில் சந்தேகமில்லே. அதைப்பற்றி பாராட்ட வேண்டும். இந்தச் சமயத்தில் நாங்கள் சொல்கிற சில விஷயங்களும் அவர்களுக்கு அதிக உற்சாகம் ஊட்டும் என்பதற்காகவே நான் பேச விரும்புகிறேன்.

இப்போது நம் ராஜ்யத்தில் 11 ஜில்லாக்கள் இருக்கின்றன. சில பல ஜில்லாக்கள் மிகவும் பெரிதாக இருக்கிறது. ஜில்லா அதிகாரிகளுக்கும் கம்யூனிடி வொர்க்ஸ், நாஷனல் டெவலெப்மெண்டு வொர்க்ஸ் என்று பல வேலேகள் அதிகமாகிவிட்டன. அவர்கள் வேலேயைத் திறம்படச் செய்வதற்கு ஜில்லாக்களேப் பிரிப்பது அவசியமாகிறது. அதற்காக ஒரு கமிட்டியை ஏற்படுத்திஞர்கள். அந்தக் கமிட்டியின் சிபார்சுகளே இப்போது ஆலோசனே செய்து ஒரு முடிவுக்கு வரப்போவதாகத் தெரிகிறது. அதுவும் கோயம் பத்தூர் ஜில்லாவை கோயம்பத்தூர், ஈரோடு என்று பிரிக்கப் போவதாகத் தெரிகிறது. அது நல்ல ஏற்பாடு. அதுபோல நாங்களும் பல காலமாக புதுக்கோட்டையை ஒரு தனி ஜில்லாவாகச் செய்ய வேண்டுமென்று கேட்டு வருகிருேம். ராமநாதபுரம் ஜில்லா மிகப் பெரிதாக இருக்கிறது. அதில் சில தாலுக்காக்கள், திருச்சியில் உள்ள சில தாலுக்காக்கள் இவைகளேச் சேர்த்து புதுக்கோட்டையை தனி ஜில்லாவாக ஏற்படுத்த வேண்டும். காரணம் புதுக்கோட்டையில் எல்லாவிதமான வசதியும் இருக்கிறது. அவை இன்றைக்கு வீணுகப் போகின்றது. உடனடியாக அதைத் தனி ஜில்லா வாகச் செய்தால் எல்லாவற்றையும் நன்கு உபயோகப்படுத்திக்கொள்ள முடியும். என்னேக் கேட்டால் கன்யாகுமரி, நீலகிரி, சென்னே இந்த மூன்றைத்தவிர பாக்கியுள்ள எட்டு ஜில்லாக்களேயுமே இரண்டு இரண்டாக 16 ஜில்லாக்களாக்கிவிட்டால் கூட வேலே திறம்பட நடக்க முடியும். அது அவர்கள் சௌகரியம். புதுக்கோட்டையைப் பொறுத்தவரையில் காலதாமதம் செய்யாமல் உடனடியாகத் தனி ஜில்லாவாகச் செய்யவேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

இன்னெரு விஷயம். இப்போது பல அங்கத்தினர்களும், மந்திரிகளும் விலேவாசிகளேப் பற்றியும், டி. ஏ. யைப்பற்றியும் புள்ளி விவரங்கள் கொடுத்திருக்கிருர்கள். என்.ஜி.ஓ. க்களுக்கு இப்போது 5 ரூபாய் கொடுத்திருக்கிருர்கள். இது போதாது. விலேவாசி கூடுதலுக்கு ஏற்றபடி இப்போது நான்கில் மூன்று பங்கு டி.ஏ. எம்பிளாயர் கொடுக்கவேண்டும், ஒரு பங்கு எம்பளாயி போட்டுக்கொள்வது, என்பதைப்பற்றி தொழில் மந்திரி வெங்கட்ராமனும் கூடச் சொன்னுர்கள். என்னேப் பொறுத்தவரையில் டி.ஏ. கொடுப்பது என்கிற காலம் மாறிவிட்டது. இனி பத்து பதினைந்து வருஷங்களுக்குள் விலேவாசி குறையும் என்று சொல்ல முடியாது. அன்றைக்கு "பே" குறைந்து இருந்தது. டி. ஏ. கொடுத்தோம். இப்போது நாம் இன்றைக்கு இருக்கக் கூடிய புள்ளிவிவரங்களே எடுத்துக்கொண்டு உத்தியோகஸ்தர்களுக்கு சம்பளத்தையே "பேசிக் பே" யை உயர்த்திவிட்டு டி. ஏ. கொடுப்பது என்பதையே நிறுத்திவிட்டால் நன்ருக இருக்கும். நாம் மாத்திரம் அப்படி செய்வதில்லே. மத்திய அரசாங்கமும், இதர ராஜ்ய அரசாங்கமும், தனியார் ஸ்தாபனங்களிலுமே அப்படிச் செய்துவிடுவதற்கு நம் அரசாங்கம் முயற்சி செய்தால் நன்ருக இருக்கும். இது என் அபிப்பிராயம். அடிக்கடி இந்தப் பிரச்சனே இல்லாமல் இருப்பதற்கு இது உதவியாக இருக்கும். இன்னும் ஒரு வருஷத்திற்குள் இப்படி பேசிக் பே" யை எல்லாருக்கும் இப்போதுள்ள நிலேமைக்கு ஏற்றபடி உயர்த்தி டி.ஏ. இல்லாதபடி செய்துவிடுவதற்கு நமது அரசாங்கம் முயற்சி செய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

மின்சார எலக்ட்ரிஸிடி பட்ஜெட் தணிக்கை செய்து வருகிறது என்று சொல்லுகிருர்கள். மின்சார சப்ளே நம் ராஜ்யத்தில் நல்லமுறையில் நடைபெறுவதைப்பற்றி சந்தோஷம் கொள்ளலாம். எவ்வளவோ முயற்சிகள் இந்த இலாகாவினர் செய்துவருகிருர்கள். மின்சாரம் பிற்பட்ட பகுதிகளிலே கிராம மக்களுக்கு ஏற்பாடு செய்து நல்லமுறையில் நடந்து வருகிறது. இன்னும் அதிகமான வசதி கிராம மக்களுக்கு ஏற்பாடு செய்கிருர்கள் என்று நம்புகிறேன். கம்யூனிடி டெவலெப்மெண்ட் ப்ராஜக்ட்,

13th March 1959] [Sri M. A. Muthia Chettiar]

என்.ஈ.எஸ். ஸ்கீம்-ஐப்பற்றி நான் முன்பே சொல்லியிருக்கிறேன். பிற்போக்கான பகுதிகளுக்கு சீக்கிரமாக எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். நான் குறையாகவும் சொல்லவில்லை. பெருமைக்காகவும் சொல்லவில்லை. முக்கியமாக பிற்போக்கான பகுதிகளைத் தள்ளிவிடக்கூடாது. என்.ஈ.எஸ். பிளாக் போட்ட இடத்தில் கம்யூனிடி ப்ராஜக்ட் ஸ்கீம் போய்கொண்டிருக்கிறது. என்.இ.எஸ். ஸ்கீம் வராத இடங்கள் அனேகமாக இருக்கின்றன. 60, 67 இடங்களில் என்.இ.எஸ். பிளாக்குகள் போடுவதாக சொல்லுகிறார்கள். இப்போது வரப்போகும் செலக்ஷனிலே பிற்போக்கான பகுதிகளை செலக்ஷன் செய்வார்கள் என்று நம்புகிறேன். உணவு இலாக்கா மந்திரி அவர்கள் எவ்வளவு திறம்பட நடந்துவருகிறார்கள் என்று சொல்லத் தேவையில்லை. அவர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியின் காரணமாக உணவின் விலை குறைந்து வருகிறது. ஆந்திர அரசாங்கமும், சென்னை அரசாங்கமும் இந்த இரண்டு அரசாங்கமுமே ப்ரொக்யூர்மெண்ட் பண்ணி அனுப்புகிறோம் என்று மத்திய அரசாங்கத்திடம் சொல்லிவிட வேண்டும். மத்திய சர்க்கார் உணவு இலாக்கா ஒரு வார் பாலிஸி மாதிரி நடவடிக்கை எடுத்துக்கொண்டு கேரளாவிற்கு உணவு அனுப்புவதற்கு ஒத்துக்கொள்ளவேண்டும்.

எல்.எம்.எஸ். படிப்பை இப்போது எடுத்து விட்டார்கள். பொதுவாக மெடிகல் ஸ்கூல் ஆரம்பித்து, எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் பண்ணியவர்களுக்கு 5 வருஷ வைத்திய படிப்பு கொடுத்து அவர்களுக்கு எல்.எம்.பி. கோர்ஸை தாராளமாக முடிக்கலாம். அப்பொழுது அவர்களுக்கு பிழைப்பு கிடைத்து விடும். இல்லையென்றால் பி. ஏ. பாஸ் செய்தும் பிழைப்பு இல்லாமல் இருக்கும். மதுரை ஜில்லாவிலும், தஞ்சை ஜில்லாவிலும் ஒரு கல்லூரி ஆரம்பித்திருக்கிறார்கள். மற்ற இடங்களில் இல்லாவிட்டாலும், அங்கே மெடிகல் ஸ்கூல் ஆரம்பிக்கலாம். எல்.ஐ.எம்., ஜி.ஐ.எம். போன்ற பட்டம் பெற்ற டாக்டர்கள்கூட போகமாட்டேன் என்று சொல்லுகிறார்கள். நாட்டு வைத்தியம் பற்றி பொதுவாக இந்த மந்திரி சபையார் நடத்துவது பற்றி நான் திருப்தி அடைகிறேன். அவர்களுடைய முயற்சி கூடியவரை பல துறைகளில் வெற்றி அடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். கோதாவரி கிருஷ்ணா திட்டத்தைப் பற்றி கனம் அமைச்சர் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை.

நமது அரசாங்கம் ஸோனல் கவுன்சிலில் பேசி சீக்கிரமாக நல்ல முடிவுக்கு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். நமது என்ஜினீயர்களும் திட்டத்தைத் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் இருக்கும்போதே செய்ய வேண்டும்.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** கனம் அங்கத்தினர் சொன்னார்கள் எல்.ஐ.எம். ஜி.சி.எம். என்று சொன்னார்கள். இது எல்.ஐ.எம்., ஜி.ஐ.எம். அல்ல. இது எல்.ஐ.எம்.

**Sri M. A. MUTHIA CHETTIAR :** அவர்கள் கூட கிராமத்திற்கு போவது கிடையாது என்று சொல்ல விரும்புகிறேன். எம்.பி.பி.எஸ். படித்தவர்களை நம்பிக் கொண்டிருப்பதில் பிரயோஜனம் இல்லை. முப்பது வருஷங்களுக்கு முன் இருந்த நிலைமை வேறு இப்பொழுது இருக்கும் நிலைமை வேறு. இப்பொழுது காலம் மாறிக்கொண்டிருக்கிறது. அதற்குத் தக்கபடி நாம் ஏற்பாடு செய்யவேண்டும். நாம் காண்ட்ராக்டர்களிடம் கண்டிஷன் போட்டிருந்தாலும்கூட வேலை முடிவு பெறாமல் விட்டுவிட்டு செல்கிறார்கள். அப்படி சென்றால் டாமேஜ் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறார்கள். சில கிராமங்களில் கம்பவுண்டர்கூட வைத்திய வசதி செய்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் கூட இல்லாத கிராமங்கள் இருப்பதனால்தான் ஜில்லாக்களில் மெடிகல் ஸ்கூல் ஆரம்பிக்க வேண்டுமென்று திரும்பவும் கூறுகிறேன்.

இன்றைய நீர்ப்பாசனத்திட்டங்களுக்கு ஏராளமான பணம் செலவழித்துக் கொண்டிருக்கிறோம். காபிடலிலிருந்துதான் ஆரம்பிக்க வேண்டுமென்று இருக்கிறார்கள். அது 2,010 லட்சம் என்று இருக்க வேண்டிய அச்சுப்பிழையை வைத்துக் கொண்டிருக்கிறார்கள், என்று

நினைக்கிறேன். நிதி அமைச்சர் 210 லட்சம் என்று சொன்னார்கள். **கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்** நீர்ப்பாசனத்திற்கு 6 கோடி ரூபாய் ஒதுக்கி இருப்பதாகச் சொன்னார்கள். இரண்டொரு பெரிய திட்டங்கள் வளரும் என்று சொன்னார்கள். அதற்கு ஒரு கோடி இரண்டு கோடி ரூபாய் செல வாகும். டில்லிக்கு போய் சத்தம் போட்டால் சீக்கிரம் கிடைக்கும். அமைச்சர் அவர்கள் ஜில்லாவுக்குப் போகும்போது தொகுதி மெம்பர் கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். சட்டசபையில் அங்கத்தினர்கள் வற் புறுத்தி பேசியிருக்கிறார்கள் என்று சொல்லிக்கொள்ள முடியும். டில்லியில் உணவு டெவலெப்மெண்ட் கவுன்சிலில் அதைக்கட்டாயமாக சொல்லி முடிவு செய்ய வேண்டும். நமது பாராளுமன்ற உறுப் பினர்கள் முயற்சி செய்வார்கள் என்று நினைக்கிறேன்.

***Sri A. R. MARIMUTHU :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சட்டசபையிலே கொண்டு வரப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரேபணையை ஆத ரித்து ஒரு சில வார்த்தை சொல்ல விரும்புகிறேன். கனம் அமைச்சர் அவர்கள் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் சோஷியலிசத்தைத்தான் தங்களது கொள்கையாக ஏற்றுக்கொண்டு இருப்பதாக எடுத்துக்கூறினர். கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த நாட்டிலே பொருளாதார ஏற்றத் தாழ்வை குறைக்கவில்லை என்றால் நம்முடைய லட்சியம் முன்னேறாது என்று கூறியிருக்கிறார். பொருளாதார ஏற்றத்தாழ்வை அகற்ற வேண் டியதுதான் நம்முடைய கடமை. இன்றைக்கு நம்முடைய பொருளாதார ஏற்றத்தாழ்வை குறைக்கவில்லை என்றால் வருங்காலத்தில் பெரும் பொரு ளாதாரப் பிரச்னைகள் ஏற்படும். பொருளாதார ஏற்றத் தாழ்வை குறைக்க நாம் பல திட்டங்களை ஏற்க வேண்டும். சர்க்காரின் திட்டங்களைப் பார்க்கும் போது பொருளாதார ஏற்றத்தாழ்வை குறைப்பதற்கு எடுத்துக்கொண்ட நடவடிக்கை மிகக் குறைவானது. அதிக வருவாயைக் குறைக்கக்கூடிய காலத்தில் குறைந்த சம்பளத்தை அதிகரிக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் அதைத்தான் நாங்கள் வற்புறுத்தி வருகிறோம். அந்த மாதிரியான நிலைமை நாட்டில் ஏற்பட வேண்டுமானால், அதாவது ஸோஷலிஸம் நாட் டில் ஏற்பட வேண்டுமானால், அதிகப் பொருளாதார வசதி படைத்தவர்கள் பால் அதிக வரிபோட சர்க்கார் தயங்கக் கூடாது. சர்க்கார் அதற்குத் தயங்கினால் சமுதாயத்தில் கீழே உள்ளவர்களின் நிலையை உயர்த்த முடி யாது. அத்தகைய வரிகளைப் போட வேண்டுமானால் அதற்கு மக்கள் நம்முடன் ஒத்துழைக்க வேண்டும். மக்கள் நம்முடன் ஒத்துழைக்க வேண்டுமானால் மக்களுடைய எண்ணங்கள் அதற்குத் தகுந்தபடி இருக்க வேண்டும். நாம் சோஷலிச சமுதாயத்தை ஜனநாயக பூர்வமாக உருவாக்க விரும்புகிறோம். இதை நாம் ஜனநாயக பூர்வமாகச் செய்வதற்கு நமக்கு மக்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் தேவை. நமக்கு மக்களின் ஒத்துழைப்பும் ஆதரவும் இல்லாவிட்டால் நாம் இந்த லட்சியத்தில் தோல்வி காண நேரும். சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத் தாழ்வு நிச்சயம் குறைக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் மக்களுக்கு ஏற்பட வேண்டு மானால், அதிகச் சம்பளம் வாங்கும் அதிகாரிகளின் சம்பளங்களையாவது குறைக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும். இன்று கனம் மந்திரிகள் 1,500 ரூபாய் சம்பளம் வாங்குகிறார்கள். அதே சமயத்தில் 40, 50 ரூபாய் சம்பளம் வாங்கும் ஊழியர்களும் அரசாங்கத்தில் இருக் கிறார்கள். மக்கள் தங்கள் சம்பளத்தைக் குறைத்துக்கொண்டால், அது, ஸோஷலிஸ லட்சியத்தை அடைவதற்கான ஒத்துழைப்பை மக்களிடமிருந்து நாம் பெறுவதற்கு நிச்சயம் உதவும். இந்த விஷயத்தில் மக்களுக்கு எடுத்துக் காட்டாக மந்திரிசபை செயல்பட வேண்டும் என்று விரும்பு கிறேன். கவர்னரை எடுத்துக்கொள்வோம். கவர்னருக்கு 5,500 ரூபாய் சம்பளம் கொடுக்கப்படுகிறது. இந்த மாநிலத்திற்கு ஒரு கவர்னர் தானே இருக்கிறார்? எனவே இந்த 5,500 ரூபாயைக் குறைப்பதில் மீதம் அதிகம் ஏற்படுமா என்று கேட்கக்கூடும். ஆனால், இவ்வாறு குறைப்பது மக்களின் சிந்தனையை நமக்குச் சாதகமாகத் திருப்புவதற்கும், மக்களின் ஒத் துழைப்பைப் பெறுவதற்கும் பெரிதும் அடிகோலும் என்பதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஆகையால், அரசாங்கத்தில் இருக்கும் பெருந் தொகை

13th March 1959] [Sri A. R. Marimuthu]

சம்பளம் வாங்கும் மந்திரிகளே, அதிகாரிகளே, இவர்களுக்குஆயிரம்தத் ரூபாய்க்கு மேல் சம்பளம் இருக்கக்கூடாது என்ற நியதியை ஏற்படு வேண்டும். அந்த முறையில் சிந்தித்து நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

நாம் ஜனநாயக பூர்வமாக ஸோஷலிசத்தைக் கொண்டுவர வேண்டு மானல் மக்கள் சோஷலிஸத் தத்துவத்தை நன்கு புரிந்துகொண்டவர் களாக இருக்க வேண்டும் என்று நான் முன்பே குறிப்பிட்டேன். அதை மக்கள் சரியாகப் புரிந்துகொண்டிரா விட்டால் ஜனநாயகபூர்வமான மாற்றம் வெகுதூரம் தள்ளிப்போகும். இந்த சபையிலுள்ள மக்கள் பிரதி நிதிகள் அங்கத்தினர்கள் கூட, குறிப்பாக சர்க்கார் கட்சி அங்கத்தினர் கள் கூட, சோஷலிஸக் கொள்கையைப் பற்றிப் பேசும்போது வெவ்வேறு விதமான கருத்துக்களைத் தெரிவிக்கிருர்கள். தொழிலாளர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுத்தால் விலைவாசிகள் அதிகரிக்குமாதலால் தொழி லாளர்களின் சம்பளத்தைக் குறைக்க வேண்டும் என்று கூடச் சொல் கிருர்கள். எந்தக் கோளாறினல் இத்தகைய கருத்துக்கள் தெரிவிக்கப் படுகின்றன ? சோஷலிஸ லட்சியத்தை அணுக வேண்டிய முறை தெளி வாக்கப்படவில்லை. சோஷலிஸத்தை உருவாக்குவதற்குரிய ஆலோசனை களைச் செய்ய யார் யார் கூடியிருக்கிருர்களோ, யார் யார் இந்த சபையில் கூடியிருக்கிருர்களோ, அவர்களிடம் கருத்துத் தெளிவு உண்டாகவில்லை என்பதை இதிலிருந்து அறிய முடிகிறது. ஆகவே முதலில் சோஷலிஸ தத்துவத்தை அங்கத்தினர்கள் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஸோஷலிசம் என்ன வென்பதை தெளிவாக மக்களிடம் பரப்ப அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ப்ளாக் அபிவிருத்தித் திட்டங்கள் நடக்கும் இடங்களில் கிராமத், தலைவர்கள் பயிற்சி முகாம்கள் நடக்கின்றன. பல பயிற்சி முகாம்களில் நான் கலந்துகொண்டிருக்கிறேன். சோஷலிஸ லட்சியத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறதே, அதைப்பற்றி இந்த முகாம்களில் பயிற்சி யாளர்களுக்கு விளக்குவதற்கு உங்களிடம் திட்டம் இருக்கிறதா என்று அந்த முகாம்களில் அதிகாரிகளைக் கேட்டேன். அவர்கள் அதற்கான, திட்டம் எங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. எவ்வாறு சாகுபடி செய்வது எவ்வாறு குப்பை சேகரிப்பது என்றெல்லாம் பயிற்சியளிப்பதற்கான திட்டங்கள்தான் எங்களுக்கு சர்க்காரால் கொடுக்கப்பட்டிருக்கின்றனவே தவிர சோஷலிஸ தத்துவத்தைப்பற்றிப் போதிப்பதற்கான திட்டம் எங்களுக்குக் கொடுக்கப்படவில்லை என்று அவர்கள் கூறினுர்கள். சோஷலிஸ தத்துவத்தை நாட்டில் தெளிவாகப் பரப்ப அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

அரசாங்கத்தின் தொழில் கொள்கையை எடுத்துக்கொள்வோம். இதைப்பற்றி, நேற்று முன்பு பேசியபோதுகூட நான் குறிப்பிட்டேன். நமது முதலீடுகள் அதிகரிக்கப்பட வேண்டும், அதுவும் தொழில் துறையில் முதலீடுகள் அதிகரிக்கப்பட வேண்டும் என்று நான் சொன்னேன். 1955–56-ம் ஆண்டிலிருந்து 1959–60-ம் ஆண்டு வரையில் உள்ள ஐந்து ஆண்டுகளில் நமக்கு சுமார் 100 கோடி ரூபாய் அதிக ரெவின்யூ கிடைத்திருக் கிறது. மேலும் கடன்களாக 115 கோடி கிடைத்திருக்கிறது. இந்தப் பணத்தில் தொழில் அபிவிருத்திக்காக குறைவாகத்தான் முதலிட்டிருக்கிருர்கள். விலைவாசிகள் ஏறிக்கொண்டே போகும்போது " அன்ப்ரொடக்டிவ் காபிடல் " -ஆக-டெட் காபிடலாக—ஏராளமான பணம் போட்டிருக்கிருேம். எங்கே பார்த்தாலும் பல கட்டிடங்களைக் கட்டுவதற்கு பணம் செலவழிக் கிருேம். பணத்தை டெட் காபிடலாக முதலிடுவது விலைவாசி ஏற்றத்தில் கொண்டுபோய்விடாதா? டெட் காபிடலாக இவ்வளவு பணம் என் முதலீடு செய்ய வேண்டும் ? அதிகமான மூலதனத்தை உற்பத்தித் திட்டங்களில் போட வேண்டும்.

மேலும், இன்று நாட்டிலுள்ள பணக்காரர்கள் சர்க்காருடன் ஒத்துழைப்பதில்லை. ஏதாவது வரி போட்டால் தங்களுடைய வரிச் சுமை அதிகரிக்கிறது என்று அவர்கள் சொல்லுகிருர்கள், தாங்கள் மூலதனம் சேகரிப்பதற்கு சர்க்கார் சரியான வசதியை செய்துகொடுக்கவில்லை என்றும்

அவர்கள் சொல்கிருர்கள். இதைக் காரணமாகக் காட்டி அவர்களிடமுள்ள பணத்தை தேசத்திற்கு அவசியமான தொழில் துறையில் உபயோகிக்காமல் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த முயற்சிக்கின்ருர்கள். யாரிடத்தில் பணம் இருந்தாலும், அதை சர்க்கார் எடுத்துக்கொள்ள விரும்பாவிட்டாலும், அது சமுதாயத்திற்குச் சொந்தமானது. இவ்வாறு மார்க்ஸ் சொல்லியிருப்பது ஒரு புறம் இருக்கட்டும். இதே கருத்தை விநோபாஜி சொல்லியிருக்கிருர். பணக்காரர்கள் தங்கள் பணத்தை உற்பத்தித் திட்டங்களில் முதலிட்டால், சமூகத்தின் ஒத்துழைப்பு இல்லாமல் அவர்கள் எதையும் உற்பத்தி செய்யமுடியாது. அவர்களுடைய பணம் நல்ல முதலீடுகளாக ஆகி சமுதாயம் முழுவதற்கும் நன்கு பயன்படும்படி சர்க்கார் செய்ய வேண்டும். அதற்குரிய உரிமை சர்க்காருக்கு இருக்கிறது. நாம் தொழில்களை விரிவுபடுத்த வேண்டும். தொழில்களை தகுந்த முறையில் விரிவுபடுத்த வேண்டும். இப்போது ஒரு ஊரில் ஒரு அரிசி மில் இருந்தால் அரிசி மில்லையே வைக்க வேண்டும் என்று அந்த ஊரிலுள்ள பணக்காரர்கள் எல்லோரும் விரும்புகிருர்கள். ஒரு ஊரில் ஒரு சினிமாக் கொட்டகை இருந்தால் சினிமாக் கொட்டகையே வைக்க வேண்டும் என்று அந்த ஊரிலுள்ள பணக்காரர்கள் எல்லோரும் விரும்புகிருர்கள். ஆகையால் தேவையில்லாதவரையில் முதலீடு செய்யப்படுவது தடுக்கப்படவேண்டும். அதற்கான நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்க, வேண்டும். இதில் நாம் ஜனநாயகப் பூர்வமாக செயல்படும்போது பல தடங்கல்கள் இருக்கலாம். இன்னின்ன பிராந்தியங்களில் இன்னின்ன தொழில்களை வளர்க்க வேண்டும், இன்னின்ன தொழில்கள் போதுமான அளவில் இருக்கின்றன என்று முடிவு செய்து நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். பணக்காரர்களிடம் "இன்னின்ன தொழில்களில் மூலதனத்தைப் போடுங்கள்" என்று சொல்லலாம். அதற்கு யாரும் தயாராயில்லாவிட்டால் கார்ப்பொரேஷனை அமையுங்கள். சோஷலிஸ் குணம், முதலாளித்துவ குணம் என்று பல குணங்கள் மனிதர்களிடையே இருக்கின்றன. முதலாளிகளின் குணம் பணத்தை சும்மா வைத்திருக்காமல் இருப்பது முதலாளிகளால், பணத்தை சும்மா வைத்துக்கொண்டிருக்கவே முடியாது. அவர்களால் பணத்தை வைத்துக்கொண்டு தூங்கவே முடியாது. தங்கள் பணத்தை தொழில்களில் போடாவிட்டால் பாங்கிலாவது போடுவார்கள். தங்கள் பணத்தை சும்மா வீட்டிலே வைத்துக்கொண்டிருக்க மாட்டார்கள். ஆகவே நாம் முதலாளிகளின் எதிர்ப்பை கொஞ்சம் கூடப் பொருட்படுத்தக்கூடாது. ஆகவே தேசத்தில் இருக்கும் பணத்தை, பொருளாதார வசதியை, நல்ல முறையில் பயன்படுத்த நல்ல திட்டங்களை அரசாங்கம் மேற்கொள்ளவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

11 a.m.

மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்கிருர்கள். அப்படி சுற்றுப் பிரயாணம் செய்வதை நான் குறை கூறவில்லை. மக்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ள அது ஒரு வாய்ப்பு அளிக்கிறது. ஆனல், நான் சொல்வது, கட்டிடம் திறப்பதற்கென்றே, கால் நாட்டு விழாவிற்கென்றே போகக்கூடாது. பொதுமக்களை சந்திப்பதற்காக ஒரு கூட்டம் போட்டு, எல்லா அதிகாரிகளையும் அழைத்து இருக்கக்கூடிய எல்லாப் பிரச்னைகளையும் அலசிப் பார்த்து அவைகளைத் தீர்த்துக் கொடுக்கவேண்டும், அதற்கான மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்தால், அது மக்களுக்கு நன்மை பயப்பதாகயிருக்கும். அப்பொழுது உங்கள் சுற்றுப்பிரயாணம், மக்களுக்கு உதவிகரமாக இருக்கும். நான் எனது தொகுதியில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது மக்கள் என்னிடம் சொல்கிருர்கள், மந்திரிகள் வந்திருந்தார்கள், அவர்களிடம் மனுக்கள் கொடுத்தோம், ஆனல் அவைகள் என்னவாயிற்று என்று தெரியவில்லை என்று குறை கூறுகிருர்கள். உள்ளபடியே மந்திரிகள் போகும்போது, மக்கள் கத்தை கத்தையாக மனுக்களை கொட்டுகிருர்கள்.

மேலும் ஒரு வார்த்தை. தஞ்சை ஜில்லா போர்ட் ஸ்பெஷல் ஆபீஸருக்கு பி.எ. கிடையாது. அவருக்கு ஒரு பி.எ. கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு வருகிருேம். ஆகவே இதை கவனித்து அவருக்கு ஒரு பி.எ. கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பி.எ. இல்லாத

13th March 1959] [Sri A. R. Marimuthu]

தால் ஜில்லா போர்ட் வேலைகள் ஸ்தம்பித்துப் போய்விட்டது. ஆகவே, இதுபற்றி உடனடியாக கவனித்து, தஞ்சை ஜில்லா போர்ட் ஸ்பெஷல் ஆபிஸருக்கு ஒரு பி.ஏ. போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Dr. Srimathi T. S. SOUNDARAM RAMACHANDRAN :** தலைவர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கையை ஆதரித்துச் நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். கவர்னர் பெருமான் என்று ஒருவர் வேண்டுமா, வேண்டாமா என்பதுபற்றி, வேண்டாமென்று ஒரு சிலர் சொல்லுவது சம்பிரதாயமாகிவிட்டதே தவிர, அதற்கு மாற்று யோசனைகள் வருகிறவரையில், அகில உலகத்தில் ஒரு ஸ்தானம் வகிக்கும் நமது நாட்டில் ஒரு தலைவர், அதுவும் கட்சிச் சார்பில்லாத தலைவராக இருந்து தனது கடமையைப் பணியாற்றும் ஒருவர் நமக்கு இருப்பது அவசியமே, இப்போதைய சூழ்நிலையில், என்று நான் நினைக்கிறேன். ஆக, கவர்னர் பெருமான் அவர்கள் கட்சிக்கு அப்பாற்பட்டவர் என்றிருந்தபோதிலும், கூட அது பற்றி பல சர்ச்சைகள் வருவது மனதிற்குக் கொஞ்சம் வருத்தமாகத் தான் இருக்கிறது. இந்த "இன்ஸ்டிட்யூஷன்" க்கு, வரவு செலவு திட்டத்தைப் பார்த்தால், அதற்கு வேண்டிய செலவு ஏறிக்கொண்டு போகாது குறைந்த அளவில்தான் இருக்கிறது. நமக்கு சில அமைப்புக்கள் வேண்டித்தான் இருக்கிறது. அது பற்றி நான் அதிகமாக சொல்ல நினைக்கவில்லை. ஆனால் விவாதம் கண்யமான முறையில் நடக்க வேண்டுமென்றுதான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர்களைப் பற்றிச் சொல்லப்பட்டது. என்னைக் கேட்டால், அவர்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்து விட்டால், சம்பளமாக ஒரு "பாக்கெட் மணி" கொடுத்தாலே போதும். அநேக இடங்களில், அவர்களுக்கு "கன்வேயன்ஸ்" வசதி, வீட்டு வசதி போன்ற எல்லா வசதிகளும் செய்து கொடுக்கப்படுகிறது. அதோடு அவர்களை வருமான வரி பாதிப்பதில்லை. **Ministers are maintained by Government** அப்படி வரும்போது உண்மையிலேயே இப்பொழுது இருப்பதை விட, கூடுதல் வசதியோடும், எளிய முறையிலும் நன்கு வாழ முடியும். அதோடு கூட சர்க்கார் செலவு செய்வது கூடுதலானாலும், "மந்திரிகளுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் இருக்கக் கூடாது என்று சொல்லுகிறோம், ஆனால் அதைவிட அதிகம் ரூபாய் அவர்களுக்குக் கிடைக்கிறது" என்று சொல்லப்படும் குற்றச் சாட்டும் தீரும். ஆகவே, தமிழ் நாடு இப்படி ஒன்றை ஏன் செய்து காட்டக் கூடாது? ஆகவே, இது பற்றிக் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மந்திரிகளின் சுற்றுப்பிரயாணம்பற்றி மாரிமுத்து அவர்கள் சொன்னதை நானும் ஆதரிக்கிறேன். அழைப்புக்கள் வரும்போது எங்கும், எப்பொழுதும், போவதை விட இன்னின்ன ஜில்லாக்களுக்கு, இவர் இவர் போக வேண்டுமென்று இருந்தது. அதாவது போன இடங்களுக்கே திரும்பத் திரும்பப் போகாமல் எல்லா இடங்களுக்கும் போக சௌகரியமாகயிருக்கும் முறையில், வருடத்திற்கு ஒரு தடவையாவது எல்லா "பிர்க்கா ஹெட்க்வாட்டர்ஸ்" க்கும் அல்லது ப்ளாக் ஹெட்க்வாட்டர்ஸுக்கோ, அமைச்சர்கள் போகக்கூடிய விதத்தில் சுற்றுப் பிரயாணம் அமைய வேண்டும். அப்பொழுது நாட்டு மக்களோடு அமைச்சர்கள் ஒரு தொடர்பு வைத்துக்கொள்வதற்கு சௌகரியமாயிருக்கும் என்று ஒரு ஆலோசனையை நான் இங்கு சொல்ல விரும்புகிறேன். நமது சர்க்கார் திட்டமிட்டு வேலைகள் செய்கிறது என்பது உண்மைதான். ஆனால் புதிய வருடத் திட்டங்கள் இறுதியாக ஜில்லா முறையில் வருவதற்குள் ஆறு ஏழு மாதங்களாகிவிடுகின்றன. கிணறு திட்டங்களை எடுத்துக்கொண்டால், சில சமயம் அக்டோபர், நவம்பரில்தான் நிர்ணயிக்கப்படுகிறது. மழை காலத்தில் அவைகளை வெட்ட முடியாது. ஆனால், மார்ச் 20-ம் தேதிக்குள் முடிக்க வேண்டுமென்ற முறையில் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன, காலதாமதத்தினால். ஹெட்க்வாட்டர்ஸில் தாமதம் நிச்சயமாக இருக்கிறது. நம்மிடம் சர்வே இருக்கின்றன. புள்ளி விவரங்கள் இருக்கின்றன, ஆகவே, 1959-ம் ஆண்டு என்னென்ன திட்டங்கள் ஆரம்பிக்கப்படவேண்டுமென்று முன்கூட்டியே

[13th March 1959

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

திட்டமிட்டு எப்ரல் முதல் தேதியிலிருந்தே அதை அமுல் நடத்துவதற்கு தக்க விதத்தில், அங்கீகாரம் போன்றவைகளைக் கொடுத்து, அத்திட்டங்களை ஆரம்பிப்பதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அப்படியில்லாமல், வருடக் கடைசியில், இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்னர் அவசரக் கோலத்தில் வேலைகள் செய்யக்கூடாது. திட்டங்கள் தீட்டினால் மட்டும் போதாது. அவைகள் காலாகாலத்தில் போடப்பட்டு காலாகாலத்தில் செய்து முடிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஆகவே, செக்ரடேரியேட்டில் இவைகள் சரியான முறையில் செயல்படுத்தப்படவேண்டும். இங்கு சரியானபடி நடந்தால்கூட, ஜில்லாக்களில் சரியானபடி நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவில்லை, அப்படி அங்கு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டாலும், தாலுக்கா ஹெட்க்வாட்டர்ஸில் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுவதில்லை. சில டிபார்ட்மெண்டுகளில், அவைகளின் பெயரை நான் குறிப்பிட விரும்பவில்லை சில டிபார்ட்மெண்டுகள் இன்னும் ஆமை வேகத்தில்தான் போய்க்கொண்டிருக்கின்றன. ஆகவே திட்டங்கள் நன்றாகயிருந்தபோதிலும், அவைகளின் பலன் மக்களுக்கு நல்ல முறையில் கிடைப்பதற்கு, அவர்கள் அந்தத் திட்டங்களினால் காலாகாலத்தில் நன்மை அடைவதற்கு, மந்திரி சபையில் காணப்படும் சுறுசுறுப்பு செகிரட்டேரியேட்டில் காணப்பட வேண்டும், அப்படி செகரட்ரியேட்டில் காணப்படும் சுறுசுறுப்பு கிராமங்களில் இருக்கும் கிராம முனிசீப், கர்ணம் போன்றவர்களிடம் பரவ வேண்டும். தலைமை பீடத்தில் சுறுசுறுப்பு மிக மிஞ்சியிருந்தாலும், அது கீழே போகப் போக " டைல்யூட்டாகி " விடுகிறது. வேலைகளில், " ஸ்ப்ரிட் ஆப் அர்ஜன்ஸி " இருக்க வேண்டும். இல்லாவிடில் நமது திட்டங்களை ஸெண்ட் பர்ஸண்ட் பலன் அளிக்கக் கூடிய முறையில் நடத்த முடியாது. கட்டிடங்கள் கட்டினால் அவைகள் பலஹீனமாயிருக்கலாம். கிணறுகள் வெட்டினால் அவைகளில் போதுமான தண்ணீர் இல்லாமலிருக்கலாம் என்ற முறையில் வந்து சேரும். கிராமதானக் கிராமங்களை எடுத்துக்கொண்டால் அங்கு பஞ்சாயத்து அமைத்து, சர்வே செய்வதற்கு சர்க்கார் திட்டங்கள் போடவில்லை. அவைகளைச் செய்து கொடுக்க வேண்டுமென்று உத்திரவு போட்டாகிவிட்டது. ஆனால், சர்வே செய்வதிலும், ரெஜிஸ்டர் செய்வதிலும் அளவு கடந்து காலதாமதம் ஏற்படுகிறது. இதை ஒரு உதாரணமாகச் சொல்கிறேன். " ப்ரொஸிஜரெல் டிலே " என்று சொல்கிறார்களே, அதை அகற்றிவிட்டால், நமது திறமையுள்ள சர்க்கார் இப்பொழுது செய்வதைவிட நாலு மடங்கு அதிகம் வேலைகளைத் திறமையாகச் செய்ய முடியும் என்பதை நான் இங்கு வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். அடுத்தபடியாக, நீர்ப்பாசனத்தைப்பற்றி, அன்று சுருக்கமாக சொன்னதை இன்று சற்று விளக்கமாகச் சொல்ல விரும்புகிறேன். உணவு உற்பத்தி கணிசமான முறையில் பெருக்கப்படவேண்டும். மூன்று சத விகிதம், ஐந்து சத விகிதம் என்று உணவு உற்பத்தியைப் பெருக்கினால் போதாது. முப்பது சத விகிதம், 40 சத விகிதம், 50 சத விகிதம் ஏன் 100 சத விகிதம் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும். மக்களுக்கு முதலில் சோறுதான் வேண்டும். மற்ற நாடுகளை எடுத்துக்கொண்டால், அங்குள்ளதை விட தமிழ் நாட்டில்தான் நாம் தண்ணீரை சிக்கனமாக உபயோகித்து விவசாயம் செய்து வருகிறோம் என்பது எனக்குத் தெரியும். நமது விவசாயத்திற்கு ஜீவ நாடியாக இருப்பது கிணறுகள்தான்.

(Mr. Speaker in the Chair.)

ஆயிரக்கணக்கான எக்கர் நிலங்கள் இப்பொழுதும் தரிசாகக் கிடக்கின்றன. ஆனால் அங்கு விவசாயம் செய்ய முடியும். ஆகவே, கோடிக்கணக்கில் செலவு செய்து பல அணைக்கட்டுகளைக் கட்டி மக்களுக்கு தண்ணீர் கொடுத்து அவர்களிடமிருந்து " பெட்டர்மெண்ட் லெவி " வசூல் செய்வதுபோல், 200 எக்கர்களுக்கு மேல் இருக்கும் தரிசு நிலங்களையெல்லாம் எடுத்து வருடமொன்றுக்கு பத்தல்ல, இருபது கோடி வேண்டுமென்றாலும் தயங்காமல் செலவு செய்து கிணறுகளைச் சர்க்காரே வெட்டி கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்கலாம்

13th March 1959]

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

அவர்களுக்கு வேண்டிய கடன் வசதிகளை செய்து கொடுத்து கூடுதல் கிஸ்தி போட்டு நாம் செலவு செய்யும் பணத்தின் வட்டியை ஈடுகட்டிக் கொள்ளலாம். சிறு நீர்ப்பாசனங்களுக்காக இரண்டு கோடி, மூன்று கோடி ரூபாய் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லாமல் ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் தரிசு நிலங்கள் இருக்கிறயிடங்களில் புதுக் கிணறுகள் வெட்டுவது, இது போன்ற இதற்கு வேண்டிய மற்ற வசதிகளையும் சர்க்கார் செலவிலேயே செய்து கொடுக்க வேண்டும். அது தேசீய சொத்தாகத்தான் யிருக்கும். ஆகவே, அப்படிக் கூட்டுறவுப் பண்ணைகள் அமைத்தால், பரவலான முறையில் மக்களுக்கு வசதி செய்து கொடுப்பதோடு கூட, நிலம் இல்லாத மக்களுக்கும் இது ஒரு பெரிய வரப் பிரசாதமாயிருக்கும் என்பதை என்னால் எவ்வளவு தூரம் வற்புறுத்தி, அழுத்திச் சொல்ல முடியுமோ அவ்வளவு தூரம் அழுத்திச் சொல்ல விரும்புகிறேன். இன்று காலையில் பேப்பரில் வந்த ஒரு விஷயம் எனக்கு மிகவும் அதிர்ச்சியைக் கொடுக்கக் கூடியதாக இருக்கிறது. நம்முடைய உணவுக் கமிஷனர் மில்காரர்கள் அரிசியை "புல் பாலிஷ்" செய்து கொடுக்க வேண்டும் என்று உத்திரவு போட்டிருப்பதாகத் தெரிகிறது. இப்பொழுது சட்டப் பிரகாரம் ஒரு தடவை பாலிஷ் செய்தால் போதும். இரண்டாம் தடவை பாலிஷ் செய்யக்கூடாது என்று ரைஸ் மில் கண்ட்ரோல் ரீதியில் இருக்கிறது என்று நினைக்கிறேன். அப்படி இருக்கும்பொழுது புல் பாலிஷ் என்று போட்டிருக்கக் கூடிய அர்த்தம் என்ன? அதனால் அரிசியினுடைய அளவு 5 சத விகிதம் 10 சத விகிதம் குறையும் என்பதையும் ஆலோசித்தார்களா? இம்மாதிரி தவறுதலாக பேப்பரில் வந்திருக்கிறதா? இது பற்றி அரசாங்கம் உடனடியாக ஆலோசனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஒரு வேளை அரிசியை சேமித்து வைப்பது என்றால் நல்ல சத்துள்ள அரிசியாக இருந்தால் பூச்சி வரும். மல்லிகைப் பூ மாதிரி வெள்ளையாக பாலிஷ் செய்துவிட்டால் பூச்சி வராது. அப்படியிருந்தால், ஒரு பாகத்தை நெல்லாகவாவது சேமித்து வைக்க வேண்டும். ஆகவே, "புல் பாலிஷ்" என்பதை உடனடியாக எடுத்து, இலேசாகப் பாலிஷ் செய்தால் போதும் என்று உத்திரவு போடவேண்டும். கைக்குத்தல் அரிசியை உபயோகித்தால், பூமியினுடைய பரப்பு கூடாமலே, அரிசியினுடைய அளவு 100-க்கு 10 பங்கு கூடும். ஆகவேதான், சர்க்கார் இது பற்றிக் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 11-10 a.m.

அடுத்தபடியாக, எம்.எல்.ஏ-க்கள், மந்திரிகளைப் பற்றி சன்னுசி அவர்கள் சொன்னதைக் கேட்பதற்கு சந்தோஷமாக இருந்தது. அதிலே ஒரு சிறிது உண்மை இருக்கத்தான் இருக்கிறது. அதற்காக எம்.எல்.ஏ.க்களுக்கு 150 ரூபாய் போதாது, 500, 1,000 கொடுக்க வேண்டுமென்று சொல்லவில்லை. வருமான வரி ஓரளவுக்கு செலுத்துகின்ற எம்.எல்.ஏ.க்களைத் தவிர, ஊழியர்களாக வந்திருக்கக் கூடிய எம்.எல்.ஏ.க்களுக்கு ஏதாவது கன்வேயன்ஸ் அலவன்ஸ் கொடுக்கலாம். அவர்கள் அடிக்கடி மதராஸ் வரவேண்டி இருக்கிறது. யாரையாவது நம்ப வேண்டித்தான் இருக்கிறது. யாராவது ஊருக்கு வந்தால், டிஸ்ட்ரிக்ட் ஹெட்க்வார்ட்டர்ஸுக்கு மற்றவர்களை அழைத்துக்கொண்டு போக வேண்டி இருக்கிறது. வோட்டுக் கொடுத்துவிட்டதால், எம்.எல்.ஏ.க்கள் ஐந்து வருஷம் அவர்கள் சொன்னதை எல்லாம் கேட்க வேண்டும் என்று கிராம வோட்டர்கள் நினைக்கிறார்கள். ஆகவே, அவர்களுக்கு ஒரு கன்வேயன்ஸ் அலவன்ஸ் கொடுக்க வேண்டும். ஓரளவுக்கு வருமான வரி செலுத்துபவர்களுக்குக் கொடுக்க வேண்டியதில்லை. ஊழியர்களாக இருப்பவர்களுக்கு மட்டும் கொடுக்கலாம் அல்லது அவர்களுக்கு ஒரு "ப்ரீ பாஸ்" கொடுக்கலாம் என்பதையும் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அப்பொழுது ஊழியர்களாக இருக்கக்கூடிய எம்.எல்.ஏ.க்கள் மற்றவர்களைச் சார்ந்திருக்கக் கூடிய அவசியம் வராது. ஆகவே, நம் மாகாண சர்க்கார் இது பற்றிக் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். என்னைப் பற்றி யாரும் சொல்ல மாட்டார்கள். என் தொகுதியில் ஒரே ஒரு பஸ் ரூட்தான் இருக்கிறது. இந்தப் பக்கம்

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

ஒரு பஸ், அந்தப் பக்கம் ஒரு பஸ் போகிறது. மற்ற இடங்களுக்குப் போகவேண்டுமானால், நடந்துதான் போகவேண்டும். சில ஊர்களுக்குத் தான் ஜீப்பில் போகமுடியும். ஆகவே, எனக்கு இது கிடைத்தால் ஒன்றும் பிரயோஜனம் இல்லை.

அடுத்தபடியாக, திட்டத்தைப்பற்றிய சில விஷயங்களை, மற்ற மானிய விவாதத்தின்போது நான் பேசவில்லையாதலால், இப்பொழுது பேசுகிறேன். மெடர்னிடி அஸிஸ்டென்ட் ட்ரெயினிங் 1961-வது வருஷத்திற்குப் பிறகு கிடையாது என்று நமது திட்டத்தில் இருக்கிறது. இது அகில இந்திய ரீதியில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இப்பொழுது 3 மாதங்களுக்கு ஒரு தரம் மெடர்னிடி அஸிஸ்டென்ஸ் ட்ரெயினிங்குக்கு பெண்களை எடுத்துக் கொண்டிருக்கிறோம். திடீரென்று 1961-ல் நிறுத்திவிட்டால், போதுமான உதவி நர்ஸ்கள் கிடைக்க மாட்டார்கள். இப்பொழுது உதவி நர்ஸ்களை இரண்டு வருஷத்திற்கு ஒரு முறை 30 பேர்களைத்தான் எடுக்கிறோம். ஆகவே, 2 வருஷத்திற்குப் பிறகு ஒரு நெருக்கடியான நிலைமை (பாடில் நெக்) ஏற்பட்டுவிடும். அநேகமாக ஆஸ்பத்திரி நிர்வாகஸ்தர்கள்கூட இதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால் ட்ரெயினீஸ் ஆஸ்பத்திரி வேலையில் பங்கு எடுத்துக்கொள்கிறார்கள். ஆதலால் 1961 வரையில் காத்திருக்காமல், வருமுன் காப்போன் என்ற முறையில், ஆக்ஸிலியரி நர்ஸ் ட்ரெயினிங்குக்கு பெண்களை 6 மாதங்களுக்கு ஒரு தடவை அல்லது 3 மாதங்களுக்கு ஒரு தடவை எடுத்து அவர்களுக்கு பயிற்சி அளித்து, 2 வருஷங்களுக்குப் பின்னால் ஒரு நெருக்கடி ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

விமென்ஸ் வெல்பேர் டிபார்ட்மென்டைப்பற்றி நான் இரண்டு வார்த்தைகள் சொல்லாமல் இருக்கமுடியாது. பல வருஷங்களுக்கு முன்னாலேயே ஸ்ரீமான்கள் கோபால் ரெட்டி, குமாரசாமிராஜா ஆகியோர்கள் மந்திரி சபையில் வேலை செய்தபொழுது, நாங்கள் மாதர் நல இலாகாவில் இருக்கிறவர்கள் வருஷா வருஷம் டெப்புடேஷன் போய் அறிக்கைகள் சமர்ப்பித்திருக்கிறோம். விஜிலன்ஸ் ஹோம் என்று ஒன்று ஏற்படுத்தி கஷ்டப்பட்டுப் போன, சங்கடப்பட்டுப்போன பெண்களை மீட்பதற்கு வழி செய்வதற்கு முன்னால், அந்த நிலையே இல்லாதமாதிரி பார்த்துக்கொள்ள ஜில்லா தோறும் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம். இப்பொழுது அந்த வேலை அரைகுறையாக நடக்கிறதே தவிர, முழு மூச்சுடன் நடக்கவில்லை. குழந்தைகள், பெண்கள், நலத்திற்காக இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின்கீழ் எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறதோ, அதுவும் சரியான முறையில் செலவு செய்யப்படவில்லை. ஆகவே, ஜில்லாவுக்கு ஒரு வேலைத் தேடித் தரும் ஸ்தாபனம் இருப்பது போல, கதி இல்லாத பெண் இருந்தால், அந்தப் பெண்ணை விசாரித்துச் சொல்வதற்கு ஒரு ஸ்தாபனம் ஜில்லா தோறும் பெண்கள், குழந்தைகள் நலனுக்காக வேண்டும். அதோடுகூட வயது வந்த பெண்களுக்கு கைத்தொழில், கல்வி வசதிகள் செய்து கொடுக்க சர்க்கார் அதிகமாக சர்வீஸ் ஹோம்கள் ஏற்படுத்த வேண்டும். இப்பொழுது ஒரு லிஸ்டு கொடுத்திருக்கிறார்கள். அது போதாது. அதை இன்னும் விஸ்தரிக்க வேண்டும். விஜிலன்ஸ் வொர்க்குக்கு அவசியம் இல்லாமல் செய்ய வேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

சிறு கைத்தொழில்கள் பற்றி சில வார்த்தைகள் சொல்லிக்கொள்கிறேன். ஸ்மால் ஸ்கேல் இன்டஸ்ட்ரீஸ், சிறு கைத் தொழிலுக்கு 10,000 8,000 கொடுத்தால் ஒரு ஆளுக்கு எவ்வளவு கிடைக்கும் என்று சொன்னார்கள். கோவிந்தசுவாமி அவர்கள் இப்பொழுது இல்லை. அவர்களுக்கு நான் பதில் சொல்ல விரும்புகிறேன். கைத்தறிதான் கதர்த் தறியும் என்பதை தயவு செய்து நன்றாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்

13th March 1959]

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

என்று அங்கத்தினர்களை நான் கேட்டுக்கொள்கிறேன். மில் நூலை உபயோகப்படுத்தி கைத்தறி நெசவு செய்தால் ஒரு குடும்பம் மட்டும்தான் பிழைக்கிறது. கதர் நூலை உபயோகித்து கைத்தறி நெசவு செய்தால், அம்பர் ராட்டையில் நூற்றால் 7 குடும்பங்கள் பிழைக்கின்றன. ஒரு மாதத்திற்குக் குறைந்த பட்சம் 15 ரூபாய் கிடைக்கிறது. முப்பது ரூபாய் கூட சம்பாதிக்கலாம். ஒரு கைத்தறியைக் கதர் தறியாகச் செய்தால் அம்பர் ராட்டையில் நூற்றால் 7 குடும்பங்களுக்கு பிழைக்க வாய்ப்பும் வசதியும் ஏற்படுகிறது. கிஸான் ராட்டையாக இருந்தால் 15, 20 பேர்களுக்கு 4 ரூபாய் முதல் 10 ரூபாய் 15 ரூபாய் கிடைக்கும். ஆகவே, கைத்தறி என்று சொல்லும்போது, மில் நூலை உபயோகித்து நெசவு செய்யும் கைத்தறி என்று மட்டும் நினைத்து, அதற்காக வாதாடாமல், கதர் நூலை நெய்யும் கைத்தறிக்காரர்களையும் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். மில் நூலை நெசவு செய்யக் கூடிய கைத்தறியாளர்களுக்கு கிடைக்கக் கூடிய வசதிகள் கதர் நூலை நெசவு செய்யக் கூடிய கைத்தறியாளர்களுக்குக் கிடைப்பதில்லை. கதர் கைத்தறியில் வேலை செய்பவன் அடுத்த நாள் மில் நூல் கைத்தறிக்குப் போய்விடுகிறான். அவனுக்கு அங்கே அதிகக் கூலி கிடைக்கிறது. வசதி கிடைக்கிறது. அதிக வாய்ப்பு இருக்கிறது. கதர்த் தறியில் நெசவாளர்களுக்கு இன்னும் ஸ்டெபிலிடி ஏற்படவில்லை. சர்க்கார் எவ்வளவு தீவிரமாக திட்டம் போட்டாலும், எங்களைப் போல் இருப்பவர்கள் அதனால் பொருளாதாரத் துறையில் ஒரு புரட்சியைக் கொண்டுவர வேண்டுமென்று நினைத்தாலும், மில் நூல் கைத்தறி நெசவாளர்களுக்குக் கொடுப்பதுபோல், கதர் கைத்தறி நெசவாளர்களுக்கும் பிரத்தியேக சலுகைகள் கொடுத்தால்தான் இந்தக் கதர் திட்டம் நல்ல முறையில் அமுலுக்கு வர முடியும். இப்பொழுது இந்தக் கதர்த் திட்டம் நல்ல முறையில் அமுலுக்கு வராமல் போய்விடுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருக்கிறது. மக்களுக்கு கிராமக் கைத்தொழில்களில் அதிக பயிற்சி அளிப்பது மிகவும் அவசியம். கிராமப் புறங்களிலே அவர்கள் வீட்டிலேயே இருந்துகொண்டு மூலதனத்திற்கு அதிகமாக அவசியமில்லாமல் லட்சக் கணக்கான மக்களுக்கு வேலை செய்வதற்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டுமென்றால், கதர்த் திட்டம் போன்ற கிராமக் கைத்தொழில்கள் தான் நமக்கு உறுதுணையாக இருக்கும். நாம் ஒரே இடத்தில் தேங்கி நிற்க வேண்டுமென்று சொல்லவில்லை. பின்னால் வேண்டுமானால் மாற்றி அமைத்துக்கொள்ளலாம். ஆனால், அந்த சாத்தியக் கூறு 10, 15 வருஷங்களுக்குக் கூட கிடையாது. ஆகவே, நாம் எல்லோரும் கைத்தறி போன்றுதான் கதர்த்தறி என்பதை மனதில் வைத்து அதற்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டும். கதர் தறிக்குத்தான் இன்னும் அதிகமாக பாதுகாப்பு வேண்டியிருக்கிறது. அது இன்னும் ஒரு நிரந்தரமான நிலைமைக்கு வரவில்லை. மில் நூல் கைத்தறியாளர்களுக்குச் செய்து கொடுத்திருக்கும் வசதிகளைப் போல் இன்னும் அதிகமான வசதிகள் கதர்த் தறிக்கு அளிக்க வேண்டும். கிராமப் புறங்களிலுள்ள மக்கள் நகரங்களில் வந்து சேரிகளை ஏற்படுத்தாமல், அவர்கள் தங்கள் கிராமங்களில் வீட்டிலேயே இருந்துகொண்டு கண்ணியமான முறையில் வேலை செய்யக் கூடிய வாய்ப்பு அவர்களுக்கு கிராமக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதன் மூலம்தான் கிடைக்கும். ஆகவே, அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கும்போது, சந்தோஷமாக, மெண்டல் ரிஸர்வேஷன் இல்லாமல், மனத் தயக்கம் இல்லாமல் பரிபூரணமாக ஆதரவுடன் செய்து கொடுக்க வேண்டும். இம்மாதிரி நல்ல முறையில் நாம் திட்டங்களை நிறைவேற்றினால், நம்முடைய மாகாணங்களிலுள்ள திட்டங்களை அமுல் நடத்துவதில் மட்டுமல்ல, மற்ற மாகாணங்களில் திட்டங்களை அமுல் நடத்துவதில் இருக்கிற திறமையும் கூடும். நமக்கு இன்னும் பெருமை உண்டாகும். நாம் இன்னும் அதிகமாகச் செய்ய வேண்டுமென்பதுதான் என்னுடைய ஆசை, நம்மிடத்தில் இன்னும் 4 பங்கு வேலை செய்யக் கூடிய திறமையும், வாய்ப்பும் இருக்கிறது. ஆகவே, அவாய்டபிள் டிலேய்ஸ் தவிர்க்கக் கூடிய தாமதங்களைத் தவிர்த்து துரிதமாகக் காரியங்களைச் செய்வதற்கு ஒரு திட்டம் போட வேண்டும். ஒரு திட்டம் போட்டால் எத்தனை தினங்களுக்குள் அதுஜில்லாவில், தாலுகாவில் நிறைவேற்றப்பட வேண்டும் என்று ஒரு முறையை நிர்ணயிக்க வேண்டும்.

[Dr. Srimathi T. S. Soundaram Ramachandran]

கிராமப் புறங்களிலே டாக்டர்கள் இல்லை என்ற புகார் வந்துகொண்டிருக்கிறது. அந்தக் குறை நீக்கப்பட வேண்டும்.

*SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கைகளை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். எனக்கு முன்பு பேசியவர்கள் சொன்னது போல் அமைச்சர் அவர்களுடைய சுற்றுப் பிரயாணத்தைப் பற்றி யானும் எனது கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். அமைச்சர்களுடைய சுற்றுப் பிரயாணம் இப்பொழுது எப்படி நடக்கிறது என்றால், அமைச்சர்களை எங்கெங்கு கூப்பிடுகின்றார்களோ, எங்கெங்கு அலுவல்கள் இருக்கிறது என்று கருதுகின்றார்களோ, அந்த இடங்களுக்கு மட்டும்தான் செல்கின்றார்கள். பொதுவாக ஒவ்வொரு அமைச்சரும் பல இடங்களை இது வரையிலும் பார்வையிட்டிருக்க மாட்டார்கள். அவர்கள் அந்த இடங்களை எல்லாம் பார்வையிடாமல் இருப்பதால் அந்த இடங்களிலுள்ள மக்கள் தேவைகளை சரியானபடி உணர்ந்துகொள்ள முடிவதில்லை. உதாரணமாக பல பிற்பட்ட இடங்களையும் அமைச்சர்கள் வந்து பார்வையிடாததினால் அவர்களுடைய குறைகள் எல்லாம் கவனிக்கப்படாமல் அப்படியே விடப்பட்டிருக்கின்றன என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். முன்பு ஒரு தடவை இந்தச் சபையில் சொல்லப்பட்டது. அதாவது பிற்பட்ட இடங்களினுடைய பட்டியல் ஒன்று தயாராகிக்கொண்டிருக்கிறது. அது தயாரானவுடன், அந்த இடங்களுக்கு எல்லாம் சென்று அங்குள்ள குறைகளை அறிந்து அதற்குத் தக்கபடி நடவடிக்கை எடுக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டது. அத்தகைய பட்டியலை உடனே தயார் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்விதம் தயாரிக்கப்படுகிற பட்டியலில் இருக்கின்ற பிற்பட்ட பிரதேசங்களை எல்லாம் அமைச்சர்கள் தவறாது பார்வையிட்டு அந்த இடங்களில் இருக்கின்ற குறைகளை எல்லாம் போக்குவதற்கு திட்டமிட்ட நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்த பிற்பட்ட பிரதேசங்களில் சில மிகவும் வரண்ட பிரதேசங்களாக இருக்கின்றன. அத்தகைய பிரதேசங்களில் எல்லாம் வேலை இல்லாமை மிகவும் அதிகமாக இருக்கின்றன என்பதை நான் சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். நீர்வளம் இல்லாவிட்டாலும் கூட அந்தப் பிரதேசங்களில் எல்லாம் ஏதாவது சிறிய கைத்தொழில்களை ஏற்படுத்திக் கொடுத்தால், அவை கதர் தொழில் போன்ற தொழில்களாக இருந்தாலும் சரி, சிறிய கைத்தொழில்களாக இருந்தாலும் சரி, ஏதாவது கைத்தொழில்கள் ஆரம்பித்து அவர்களுக்கு வேலை வசதி செய்து கொடுத்தால் மிகவும் நல்லதாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சமுதாய நலத் திட்டங்கள், தேசிய அபிவிருத்தித் திட்டங்கள், போன்றவைகள் பல இடங்களில் ஆரம்பிக்கப்படுகின்றன. ஆனால் பிற்பட்ட பிரதேசங்களில்தான் இது அதிமாக ஆரம்பிக்கப்பட வேண்டும் என்று நாம் இங்கு பறைசாற்றிக்கொண்டிருந்தாலும்கூட நடைமுறையில் பிற்பட்ட பிரதேசங்களில் இது அதிகமாக ஆரம்பிக்கப்படவில்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். இந்த ஆண்டு ஸ்தல அபிவிருத்திக்காக 35 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதைப் பார்த்து நான் அதை மகிழ்ச்சியோடு வரவேற்றாலும்கூட இந்த 35 லட்ச ரூபாயும் குடிதண்ணீர் திட்டத்திற்காக உபயோகப்படுத்தப்படும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. நான் கேட்பது, சாலை போடுவது, கட்டிடம் கட்டுவது போன்ற வேலைகளுக்கு எல்லாம் செலவு செய்ததுபோக பாக்கித் தொகை இருக்குமானால் அடுத்த ஆண்டில் மிச்சமாகப் போய்விடுகிறது. அவ்விதமில்லமல் எல்லாத் தொகையுமே ஸ்தல அபிவிருத்திக்காக அடுத்த ஆண்டில் மிச்சமுள்ள வேலைகளுக்கு பயன்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சென்ற ஆண்டில் திருச்சிராப்பள்ளி மாவட்ட மன்றத்தில் பற்றுக்குறை ஏற்பட்டிருந்ததின் காரணமாக அந்த மாவட்ட மன்றத்தில் இட வளர்ச்சி திட்டத்திற்கு செலவு செய்வதற்காக மான்யம் கொடுக்க வேண்டும் என்று கேட்கப்பட்டிருந்தது. அதாவது திட்டத்திற்கு செலவு செய்யும் தொகையில்

நாலில் ஒரு பங்கை மாவட்ட மன்றமும், மீதியை அரசாங்கமும் கொடுக்கும் என்ற ஏற்பாட்டின்படி, ஒத்துக்கொள்வதற்கு வசதி இல்லாத காரணத்தால் அங்கு இந்தத் திட்டம் எவ்வளவு தேவை என்பதை சான்றுகளோடு எடுத்துக் காட்டி மான்யம் தரப்பட வேண்டும் என்று கேட்கப்பட்டது. சர்க்காரிலிருந்து இதற்கு ஐந்து லட்ச ரூபாய் சென்ற ஆண்டில் ஒதுக்கி இருந்தார்கள். அவ்விதம் இருந்தும் அங்கு 56 ஆயிரம் ரூபாய்க்கு வாக்களிக்கப்பட்ட வேலைகளுக்குப் பணம் கொடுக்கப்படாமல் இருந்தது. இந்த ரூபாயை உடனடியாகக் கொடுக்க வேண்டும் என்று சர்க்காருக்கு எழுதி ஓராண்டு காலமாகியும் சர்க்காரிலிருந்து எந்த விதமான பதிலும் வரவில்லை. இதன் காரணமாக ஒப்பந்தத்தின் பிரகாரம் வேலைகளைத் தங்கள் செலவில் வேலை செய்து கொடுத்த ஒப்பந்தக்காரர்கள் இன்றைக்கு ஏமாற்றமடைந்திருக்கக் கூடிய நிலையில் இருந்துகொண்டிருக்கிறார்கள். இடவளர்ச்சித் திட்டம் அந்தப் பகுதியில் எவ்வளவு அவசியம் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டிய தேவையில்லை. ஆகவே இந்த வேலைகளுக்காக மாவட்ட மன்றத்திற்கு கொடுக்கப்பட வேண்டிய தொகையை உடனடியாகக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நமது அரசாங்கம் இன்று நாட்டிலிருக்கின்ற மக்களிடையே ஒரு நல்ல எண்ணத்தை உண்டுபண்ணி இருக்கிறது. நல்ல முறையில் அரசாங்கம் நடந்துகொண்டிருக்கிறது. அதே போன்று அரசாங்க தலைமை அதிகாரிகளும் ஒழுங்காக நடந்துகொண்டிருக்கிறார்கள் என்ற எண்ணம் பொதுவாக மக்களிடையே ஏற்பட்டிருக்கிறது. அரசாங்கம் நல்ல முறையில் நடந்துகொண்டிருக்கிறது என்றால், இந்த அரசாங்கத்தில் இருக்கிற அமைச்சர்களும், தலைமை அதிகாரிகளும்தான் காரணம் என்று சொல்ல வேண்டும். முன் காலங்களில் எல்லாம் இருந்தது போல் இல்லாமல் கட்சி பாகுபாடின்றி எல்லா கட்சிக்காரர்களுக்கும் ஒரே முறையில் காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறார்கள் என்ற நிலைமையில் தான் இந்த எண்ணம் மக்களிடேயே தோன்றியிருக்கிறது. இம்மாதிரி எண்ணம் நாட்டில் தோன்றியிருப்பது மகிழ்ச்சிக் குரிய விஷயம். ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்னால் இருந்த நிலைமையை விட இப்போது மிகவும் மாறுபட்டிருக்கிறது என்பதை யாரும் மறைக்க முடியாது. அதே முறையில்தான் மேல் நிலையில் இருக்கின்ற அதிகாரிகள் எல்லாம் தாங்கள் ஒழுக்கமாகவும், நேர்மையாகவும் நடந்துகொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தோடு காரியங்களை எல்லாம் நிறைவேற்றி வருகிறார்கள். ஆனால் அதே சமயத்தில் கீழ்த் தட்டிலிருக்கிற அதிகாரிகளுடைய போக்கு சரியாக இல்லை. அவர்கள் உண்மையாகவும், ஒழுக்கமாகவும், நேர்மையாகவும், நடந்துகொள்வதில்லை என்று ஆங்காங்கு இருக்கின்ற மக்கள் குறைபட்டுக் கொள்கிறார்கள். இவ்விதம் கீழ்த் தட்டில் இருக்கின்ற அதிகாரிகள் சரியாக நடந்துகொள்ளவில்லை என்றால், அதற்குப் பொறுப்பு எடுத்துக் கொள்ள வேண்டியவர்கள் அவர்களுக்கு மேல் இருக்கின்ற அதிகாரிகள் தான் என்பதை அவர்களுக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். ஆங்காங்கு கீழ்த் தட்டில் இருக்கின்ற அதிகாரிகள் பாராமுகமாக இருந்துவருகிறார்கள் என்றால் அவர்களுக்குச் சரியான உத்திரவுகளைக் கொடுத்து இன்னென்ன மாதிரியாக நடக்க வேண்டும் என்று மேல் அதிகாரிகள் வற்புறுத்த வேண்டும். அவ்விதம் ஒரு விதமான நடவடிக்கைகளும் எடுக்கப்படுவதாகத் தெரியவில்லை என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன். அரசாங்க அதிகாரிகள் என்றால் ஒருவரும் பாராமுகமாக இருத்தல் கூடாது. மற்றொரு சந்தர்ப்பத்தில் இங்கு கனம் அம்மையார் அவர்கள் குறிப்பிட்டார்கள் ஒவ்வொரு பேப்பரும் சரியானபடி கவனிக்கப் படுவதில்லை என்று. இந்த நிலைமையை அமைச்சர்கள் புறக்கணித்துவிடக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். இன்றைக்கு நாட்டிலுள்ள நெருக்கடியான நிலைமை என்னவென்றால், சிபார்சு இல்லாமல் எந்தக் காரியமும் நடக்காது என்கிற ஒரு நிலை இப்போது ஏற்பட்டிருக்கிறது. சாதாரணமாக பள்ளிக்கூடங்களில் இடம் கிடைக்காமல் இருந்தாலும் சரி, மற்றும் இது போலுள்ள எந்தக் காரியமாக இருந்தாலும் சரி, சிபாரிசு இல்லாமல்

ஒன்றுமே நடைபெறுது என்கின்ற ஒரு செய்தி பரவலாக எங்கும் பரவிக் கொண்டிருக்கிறது. இத்தகைய நிலை நாட்டில் இருக்குமானுல், இம் மாதிரியான ஒரு கெட்ட எண்ணம், ஒரு கெட்ட அபிப்பிராயம் பரவிக் கொண்டிருப்பதை நாம் பார்த்துக்கொண்டு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது என்று சொல்லிக்கொண்டிருக்க முடியாது. ஆகவே இதில் சரியான கவனம் செலுத்தி தலைமை அதிகாரிகளும், அதே போல் அமைச்சர்களும் இதில் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக தேர்தலைப்பற்றி சொல்லுவதாக இருந்தால், இன்றைக்கு இருக்கின்ற சட்டசபை தொகுதிகள் எல்லாம் ஓரளவுக்கு பெரிதாகவே காணப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்ட வேண்டிய அவசியமில்லை. சாதாரணமாக தேர்தல் காலத்தில் ஒற்றைத் தொகுதியாக இருந்தால் ஒரு அபேட்சகர் அந்தத் தொகுதியிலுள்ள ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று மக்களை பார்க்கவேண்டுமென்றல் குறைந்தது 40 நாட்களாவது ஆகும். அதே போன்று இரட்டை தொகுதியாக இருந்தால் சுற்றிப் பார்ப்பதற்கு குறைந்தது ஆறு மாதகாலமாகும். இவ்விதம் இருந்தால் இம்மாதிரிப்பட்ட தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்கள் அந்தந்த தொகுதிகளில் சென்று எல்லா கிராமங்களுக்கும் நல்ல முறையில் கடமை ஆற்ற முடியாது. இதனல் மக்களுக்கு திருப்தி ஏற்பட முடியாது. ஆகவே சட்டசபை அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் சரியான முறையில் மக்களுக்கு சேவை செய்வதற்கு ஏதுவான முறையில் சட்டசபை தொகுதிகளை மாற்றி சிறிதாக அமைத்தால் அவர்களுக்கு அந்த தொகுதியிலுள்ள மக்களுக்கு சேவை செய்வதற்கு நல்ல வாய்ப்பாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த இரட்டைத் தொகுதியை ஒரே தொகுதியாக, தாழ்த்தப்பட்ட மக்களையும் மற்ற பொதுத் தொகுதிக்கு நிற்கிறவர்களையும் சேர்த்து வைத்து இரட்டைத் தொகுதி என்று அமைத்திருக்கிறர்கள். இன்னும் சில காலத்திற்காவது, தாழ்த்தப்பட்டோருக்கு இடம் கொடுக்கும் வரையிலும் இந்தத் தொதிகளை இரண்டாகப் பிரித்து ஒரு தொகுதியில் பொதுத் தொகுதியில் நிற்கிறவர்களும், இன்னெரு தொகுதியில் தாழ்த்தப்பட்ட மக்கள் மட்டும் போட்டியிடும்படிச் செய்து விட்டால் இந்த இரட்டைத் தொகுதி தொல்லை திருப்திகரமாக இல்லாத நிலை சமாளிக்கப்பட்டு விடும் என்று இங்கே எடுத்துக் காட்டிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

11-30 p.m.

அடுத்தபடியாக வாக்காளர் பட்டியல் தயாரிக்கப்படுகிற முறைபற்றியது. இன்றைக்கு இது ஆண்டுதோறும் தயாரிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. சில தொகுதிகளில் தீவிர நடவடிக்கை எடுக்கப்படுகிறது. ஐந்தாண்டிலே ஒரு ஆண்டுக்கு மட்டும் தீவிரமான நடவடிக்கை எடுக்கப்பட்டு, மற்ற ஆண்டுகளில் ஆண்டு தோறும் சாதாரண நடவடிக்கை எடுக்கப்படுகிறது என்று சொல்லப்பட்டது. ஐந்தாவது ஆண்டிலே இருக்கிற அந்த வாக்காளர் பட்டியலைப் பார்த்தால் அதிலே பல தவறுகளைக் காண்கிறேம். இந்தத் தவறுகளுக்குக் காரணம் ஊதியமில்லாமல் இந்த முக்கியமான அலுவலைச் சிறு அதிகாரிகளைச் செய்யக்கேட்டுக் கொள்வதால், அவர்கள் நல்ல முறையில் சரிவரச் செய்ய முன் வருவதில்லை. இந்த வேலை நாட்டுக்கு மிக அவசியமான வேலை. ஆகவே, ஓரளவுக்கு அதிகாரிகளுக்கு ஊதியம் கொடுத்து நல்ல முறையில் இந்த வாக்காளர் பட்டியலைத் தயாரிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இந்த தேர்தல் காலத்திலே ஓட்டுச் சாவடிகள் அமைக்கப்படுகின்றன. ஓட்டுச் சாவடிகளுக்கு முன்னல் மர நிழலோ மற்றப்படி தங்கக் கூடிய வசதிகளோ இல்லாவிட்டால் வெய்யிலிலோ அல்லது மழையிலோ காத்துக் கொண்டிருந்து வாக்குகளைக் போட வேண்டிய அவசியம் இருக்கிறது. ஓட்டுச் சாவடிகள் கட்டப் பணம் செலவழிக்கும் போது

13th March 1959] [Sri K. R. Viswanathan]

வாக்காளர்கள் தங்குவதற்கு வசதி செய்து கொடுத்து வசதியோடு வாக்கு களைப் போட ஏற்பாடு செய்து கொடுப்பதில் அதிகம் செலவாகி விடாது. ஆகையால் அத்தகைய வசதிகளைச் செய்து தரவேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இறுதியாக, மாகாணத்தில் உத்தியோகஸ்தர்களை அமர்த்துகிற மதராஸ் பப்ளிக் ஸர்வீஸ் கமிஷன் நல்ல முறையில், தனிப்பட்ட முறை யில், சுதந்திரமான முறையில் நடந்து வருவது பற்றி மிகவும் பாராட்டு கிறேன். இப்போது இதிலே மூன்று இடங்களில் இரண்டு உறுப்பினர்கள் மட்டும்தான இருக்கிறார்கள். காலியாக இருக்கக் கூடிய இடத்தை இன் னும் பூர்த்தியாக்காமல் இருப்பது மிகவும் நன்றாக இல்லை. அந்தக் காலி இடத்தை மிக விரைவில் பூர்த்தி செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைப் கேட்டுக் கொண்டு நான் அமருகிறேன்.

*SRI T. VELUCHAMY: கனம் சபாநாயகர் அவர்களே, மதிப்பு வாய்ந்த எதிர்க் கட்சி நண்பர்கள் கொண்டு வந்த வெட்டுப் பிரேரணைகளை நான் ஆதரிக்கிறேன். விரும்புகிறேன் அவைகளில் முக்கியமாக நான் பெரிதும் முக்கியமாகக் கருதுகிற, அன்பழகன் அவர்கள் கொண்டு வந்த வெட்டுப் பிரேரணையில் அவர்கள் சொன்ன காரணமான "To point out the failure of the Government to create democratic atmosphere in the State" என்ற காரணத்தின் அடிப்படையில் பேச ஆரம்பிக்கிறேன். நிர்ணயப்படி ஜனநாயக ரீதியில் பலவேறு தொகுதிகளிலும் பாரபட்சமற்ற முறையில் ஆட்சி நடத்த வேண்டியதில் சர்க்கார் சரியானபடி, ஜனநாயக வளர்ச்கு ஊக்கம் கொடுக்கக்கூடிய வகையிலும், ஜனநாயக மணம் கமழக் கூடிய முறையிலும் ஆட்சி நடத்தவில்லை என்ற குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த நாட்டிலே எந்தெந்தத் தொகுதிகளில் ஆளும் கட்சிக்காரர்கள் ஜெயித்தார்களோ அந்தத் தொகுதிகளிலுள்ள காரியங்கள் சரியாக நடை பெற்று கவனிக்கப்படுகின்றன. ஆனால் எதிர்க் கட்சி மெம்பர்கள் ஜெயித்து வந்த தொகுதிகளில் சர்க்கார் தாங்களாகவே அங்கேயுள்ள குறைகளை கவனிக்க வேண்டியது ஒரு புறம் இருக்க, மெம்பர்கள் எடுத்துச் சொன்ன பிறகும் கூட முழுக்க முழுக்க புறக்கணிக்கிறார்கள் என்பதைத் தாழ்மை யோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

அதுவும் என்னைப் போன்று தேர்தல் வழக்குகளில் சம்பந்தப்பட்டவர் களுடைய தொகுதிகளில் நடைபெறவேண்டிய காரியங்களில் இந்த எதிர்க் கட்சி மெம்பர்கள் காலத்தில் இந்த நன்மைகளைச் செய்து விட்டால் மீண்டும் வரக் கூடிய தேர்தல்களில் இந்த எதிர்க்கட்சி மெம்பர்கள்தான் நன்மை செய்தார்கள் என்று நினைத்து அவர்களுக்கு ஓட்டுப் போட்டு விடுவார்கள், என்ற அச்சத்தின் காரணத்தினால் இந்தத் தொகுதிகள் அறவே புறக் கணிக்கப்படுகின்றன.

என்னுடைய தொகுதி நெல்லை ஜில்லாவில் தென்காசி தாலூகாவின் கீழ் பகுதியும், சங்கரன்கோவில் தாலூகாவின் கீழ் பகுதியும் கொண் டது. அந்தப் பகுதியில் ஓரிரு பகுதிகளில் சிற்றாறு பாசன வசதி பெற்ற இடங்களைத் தவிர பெரும்பாலான பகுதிகளில் தெய்வாதீனமாக, சோதனை யாக சென்ற 15 வருஷ காலமாக மழை மிகவும் அற்ப சொற்பமாக இருந்து வருகிற காரணத்தினால் மீண்டும் மீண்டும் பஞ்ச நிலைமை ஏற் பட்டுக் கொண்டிருக்கின்றது. இந்த ஆண்டில் கூட மழை மிகவும் சொற் பம் தான் பெய்திருக்கிறது. ஆகவே, அங்கேயுள்ள விவசாயிகள் தங்க ளுடைய உடைமைகள், மாடுகள், இவைகள் எல்லாவற்றையும் விற்று விட்டு அவர்கள் சாரி-சாரியாக வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலை மையை சர்க்கார் கவனிக்க வேண்டிய கடமை இருந்தும் கூட, அவர்கள் தக்க நிவாரண நடவடிக்கைகள் எடுக்க வில்லை. இதற்குள் அங்கே பஞ்ச நிவாரண வேலைகளை ஆரம்பித்து மக்களுக்கு வேலைகள் கொடுத்து அவர்கள் வெளியே போகாமல் இருப்பதற்கு நடவடிக்கைகளை எடுத்திருக்க வேண்டும்.

அது போக வரி வஜா செய்வதோடு அந்தப் பகுதிகளிலே கடன் வசூல்களே யும் ஒத்தி வைத்து அவசியமான தகுதியான விவசாயிகளுக்கு—அதாவது ஏழ்மை நிலைமையில் கடன்களைத் திரும்பத் கொடுக்கக்கூடாத நிலைமையில் இருக்கிற விவசாயிகளுக்கு, மீண்டும் மீண்டும் அங்கே பஞ்சம் காரணமாக அவர்களுடைய பொருளாதார நிலை ரொம்பக் கீழ்ப்பட்டு கடன்களைத் திரும்பக் கொடுக்கக் கூடிய நிலைமையில் இல்லாமல் அவர்கள் நிலங்களை கடனுக்காக சர்க்காருக்கு விட்டு விடக் கூடிய நிலையில் இருக்கின்ற காரணத் தால் இந்த மாதிரியான ஏழை விவசாயிகளுக்கு அந்தக் கடன்களை வசூல் செய்யாமல் "ரைட் ஆப்" செய்ய வேண்டியது மிகவும் அவசியமாக இருக்கிறது.

கிட்டத் தட்ட, என்னுடைய தொகுதியில் பெரும்பாலும், நீலித்த நல்லூர், பழங்கோட்டை பிர்க்காவில், கிட்டத் தட்ட பாதி விவசாயிகளின் நிலங்கள் சர்க்காருடைய கடன் பொறுப்பில் இருக்கின்றன. ஏனென்றால் அங்கே பிளாக் டெவலெப்மெண்ட் ஸ்கீமின் அடிப்படையில் அவர்கள் வெகுவாக கடன்களை வாங்கி வாங்கி அவர்களுடைய நிலங்களைச் சர்க்கார் பொறுப்பில் விட்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் அவர்கள் அந்தக் கடன் களை எதற்காக வாங்கினார்களோ அதற்குரிய, அதாவது விவசாய காரியங்களுக் கான உரங்கள், மற்ற சாமான்கள் வாங்கி விவசாயத்தில் போடுகிறார்கள். வானம் பார்த்த பூமியாக இருக்கிற காரணத்தினால், பின் மழை இல்லாத நிலைமையில் பயிர்கள் பெரும்பாலும் வழக்கமாக கருகி விடுகின்றன. போட்ட பணம் அவர்களுக்கே திரும்பக் கிடைக்க முடியாத நிலை மேற் கண்ட காரணத்தால் ஏற்பட்டு விடுகின்றன. ஆகவே அந்தப் பகுதிகளில் எந்தெந்த விவசாயிகள் மிகவும் ஏழ்மை நிலைமையில், அதாவது சர்க்கார் கடன்களை திரும்பக் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்களோ அவர்களுடைய கடன்களை "ரைட் ஆப்" செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்த இரண்டு பிர்க்காக்களும் சென்ற ஆறு வருஷ காலமாக பிளாக் டெவலெப்மெண்ட் ஸ்கீமில் இருக்கின்றன. இந்த ஆறு வருஷ அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் இந்தப் பகுதிகள் இருந்தும் அங்கே இப்போது சென்று பார்ப்பீர்களேயானால் கூறையோ, கதவோ இல்லாத பாடசாலைகள், மண் சுவர் உள்ள பாடசாலைகளைப் பார்க்கலாம். ரோடுகள் இல்லாத பல கிராமங் களை அங்கே காணலாம். சில கிராமங்களில் குடி தண்ணீர் கிணறுகள் கூட இல்லாத நிலை இருக்கின்றன. இந்த மாதிரி அத்தியாவசியத் தேவைகளைக் கூட அங்கே உள்ள மக்கள் பெறவில்லை. அவர்களிடம் திட்டத்தில் ஒத்தாசை மனப்பான்மை இல்லை என்பதில்லை. அவர்களிடம் பணம் இல்லாத காரணத்தினால், அவர்கள் போதிய உதவித் தொகை அதாவது கூடிய விகித உதவித் தொகை கொடுக்க முடியாத நிலைமையில் அவர்கள் இருக்கும் காரணத்தினால் இந்த அத்தியாவசியமான தேவை களைக்கூட அவர்கள் பூர்த்தி செய்யமுடியாத நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே, இந்த நாட்டில் பல்வேறு அபிவிருத்திப் பகுதிகள் எல்லாவற் றுக்கும் ஒரே "ப்ளாட் ரேட்" ஆக, "காண்ட்ரிப்யூஷன் ரேட்" உதவித் தொகை விகிதம் இருப்பதை மாற்றி பிற்பட்ட பகுதிகளுக்கு "கன்ஸெஷன் இன் காண்டிரிப்யூஷன்" உதவித் தொகை விகிதத்தில் குறைப்பு செய்து கொடுக்க வேண்டும். அதாவது, உதவித் தொகையில் "டோகன் காண்ட்ரிப்யூஷன்" மாதிரி, குறைந்த அளவு வாங்கிக்கொண்டு, அவர்களுடைய அத்தியாவசிய வேலைகளுக்கு அவர்களுக்குச் சலுகை அளித்து அந்த தேவைகளை நிறைவேற்ற வேண்டியது அவசியமாக இருக் கிறது. இவற்றிற்கு முன்பாகவே, அரசாங்கம் கவனித்திருக்க வேண்டும். அவற்றைச் சம்பந்தப்பட்ட அமைச்சர் அவர்களிடம் மக்களும் நானும் மனு மூலமாகவும் நேரிலும் சொல்லியும் இதுவரையில் யாதொரு நட வடிக்கையும் எடுக்கப்படவில்லை.

அதுபோக, என்னுடைய பகுதிகள் வேறு பல காரியங்களிலும் புறக் கணிக்கப்படுகின்றன. எல்லாவற்றுக்கும் அரசியல் காரணங்கள் தான் காரணம். ஹரிஜன இலாகா மூலமாக வீடு கட்டும் திட்டம் நடைபெறுகிறது.

13th March 1959] [Sri T. Veluchamy]

இந்தத் திட்டத்தின் முழு பயனேயும் ஹரிஜன மக்களும், வேறு பிற்பட்ட மக்களும் அதிகமாக வசிக்கும் எங்கள் பிராந்திய மக்கள் அடைய வில்லை. சரியாகப் பார்த்தால் நெல்லை ஜில்லாவில் என்னுடைய பகுதி யில்தான் ஹரிஜனங்களும் மறவர்களும் அதிகமாக வசிக்கிறார்கள். குறிப் பாக, பழங்கோட்டை, நீலிதநல்லூர், ஆலங்குளம் பகுதிகளில் பல கிராமங் களில் வீடுகள் கட்டவேண்டிய ப்ரோபோசல் முதலில் இருந்தும் பின்னால் யாது காரணத்தினாலோ என்னமோ அந்த ப்ரொபோசல் கைவிடப்பட்டது.

அதற்கடுத்தாற்போல், தொழிற்சாலைகள் கட்டி இந்த மக்களுக்கு வேலை கொடுக்கக்கூடிய திட்டங்கள் அதாவது தீப்பெட்டித் தொழிற்சாலை, செங்கல் சூளை, சிமிட்டித் தொழிற்சாலை, இப்படியாக மத்திய அரசாங்க மான்ய உதவி பெற்று நடைபெறக்கூடிய அந்தத் தொழிற்சாலைத் திட்டங் களில் பல்லாயிரக்கணக்கில் ரூபாய்கள் இருந்தும், எங்கள் பகுதியில் யாதொரு திட்டமும் எடுக்கப்படவில்லை. அந்தப் பகுதியில் எடுக்கப்பட வேண்டும் என்று பல முறை வற்புறுத்தப்பட்டும் இருக்கிறது. ஹரிஜன, மறவர் மக்கள் நெருங்கி வாழும் இத்தகைய பகுதிகளில் பயன்படக்கூடிய அந்தத் திட்டங்கள் ஆரம்பிக்கப்படவில்லையென்றால், அந்தத் திட்டத்தின் நோக்கமே வெற்றிபெறாத ஒரு நிலைமையில் போய் விடுகிறது என்பதை இங்கே எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

இதுபோக எனது தொகுதியில் கிட்டத்தட்ட 15 மைல் நீளம் 15 மைல் அகலத்திலுள்ள ஒரு பிரதேசத்தில் ஒரு ஹைஸ்கூல் கூட கிடையாது. சாதாரணமாக ஒரு குடும்பத்தை நாம் முன்னேற்ற வேண்டு மானால், அந்தக் குடும்பத்திலுள்ள குழந்தைகள் நன்றாகப் படிக்க வேண்டும். அந்தக் குழந்தைகள் நன்றாகப் படித்து நாட்டிலுள்ள பல் வேறு தொழில்களிலே அறிவு பெற்று, நல்ல முறையிலே ஜீவனம் செய்யக்கூடிய முறையில், வாழ்க்கையிலே முன்னேறக்கூடிய பண்புகள் வளரக்கூடிய முறையில் இருக்கவேண்டுமானால் கல்வி புகட்ட வேண்டியது அவசியம். கல்வி தான் சரியான அபிவிருத்தி அம்சம் என்பதை யாரும் மறுக்க முடியாது. நமது நாட்டை முன்னேற்றவேண்டும் என்று நாம் தீட்டியிருக்கும் தேசிய வளர்ச்சித் திட்டத்தில் கல்வியைக் கூடிய அளவில் நிறைவேற்றக் கூடிய லட்சியம் இருந்த போதிலும், மிகவும் பிற்பட்ட மக்கள் இருக்கும் எங்கள் பகுதியில், ஒரு ஹைஸ்கூல் கூட இல்லாத இந்த பிரதேசத்தில், ஹைஸ்கூல் அமைக்கவேண்டியது அபிவிருத்தித் திட்டத் தின் ஒரு முக்கியமான அம்சம் என்பதை சர்க்கார் உணர்ந்து இதற்கு முன்பாகவே நடவடிக்கை எடுத்திருக்க வேண்டும். இந்தக் கோரிக்கையை யும் மந்திரி அவர்களிடம் நான் சொல்லியும் அவர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை. இம்மாதிரியான நிலைமையில் மிகுந்த பாரபட்சம் நிலவு கிறது. எதிர்க்கட்சி மெம்பர்களைப் பிடிக்கவில்லையானால், எங்களுக்கு கஷ் டங்கள் கொடுங்கள். அதுபற்றி காரியம் இல்லை. ஏற்கனவே கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு இருக்கிறோம். இன்னும் எத்தனை கஷ்டங்கள் வந்தாலும், எத்தனை தேர்தல் மனுக்கள் வந்தாலும் நாங்கள் அதற்குச் சளைக்கப் போவதில்லை. ஆனால், மக்களைப் பாரபட்சமாக நடத்துவது மிக பாபகரமான காரியம் என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அது போக, நீங்கள் இப்போது மக்களுக்கு நன்மை செய்யாத நிலைமை யில் இருந்தால், அவர்கள் ஆளும் கட்சியை ஆதரிப்பார்கள் என்று சொல்ல முடியாது. அவர்கள் தன் மானத்தைக் காப்பாற்றக்கூடிய நிலை மையில் தான் இருப்பார்கள். நன்மை செய்ய வேண்டியவர்கள் நன்மை செய்யவில்லையானால் அவ்விதம் நன்மை செய்யாதவர்களுக்கு மீண்டும் மீண்டும் பாடம் கற்பித்துக்கொண்டுதான் இருப்பார்கள் என்று சொல்லிக் கொண்டு எனது வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

*DR. SRIMATHI SATHIYAVANIMUTHU : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல நான் விரும்புகிறேன்.

கவர்னர்—அவருக்கு கொடுக்கப்படுகிற சம்பளம் அதிகமாக இருக்கிறது என்று நாங்கள் காட்டுகின்ற காரணம், நாடு வறுமையிலே தாண்டவம் ஆடுகிறது, பசி, பட்டினி, பஞ்சம் இன்னும் போக்கப்படவில்லை, வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் நீக்கப்படவில்லை, அவைகளுக்கெல்லாம் ஒரு மாறுதல் காணவேண்டுமென்றால், "பணம் இல்லை, எனவே தொழிற்சாலை வைக்க முடியவில்லை" என்று சொல்லுகிற இந்தச் சர்க்கார் கவர்னருக்காக இவ்வளவு லட்சக்கணக்கான சம்பளத்தைக் கொடுக்க வேண்டுமா, பணம் பாழாகிறதே என்று எடுத்துச் சொல்கிறோம்.

கவர்னர் என்கிறபோது, அவர் மீது இருக்கும் விருப்பு வெறுப்பு அல்ல எங்களுக்கு இருப்பது. கவர்னராக இப்பொழுது இருப்பவர் ஒரு வட நாட்டுக்காரர், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் அல்ல, அந்தப் பதவி இருக்கத்தான் வேண்டுமா, அதன் மூலம் இத்தனை லட்சம் ரூபாய் பாழாக்கப்படவேண்டுமா என்று கடந்த முறை சட்ட மன்றத்தில் கேட்ட போது நிதி அமைச்சர் அவர்கள் கூறிய விளக்கம், சட்ட மன்றத்திலே சட்ட ரீதியாக ஆளுகிற கட்சிக்கும் எதிர்க்கட்சிக்கும் ஏதாவது தகராறு, குழப்பங்கள் ஏற்பட்டால், அதனை நடுநிலைமையாக இருந்து தீர்த்து வைப்பதற்காக ஒருவர் தேவை என்றும், அதற்காகத்தான் கவர்னர் இருப்பதாகவும் கூறினார்.

எனவே, இங்கு குழப்பங்கள் ஏற்படும் என்று யூகிக்கிறார்கள். அந்தக் குழப்பங்களைத் தீர்த்து வைப்பதற்கு தென்னகத்திலே, தமிழ் மாநிலத்திலே, சென்னை ராஜ்யத்திலே யாரும் அந்தக் குழப்பத்தைத் தீர்த்து வைக்கக் கூடாது, டில்லி சர்க்காரால் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்புகிற ஒருவர்தான் அந்தக் குழப்பத்தைத் தீர்க்க வேண்டும் என்று டில்லி சர்க்காரால் இந்த கவர்னர் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்படுகிறார். எனவே, கவர்னராக இருப்பவர், குழப்பத்திற்குப் பரிகாரம் காணக்கூடியவர், டில்லி சர்க்காரால் அனுப்பப்படுகிறவர், என்று எண்ணும்போது எங்களைப் போன்றவர்கள், இந்த நாட்டிலே குழப்பம் கூடாது என்று மாத்திரம் நாங்கள் விரும்பவில்லை, அப்படிக் குழப்பம் ஏற்பட்டால் இங்கே அதனை தீர்த்து வைக்க நல்ல நடுநிலையாளர்கள் நல்ல உள்ளம் படைத்தவர்கள், நல்ல தேச முன்னேற்றத்திலும் தேசத்தின் பாதுகாப்பிலும் அக்கறையுள்ள நல்ல தேச பிதாக்களும் சட்டம் படித்த நீதிபதிகளும் இந்த நாட்டில் இல்லையா ? அதிலும் காங்கிரஸ் கட்சியின் உறுப்பினராக இருந்து, பல பதவிகளிலே அங்கம் வகித்து, காங்கிரஸ் கட்சிக்காக அன்றிலிருந்து இன்று வரை பாடுபடுகிறவர்கள் தான் அந்தப் பதவியை ராஜினாமா செய்துவிட்டு, "கவர்னர்" என்ற பொறுப்பை ஏற்று வருகிறார்கள். பதவிக்கு வந்தாலும் மனது கட்சிச் சார்பிலே செல்லுமே தவிர பதவியை, யாரும் எண்ணிப் பார்க்கமாட்டார்கள். காங்கிரஸ்காரராக இருந்த ஒருவர், அந்தக் கட்சியிலிருந்து ராஜினாமா செய்துவிட்டு கவர்னராக வந்தபின்பும் காங்கிரஸ் கட்சியின் சார்பாகத்தான் தீர்ப்பு தருவார்களே தவிர, நல்ல முறையிலே தீர்ப்பு இருக்கும் என்று எங்களைப் போன்றவர்கள் நினைத்துப் பார்க்க முடியவில்லை. இன்னும் அவர்கள் மூலமாகச் செய்கின்ற செலவினங்கள், அவர்கள் சுற்றுப்பிரயாணங்கள், இந்த நாட்டு மக்களுக்குத் தேவையானதாக நாங்கள் கருதவில்லை. சட்ட மன்றத்தில் வர இருக்கிற மசோதாக்கள் குறித்து, இந்த மசோதா கொண்டுவரப்படும், இந்த பட்ஜெட் இந்த முறையிலே அமைய இருக்கிறது என்றெல்லாம் கவர்னர் முன்கூட்டியே சொல்கிறார். இந்த வரவு செலவுத் திட்டத்தைப்பற்றி முன் கூட்டியே சொல்கிறவர்கள், இன்ன மசோதா இந்தச் சட்ட மன்றத்திலே வரவேண்டும் என்று சொல்கிற கவர்னருக்கு பொறுப்பு மிக அதிகம் உண்டு என்று நாங்கள் கருதுகிறோம். ஆனால், அப்பேர்பட்ட மேன்மை தங்கிய கவர்னர் என்றைக்காவது ஒருநாள் இந்த மன்றத்திலே வந்து, மன்றத்திலே நடைபெறுகிற நிகழ்ச்சிகளை அக்கறையோடு கவனிக்கிறாரா என்று பார்த்தால் நான் பார்க்கவில்லை ஒருநாள் கூட அவராக வந்ததை காணோம். ஆனால், வருஷத்துக்கு ஒரு முறை, ஆலயத்தில் அடைபட்டுக்

கிடக்கின்ற ஆண்டவனை வீதியிலே அழைத்து வந்து ஊர்வலம் நடத்துவதைப் போல், வருஷத்திற்கு ஒரு முறை கவர்னர் அவர்கள் ஊர்வலமாக இங்கே வரவழைக்கப்பட்டு, இங்கே பூஜை செய்யாவிட்டாலும், அவருக்கு மதிப்பிற்குரிய இடத்தைத் தந்து, அவர் சில உத்தரவுகள் பிறப்பித்துவிட்டு சென்றுவிட அனுமதிக்கப்படுகிறார். இந்த நாட்டு மக்களைக் குறித்து இந்த மன்றத்தில் ஆற்றப்படுகிற செய்திகளைப்பற்றி, இன்ன மசோதா இங்கே வரவேண்டும் என்று கட்டளையிடுகிறவர் மற்ற நேரங்களில் ஏன் வரக்கூடாது என்று சொன்னால் தவறாக நீங்கள் எடுத்துக் கொள்ளு கிறீர்கள். அது போன்று அமைச்சர்கள் எல்லோரும் அமைச்சர் பதவிக்கு வந்த பிறகு அவர்கள் எல்லோரும் கட்சிக்கு அப்பாற்பட்டவர்கள் என்ற கருத்தோடு அவர்கள் இருக்க வேண்டும். அமைச்சர்கள் பொது மக்க ளுடைய வரிப்பணத்திலிருந்து தான் சம்பளம் வாங்குகிறார்கள். பொதுப்பணத்திலிருந்து சம்பளம் வாங்குகிற அமைச்சர்கள் சில இடங்களில் வெளியே போய் தேர்தல் பிரசாரம் செய்கிறார்கள். என்ன பிரசாரம் செய்கிறார்கள் என்றால் எங்களுக்கு வோட்டுப் போடாவிட்டால் காவேரி ஆற்றுத் தண்ணீரை விட மாட்டோம், குடிசைகளைப் பிய்த்து எரிந்து விடுவோம் என்றும் தேர்தல் பிரசாரங்களில் பேசும்போது சொல்லுகிறார்கள். இதைக் கேட்டு மக்கள் பயந்துகொண்டு அமைச்சர் களே இப்படிச் சொல்லி விட்டார்களே, எங்கே குடிசைகளை பிய்த்து எரிந்து விடுவார்களோ என்று பயந்துகொண்டு ஆளும் கட்சியைச் சேர்ந்த வர்களுக்கே வோட்டுப்போடுகிறார்கள். இது ஜனநாயக முறைக்கு அழகு அல்ல. ஆளுகிற கட்சி இப்படி பிரசாரம் செய்வது சரியல்ல.

எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் தங்களுடன் ஒத்துழைக்கவில்லை என்று சொல்லுகிறார்கள். எப்படிப்பட்ட சட்டத்தைக் கொண்டு வந்தாலும் அது நல்ல சட்டம் என்றும் எப்படிப்பட்ட திட்டத்தைக் கொண்டு வந்தாலும் அது நல்ல திட்டம் என்றும் மக்களிடத்தில் எடுத்துச்சொல்லி அதற்கு ஆதரவு தேடித்தர வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படிச் செய் தால் தான் ஒத்துழைப்பு என்று அவர்கள் கருதுகிறார்கள். நிதி அமைச்சர் அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்றால் மக்கள் மத்தியில் சென்று காங்கிரஸ் சர்க்கார் கொண்டு வரக்கூடிய திட்டத்திற்கு ஆதரவு சேகரித்துத் தர வேண்டும் என்று சொல்லுகிறார். அப்படிச் சொல்லுகிறவர்கள், திட்டத்தை உருவாக்குவதற்கு முன்னதாகவே அந்த திட்டத்தைப்பற்றி எங்களிடத்தில் சொல்லி, அதற்கு என்ன மாறுதல் செய்ய வேண்டுமென்ற யோசனைகளைக் கேட்டு அதன் பிறகு அந்த திட்டத்தை சட்டசபையில் வைத்து நிறைவேற்ற முன் வந்தால் அதற்கு எங்களால் ஒத்துழைக்க முடியும். எங்களிடத்தில் ஒன்றுமே சொல்லாமல் திட்டத்தை சட்ட மன்றத்தில் கொண்டு வந்து பெரும்பான்மையாகயிருப்பதால் எந்த ஒரு திருத்தத்தையும் ஏற்காமல் நிறைவேற்றி விட்டு அதன் பிறகு அமுல் செய்யும்போது எங்களுடைய ஒத்துழைப்பு வேண்டுமென்று சொன்னால் அப்பொழுது எப்படி கொடுக்கமுடியும் என்று கேட்கிறேன். சட்டமாக்குவதற்கு முன்னதாக எங்களிடத்தில் வந்தால் எங்களுடைய விளக்கத்தைக் கொடுப்ப தற்கு வசதியாக இருக்கும், அப்பொழுது நல்ல முறையில் போடப்பட்ட திட்டங்களை நிறைவேற்றலாம். அப்படி இல்லாமல் இருப்பதால் தான் சட்ட மன்றத்தில் அதற்கு எதிராக பேசுகிறோம், அதன் மூலமாக எங் களுடைய எதிர்ப்பைக் காட்டுகிறோம். பொது மக்களுக்கு எதிராக சட்ட மன்றத்தில் சட்டங்கள் உருவாக்கப்படுகிறது என்று சொல்லுகிறோம். எந்த சட்டம் வந்தாலும் அது நிறைவேற்றப்பட்டு விடுகிறது. காரணம் அவர் களுக்கு 151 பேர்கள் இருக்கிறார்கள். மற்றும் எதிர் கட்சிக்காரர்களைப் பற்றி குறிப்படும்போது அவர்கள் தவறாகப் பேசுகிறார்கள் என்றும் சொல்லு கிறார்கள். இந்த இரண்டு ஆண்டுகளாகச் சட்ட மன்றத்தில் நடந்த நிகழ்ச்சிகளை எடுத்துப் பார்த்தால் தெரியவரும். ஆளும் கட்சியைச் சேர் ந்தவர்கள் எதிர்க் கட்சியிலுள்ளவர்களைப் பற்றி எவ்வளவு கேவலமாகப் பொறுப்பற்ற முறையில் பேசியிருக்கிறார்கள் என்பதும் தெரிய வரும். எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் வெளியே தாறுமாறாகப் பேசுகிறார்கள் என்றும் சொல்லுகிறார்கள். அதைக் கண்டு நான் வேதனைப்படுகிறேன்

எதிர்க் கட்சிக்காரர்களைப்பற்றி அமைச்சர்கள் வெளியே தாறுமாறாகப் பேசுகிறார்கள். நாங்கள் பேசுவதெல்லாம் அவர்களுக்கு சி. ஐ. டி. மூலமாக வருகிறது பார்த்துக்கொள்ளலாம். ஆனால் அவர்கள் பேசுவதெல்லாம் சி.ஐ.டி மூலமாக வருவதாக இல்லை. அவர்கள் பேசுவதை யாரும் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். ஆனால் எதிர்க் கட்சிக்கார்கள் பேசுவதை மட்டும் தவறாகப் பேசுகிறார்கள் என்று எடுத்துக்கொள்ளுகிறார்கள். எடுத்துக்காட்டாகச் சொல்ல வேண்டுமானால் பொது மக்கள் தமிழ் அறிஞர்கள் தமிழ் பற்றுள்ளவர்கள் அவ்வளவு பேர்களும்.

ஆகாசவாணி என்ற பெயரை எடுத்து விட்டு வானொலி என்ற பெயரை வைக்க வேண்டும் என்று போராட்டத்தை நடத்திக்காட்டுகிறார்கள். பலர் உண்ணாவிரதம் இருந்து காட்டி வருகிறார்கள். என்னைப் போன்றவர்கள் சென்னை வானொலியில் பேசுவதற்கு மறுத்து விடுகிறார்கள். இப்படி பெயரை மாற்ற வேண்டும் என்று ஏகோபித்த எண்ணம் இருக்கிறது. பொது மக்கள் இதை ஆதரிக்கிறார்கள். கூக்குரல் இடுகிறார்கள். ஆகாஷ்வாணி என்ற பெயரை எடுத்து விட்டு ஏன் வானொலி என்ற பெயரை வைக்கக்கூடாது. அமைச்சர்கள் பேசும்போது அதற்கு விளக்கத்தைக் கொடுத்திருக்கலாம். அதைப்பற்றி குற்றம் குறை சொல்லவில்லை. ஆனால் அவர்கள் ஆகாஷ்வாணி என்று பெயர் இருக்கக்கூடாது என்று எதிர்கட்சிக்காரர்கள் சொல்லுகிறார்களே, அவர்கள் தங்களுடைய பெயரை சத்யவாணி என்று வைத்துக்கொண்டிருக்கிறார்களே, அதை மாற்றிக்கொள்ள வேண்டாமா, அது வட மொழி அல்லவா என்ற முறையில் பேசுகிறார்கள். எனவே தனிப்பட்ட முறையில் பெயரை வைத்துக்கொள்வதில் ஒன்றும் இல்லை. இதைக் குறித்து அமைச்சர்கள் வெளியே சென்று பேசுவது முறையாகாது. அப்படி பெயரை மாற்றிக்கொள்ள வேண்டும் என்று தனிப்பட்ட முறையில் என்னிடம் வந்து கேட்டால் அந்தக் கோரிக்கை சற்று கவனிக்கப்படும் என்று நான் கூற முடியும் (சிரிப்பு) இதைப்பற்றி வெளியே கேள்விகள் கேட்கப்படுகிறது. அதற்கு பதில் சொல்ல வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

அமைச்சர்கள் சில தொகுதிகளுக்கு வந்து பார்வையிடுகிறார்கள். அப்பொழுது அந்தத் தொகுதி அங்கத்தினர்கள் எதிர்க் கட்சிக்காரர்களாக இருந்தால் அவர்களைக் கூட்டிக்கொண்டு பார்வையிடுவது கிடையாது. ஆனால் ஆளும் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்களாக இருந்தால் அவர்களைக் கூட்டிக்கொண்டு பார்வையிடுகிறார்கள். அதைப்பற்றி பல முறை அமைச்சர்களிடத்தில் எடுத்துச் சொல்லியும் இருக்கிறது. எனது தொகுதி பிற்போக்கான தொகுதி, அதிலும் மிகவும் பிற்போக்கான தொகுதி, குடிசைகள் நிறைந்த தொகுதி. அங்கேயுள்ள குடிசைகளை சர்க்கார் பிய்த்து எரிந்து கொண்டிருக்கிறார்கள், குடிசைகளை பிய்த்து எரிவதோடு மட்டுமல்லாமல் அங்குள்ள மக்களுக்கு வேறு இடங்களும் கொடுக்கப்படவில்லை. அப்படி பாதிக்கப்பட்ட மக்கள் ஆதி திராவிட மக்கள். இதைப் பற்றி முதல் அமைச்சரிடம் பேட்டி கண்டு குறைகளை எடுத்துச் சொன்னேன். அதற்கு அவர் என்ன பதில் சொன்னார் என்றால் தான் டில்லிக்கு செல்வதாக இருப்பதாகவும், திரும்பி வந்தவுடன் பார்வையிடுகிறேன் என்றும் சொன்னார். அப்பொழுது எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பார்வையிட்டு ஆலோசனைகளைக் கேட்டு அதற்கு ஒரு பரிகாரம் காணுவோம் என்றும் சொன்னார். அன்று மாலை முதலமைச்சர் கூட்டத்திற்கு செல்ல வேண்டி இருந்தது. கூட்டத்தில் பேசிய முதலமைச்சர் அந்த நிலைமைகளை எடுத்து விளக்கி டெல்லி சென்று திரும்பியதும் அந்த வட்ட நகரக் சபை காங்கிரஸ் கட்சி உறுப்பினருடன் நேரில் வந்து பார்வையிடுவதாகக் கூறியதாக எனக்குக் கூறப்பட்டது. இப்படிப்பட்ட ஒரு தவறான கருத்து அவர்கள் மனதில் இருக்கிறது. ஒன்று என்னைக் கூட்டிக்கொண்டு போய் பார்வையிட வேண்டும் அல்லது அந்தப் பகுதியைச் சேர்ந்த மற்றொரு அங்கத்தினராகிய மதிப்பிற்குரிய பக்கிரிசாமி அவர்களையாவது கூட்டிக்கொண்டு போய் பார்வையிட வேண்டும் இப்படியெல்லாம் செய்தால் எப்படி ஒத்

13th March 1959] [Dr. Srimathi Sathiyavanimuthu]

நுழைக்க முடியும். ஒரு தொகுதியைப் பார்வையிடும்போது அந்த தொகுதியில் எந்தக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினராக இருந்தாலும் அவரைக் கூட்டிக்கொண்டு போய் தான் பார்வையிட வேண்டுமே தவிர மற்றவர்களைக் கூட்டிக்கொண்டு பார்வையிடுவது என்பது சரியல்ல. தொகுதி என்று வரும்போது அந்தத் தொகுதிக்கு சேவை செய்ய அமைச்சர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். நாங்களும் கடமைப்பட்டிருக்கிறோம்.

இரண்டாவதாக இப்பொழுது அதிகப்படியாக செலவு செய்யப்படுகிறது. சிக்கனம் வேண்டும் என்று சொல்கிறார்கள். இப்படி சொல்லிக்கொண்டு உதகைக்குச் சென்று சட்டசபையை நடத்த இருக்கிறார்கள். இப்பொழுது அங்கத்தினர்களுக்கு படி $12\frac{1}{2}$ ரூபாய் கொடுக்கப்படுகிறது. அங்கே சென்றால் படி $18\frac{3}{4}$ ரூபாய் கொடுக்கப்போவதாகச் சொல்லப்படுகிறது. இதை நான் பத்திரிகையில் பார்த்தேன். எப்படி இருந்தாலும் அது தவறான காரியம். பொது மக்களுடைய வரி பணத்தில் $12\frac{1}{2}$ ரூபாய் கூட வாங்கக் கூடாது என்று சொல்லக்கூடியவர்கள் நாங்கள் அதை விட்டு விட்டு தாங்களே $18\frac{3}{4}$ எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னால் அது சரியாகாது. இதைப் பார்த்து விட்டு சர்க்கார் சிப்பந்திகள் அதிகமாக கேட்க மாட்டார்களா, ஆசிரியர்கள் அதிகமாக சம்பளம் கேட்க மாட்டார்களா என்று கேட்கிறேன். இப்படி ஒவ்வொருவரும் அதிகமாக சம்பளம் கேட்க முற்பட மாட்டார்களா என்பதை தெரிந்து கொள்ள வேண்டும். அப்படி அவர்களுக்கு எல்லாம் சம்பளத்தை உயர்த்திக் கொடுக்காமல் தாங்கள் அதிகப்படியாக எடுத்துக்கொள்வது முறையாகாது அது மிகமிக தவறாகும் என்று எடுத்துச் சொல்லி என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

*SRI D. S. AUTHIMOOLAM : மிஸ்டர் ஸ்பீக்கர் ஸார், இந்த வெட்டு பிரேரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். பொதுவாக இப்பொழுது சூழ் நிலை நல்லதாக இல்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். இந்த மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை தான் ஆரம்பத்திலிருந்து இருக்கிறது. ஜஸ்டிஸ் பார்ட்டி வெளியே போனதிலிருந்து அதற்குப் பிறகு வந்த மந்திரி சபையெல்லாம் காங்கிரஸ் மந்திரி சபைதான் அப்பொழுது காங்கிரஸ் பார்ட்டி ஆள்கள் ஜாஸ்தி தலையீடு இல்லாமல் எல்லோருக்கும் சம சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் இப்பொழுது நாலைந்து வருஷமாகப் பார்த்தால் அது மறைந்து விட்டது என்பதை நான் மரியாதையோடு சொல்ல வேண்டியதாக இருக்கிறது. முக்கியமாக ராஜாஜி, ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்கள் காலத்தில் கட்சி ஆதிக்கம் ஜாஸ்தி இல்லாமல் இருந்தது எல்லோருக்கும் ஒரு பெருமையாக இருந்தது. அந்த பெருமையெல்லாம் இப்பொழுது இல்லை. எனக்கு நன்றாகத் தெரியும் கட்சி பெருமையோடு எல்லோரும் இருந்தார்கள். அவர்கள் தலையிடுவது இல்லை. அதே கட்சி இப்பொழுது இருந்தாலும் அப்படிப்பட்ட சூழ் நிலை இப்பொழுது இல்லை. இப்பொழுது இருக்கிற சூழ்நிலையைப் பார்த்தால் ரொம்பவும் பயங்கரமாக இருக்கிறது.

இந்தச் சூழ்நிலையை மாற்றியாக வேண்டும். அன்று, ராஜாஜி அவர்கள் காலத்திலும், ஓ. பி. ராமசாமி ரெட்டியார் அவர்கள் காலத்திலும் எப்படி எல்லாக் கட்சிக்காரர்களையும் அன்போடு நடத்திக்கொண்டு போனார்களோ எல்லோரையும் நல்ல ஒரு மனப்பான்மையோடு நடத்திக்கொண்டு போனார்களோ அந்த விதமாக நீங்கள் நடத்த வேண்டும். சென்ற 4 வருஷ காலமாக அந்த "ரெஸ்பெக்ட்" ரொம்ப "லாக்கிங்" (Lacking) ஆக இருக்கிறது என்பதை மரியாதையோடு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். "கான்ஸ்டிட்யூஷன்" படி நாம் ஒரு ஜனநாயக நாடு என்ற முறையில் இருக்கிறோம். எதிர்க்கட்சியில் ஒருவன்கூட இருக்காத நிலைமை ஏற்பட்டால் அப்பொழுது "கான்ஸ்டிட்யூஷனை" மாற்றியாக வேண்டும். அந்த நிலைமை ஏற்படாமல் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த "மினிஸ்டர்கள்" "டூருக்கு" **(Tour)** போகும்போது தங்கள் ஆட்களை நிறைய அழைத்துச் செல்லுகிறார்கள். "மினிஸ்டர்கள்" அங்கிருந்து சென்ற பிறகு ஏதாவது காரியம் ஆகவேண்டுமென்றால் அந்த ஆட்களை அணுகினால்தான் காரியம் நடக்கும் என்று பொது ஜனங்கள் நினைத்துக் கொள்ளுகிறார்கள். **(Tour programme)** டூர் பிரோகிராம் போடும் போது கட்சி ஆட்களைப் பூராவும் வைத்துக்கொண்டு போடுவது சரியல்ல. ஆபீசர்களைக் கலந்துகொண்டு இந்த **(Tour)** டூர் ப்ரோகிராமைப் போட்டு அதன்படி போய்க்கொண்டிருந்தால் அந்தக் குறிப்பிட்ட ஆட்களுக்கு முக்கியத்துவம் ஏற்படாமல் இருப்பதோடு ஜில்லாக்களிலும் சிபார்சு செய்ய வேண்டுமென்ற சூழ்நிலை குறைந்து விடும். இப்பொழுது பார்த்தால் சாதாரண ப்யூன் வேலை முதற்கொண்டு, மாதம் 15,000, 20,000 ரூபாய் சம்பாதிக்கக்கூடிய ஸ்டாக்கிஸ்ட், கண்ட்ரோலர் ஆகியவைகள் உட்பட கிடைப்பதற்கு சிபார்சு செய்யவேண்டியிருக்கிறது என்று ஜனங்கள் நினைக்கிறார்கள். இந்த மாதிரி சூழ்நிலையை மாற்றவேண்டும். இந்த மாதிரி ஒரு சூழ்நிலை இருக்கிறது என்பதை மந்திரி சபை கட்டாயம் ஒப்புக் கொள்ளும் என்று நான் நினைக்கிறேன். இதற்காகத்தான் ராஜாஜி அவர்கள் காலத்தில் ஒரு சர்க்குலர் அனுப்பினார்கள். அந்த மாதிரி ஒரு சர்க்குலர் இன்டர்பரன்ஸ் **(Interference)** கூடாது என்று அனுப்ப யோசனை செய்து அந்த முறையில் அனுப்பி திருப்பு முனையில் திரும்ப வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது எலக்ஷன் விஷயங்கள் பற்றிச் சொன்னார்கள். தொகுதிகள் இன்னும் சிறிதாக்கப்பட வேண்டுமென்று சொன்னார்கள். அதை யெல்லாம் நான் ஒத்துக்கொள்ள முடியாது. இப்பொழுது இருக்கும் எண்ணிக்கையே அதிகம், 150 உறுப்பினர்களாகக் குறைந்தால் நல்லது என்று நான் நினைத்துக்கொண்டிருக்கிறேன். இப்பொழுதே 5 நிமிஷம், 10 நிமிஷம்தான் பேச முடிகிறது. எலக்ஷன் முறையை மாற்றியமைக்கச் சர்க்கார் யோசனை செய்யவேண்டும். மத்திய சர்க்காரிடம் சொல்லி, பார்ட்டி படி எவ்வளவு ஓட்டு கிடைத்திருக்கிறதோ, அந்த பர்சென்டேஜுக்கு **(Percentage)** தகுந்தபடி அந்தந்தக் கட்சியிலுள்ள உறுப் பினர்கள் எண்ணிக்கை அமைய வேண்டும். அந்த மாதிரி அனுப்பினால் சுயேச்சை மெம்பர்கள் அடிபட்டுப் போவார்கள். சுயேச்சை என்று பேப்பர் களில் போடும்போது எனக்கு மானக்கேடாக இருக்கிறது. ஆனால் வேறு வழி இல்லை. "சுதந்திரா" என்று போடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன். இந்த நாட்டிலுள்ள கட்சிகள் சரியானபடி வேலை செய்ய வேண்டுமென்று சொன்னால், எலெக்ஷன் முறையை மாற்றியமைத்தால் தான், பர்சன்டேஜ்படி ஒவ்வொரு கட்சிக்கும் ஸ்தானம் ஒதுக்கினால்தான் தகுந்த மாதிரி "ரெப்ரசன்டேஷன்" கொடுக்க முடியும். அப்படிச் செய்தால்தான் ஜனநாயகம் நம்முடைய நாட்டில் இருக்கும். இல்லை யென்றால் "சிங்கில் பார்ட்டி ரூல்" **(Single party rule)** ஆக வந்து விடும். மற்றபடி "கான்ஸ்டிட்யூயன்சி" **(Constituency)** இப்பொழுது இருக்கிறபடி இருந்தால் போதும். இதை விடச் சிறிதாக வேண்டாம். பெரிதாக்க வேண்டுமானால் யோசிக்கலாம். எலக்ஷன் முறை இப்பொழுது ஏதோ ஓரளவு திருப்தியாக நடந்துகொண்டிருக்கிறது. இப்பொழுது எலக்ஷனுக் காக செலக்ஷன் ஆப் கான்டிடேட்ஸ் செய்வதில் இப்பொழுது இருப்பதை விட கொஞ்சம் நல்ல முறையில் இருக்க வேண்டும் என்று கூற விரும்பு கிறேன்.

**Mr. SPEAKER** : How is it relevant to the discussion ? How is the Minister resposible and how is the Assembly responsible ?

**Sri D. S. AUTHIMOOLAM** : Though it is not relevant, still I am . . .

13th March 1959]

MR. SPEAKER: If it is not relevant, the hon. Member himself is ruling it out of order; I do not come into the picture. (Laughter.)

SRI D. S. AUTHIMOOLAM: முக்கியமான "ஐடங்களைப்" பற்றிச் சொல்லி விட்டேன். மற்றப்படி இந்த மினிஸ்டர்கள் "பே" (Pay) பற்றி இந்த நாட்டில் ஏதோ ஒரு அபிப்பிராயம் உண்டு. அதில் "ஜெனரலாக" ஒரு மாறுதல் உண்டாகவேண்டுமென்று சொன்னால், கராச்சித் தீர்மானத்தை ஆதரித்து ஒரு சில காரியங்களைச் செய்ய வேண்டும். ரொம்பப் பெரியவர்களுக்கு நான் யோசனை சொல்லிக்கொண்டிருப்பதாக நினைக்கக்கூடாது. நாளாவட்டத்தில் பொதுவாக "எக்ஸ்பெண்டிசர்" கூடி விட்டதால், மந்திரிகள் சபை இதற்கு ஒரு முன் மாதிரியாகக் காண்பிக்க வேண்டும். அப்படியானால்தான் இந்த நாட்டில் சரியான நிர்வாகம் நடக்கிறது என்று ஜனங்களுக்கு நம்பிக்கை ஏற்படும். இதைக் கவனித்துச் செய்யவேண்டும்.

மந்திரி சபையார் சில விஷயங்களில் கொஞ்சம் தைரியமாகச் சில நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். ஏற்கெனவே நான் இங்கு பேசும் போது கருணையாற்றைப் பற்றி உங்களுக்குக் கொஞ்சம் கருணை பிறக்க வேண்டுமென்று சொன்னேன். இரண்டு மாதங்களுக்கு முன்பு கனம் மராமத்து மந்திரியவர்கள் திருநெல்வேலிக்கு வந்திருந்தார்கள். அங்கு ஒரு "கான்பரன்ஸ்" கூட்டியிருந்தார்கள். மராமத்து சம்பந்தமாகப் பேசுவதற்காக அதைக் கூட்டி இருந்தார்கள். நான் அப்பொழுது கருணையாற்றைப் பற்றிச் சொன்னேன். ஏற்கனவே "சாங்ஷன்" ஆகிவிட்டது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். உடனே நான் பேசவேண்டிய அவசியமில்லை என்று சொல்லிவிட்டு உட்கார்ந்துவிட்டேன். இப்பொழுது 2, 3 நாட்களுக்கு முன்னால் அதைப்பற்றி விளக்கத்தை அறிந்து கொள்வதற்காக ஒரு கேள்வியைக் கேட்டேன். ஏனென்றால் தொகுதியில் போய் இதைப்பற்றிச் சொல்லவேண்டியிருக்கிறது. ரெவின்யூ போர்டில் சில நிலைமைகளைப் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள் என்று பதில் சொன்னார்கள். நான் இதற்குள்ளாகவே "அச்சீவ்மெண்ட் (Achievement) ஆகிவிட்டது" என்று ஒரு நோட்டீஸ் அச்சடித்து விநியோகித்து விட்டேன். எனக்கு அவர்கள் ஓட்டு போடவேண்டுமாதலால் 5,000 நோட்டீஸ் அச்சடித்து வெளியிட்டுவிட்டேன். இப்பொழுது தொகுதிக்குப் போனவுடன் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று கேள்விகேட்டால் என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. ஆகவே இந்த கருணையாற்று விஷயத்தைக் கொஞ்சம் கருணையோடு பார்க்கவேண்டுமென்று தாழ்மையோடு கேட்டுக் கொள்கிறேன்.

ஜில்லாக்களைப் "பைபர்கேட்" (Bifurcate) பண்ணவேண்டுமென்று கனம் முத்தையாச் செட்டியார் அவர்கள் மிக நன்றாக எடுத்துச் சொன்னார்கள். இது திருநெல்வேலி ஜில்லாவுக்கு ரொம்பப் பொருத்தமாக இருக்கிறது. திருநெல்வேலி ஜில்லாவில் இப்பொழுது 25, 26 லட்சம் ஜனத்தொகை இருக்கிறது. ஆனால் பக்கத்தில் உள்ள கன்யாகுமரி மாவட்டத்தின் ஜனத்தொகை $8\frac{1}{2}$ லட்சந்தான். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சில பகுதிகளை கன்யாகுமரிக்கு மாற்றி—அம்பாசமுத்திரத்தை மாற்றி விடாதீர்கள்—நாங்குனேரி தாலுக்கா போன்றவைகளை மாற்றி—பழக்கவழக்கங்கள், பொருளாதாரம் ஆகிய விஷயங்களையெல்லாம் பற்றி யோசித்து அதை இணைக்கவேண்டும். அந்த மாதிரிச் செய்தால் நல்ல நிர்வாகம் நடக்கமுடியும். பெரிய ஜில்லாக்களாக இருந்தால் பல காரியங்களை ஜில்லா கலெக்டர்களால் திறமையாகச் செய்யமுடிவதில்லை.

"மினிஸ்டர்" டூர் (Tour) விஷயமாக புது முறையைக் கையாண்டு எங்கள் எல்லோருக்கும் நல்ல சேவை செய்வதற்குள்ள வாய்ப்பை அளிக்க வேண்டுமென்று வணக்கத்தோடு கேட்டுக்கொள்கிறேன்.

12·10 p.m. SRI A. S. SAHAJANANDA : கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் கோரியிருக்கிற இந்த மானியத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். முக்கியமாக ஒரு நாட்டின் உயிர் கவர்னர்தான். ஏற்கனவே இருந்த கவர்னர்கள் பதினையாயிரம் சம்பளம் வாங்கியிருக்கிறார்கள். அப்போது ஆந்திராவும் சேர்ந்து இருந்தது. இருந்தும் வருமானம் ரூ. 15, 16 கோடிதான். இப்போது சென்னை மாகாணத்திற்கு மாத்திரம் ரூ. 71 கோடி வருகிறது என்றால் இப்போது ராஜ்யத்தின் தலைவராக—ராஜாவாக— இருக்கக்கூடிய கவர்னருக்கு நாம் கொடுக்கும் சம்பளம் அதிகம் இல்லை. இரண்டாவது மந்திரிகளுக்குக் கொடுக்கிற சம்பளமும் குறைவு. ஏற்கனவே இருந்தவர்கள் ஐயாயிரம் ஆறாயிரம் வாங்கினார்கள். இரட்டை ஆட்சியில்கூட 4 ஆயிரம் வாங்கினார்கள். இப்போது ஹைக்கோர்ட் ஜட்ஜுக்கு இருக்கிற சம்பளம்கூட இல்லை. மந்திரிகள் என்றால் அவர்களுக்குச் சம்பளம் அதிகம் இருக்கத்தான் வேண்டும். குறிப்பாக நம் மந்திரிகளைப்பற்றி இல்லை. பலர் தங்களுக்குள்ள அந்தஸ்தை வைத்துக்கொண்டு இந்தப் பதவி கிடைத்தவுடன் தங்களுடைய சொத்தைப் பெருக்கிக் கொண்டுவிட முடியும். இப்போது இருக்கக்கூடிய மந்திரிகள் வேண்டுமானால் தங்களுக்குக் கிடைக்கிற சம்பளத்தைக்கூடச் செலவழித்துவிட்டு நிரபராதிகளாகத்தான் இருக்கிறார்கள். இவர்கள் மேலே குறை சொல்ல முடியாது. சிலர் சொல்லலாம். தாய்ப்பால்தான் குழந்தைகளைக் காப்பாற்றுகிறது. அதில் விஷம் இருக்கிறது என்று ஆராய்கிறவர்கள் இருக்கலாம். அப்படி இப்போதுள்ள மந்திரிகளின் மீது குறை கற்பிக்கிறவர்கள் தாய்ப்பாலில் நஞ்சு ஆய்வதற்கு ஒப்பத்தான் நடக்கிறார்கள்.

அதோடு மந்திரிமார்கள் எல்லாம் காங்கிரசுக்கு அதிகச் சலுகை கொடுக்கிறார்கள் என்று சொல்வது இருக்கிறதே அது சுத்தத் தவறு. என் தொகுதியை எடுத்துக் கொள்ளுங்கள். மாடுகள் வாங்கி விவசாயிகளுக்குக் கொடுக்கிறார்கள். அதிலும் அநேகம் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கும் கொடுத்திருக்கிறார்கள். அதை நான் நிரூபிப்பேன். ஏனென்றால் நான்தான் கிட்ட இருந்து கொடுத்தவன். சர்க்கார் ஒருதலைப் பட்சமாக நடக்கிறார்கள் என்று சொல்லுவதும் தவறு. இதற்கு திருஷ்டாந்தமாக இன்னொன்று சொல்வேன். நமது முதல் மந்திரி காமராஜ் நாடார் அவர்கள் எங்கள் ஹாஸ்டலுக்கு ஒரு வார்டன் போட்டார்கள். அவர் ஜஸ்டிஸ் கட்சியைச் சார்ந்தவர். ஆகவே இந்தச் சர்க்கார் ஒருவரைப் போடுவது என்றால் கட்சியைப் பார்த்துப் போடுவது ஒன்றும் இல்லை. இப்படிப் பேசுவது கட்சிப் பிரசாரத்திற்கு உபயோகப்படுமே தவிர உண்மையான விஷயம் அல்ல. மந்திரிமார்கள் வெளியிடங்களுக்குப் போவதால் மந்திரிமார்கள் வருகிறார்கள் என்பதற்காக ரோடுகள் போடுகிறார்கள் என்று சொன்னார்கள். இதுவும் அபிவிருத்திதான். இருந்தாலும் ரோடுகள் இல்லாத இடங்களில் கார்களை நிறுத்திவிட்டு கால்நடையாகவே மந்திரிகள் போவதையும் பார்த்திருக்கிறேன். குறிப்பாக ஸ்ரீ கக்கன் அவர்கள் தென்னாற்காடு மாவட்டத்தில் சுற்றுப் பிரயாணம் செய்கிறபோது கால்நடையாகவே பல இடங்களுக்கு நடந்து சென்றார்கள். சாப்பாட்டைக் கூட கவனிக்க வில்லை. அப்படியிருக்க மந்திரிமார்களைப்பற்றி ஒருதலைப்பட்சமாக பல புகார்களைச் சொல்வது அவ்வளவு விசேஷமாக இல்லை.

கனம் சபாநாயகர் அவர்களே, உங்கள் முன்னிலையில் மந்திரிமார்களைப் பற்றிப் பேசும்போது இதைச் சொல்லலாம். இங்கே அசெம்பளி மெம்பர்களுக்கு மிக அசௌகரியமாக இருக்கிறது. நான் நீர்ரோகக்காரன். போன மாதம் 19-ம் தேதி நான் இங்கே வந்திருந்தபோது அவசரமாக ஒண்ணுக்குப் போகவேண்டும் என்று லெட்ரினைத் திறக்கச் சொன்னால் மாட்டேன் என்று விட்டார்கள். இதைப் பூட்டிப் பூட்டி வைத்து விடுகிறார்கள். அசெம்பளி முடிந்தவுடனேயே இவர்கள் இப்படிச் செய்வது ஒரு பெருங்குறை. அதோடு டி.ஏ. பாரம் பூர்த்தி செய்து கொடுத்து செக் வாங்குவதற்குள் மத்யானம் வா, காலையில் வா என்று அநேக

13th March 1959] [Sri A. S. Shahajananda]

தடவைகள் இழுத்தடிக்கிருர்கள். இங்கேகூட கரப்ஷன் நடந்திருக்கக் கூடிய விஷயத்தை நேற்று பேப்பரில் பார்த்தேன். இந்தக் குறைகள் எல்லாம் நீங்க வேண்டும். மெம்பர்களுக்கு இங்கே வசதி இருக்க வேண்டும். அதோடு இன்னென்று. மெம்பர்களுக்குக் கொடுக்கப்படுகிற அலவன்சு போதாது. வீட்டை விட்டுக் கிளம்புகிற காலத்திலேயே நூறு நூற்றைம்பது ரூபாய் நாங்கள் எடுத்து வர வேண்டியிருக்கிறது. தினசரிப் படியை மக்கள் சபை மெம்பர்களுக்குக் கொடுப்பதில் பாதியாவது இங்கே கொடுக்கும்படி செய்யவேண்டும். இரண்டாவது மாதச் சம்பளம் 150 ரூபாய் என்பதை—நான் ஒன்றும் அதிகம் கேட்கவில்லை—250 ரூபாயாக வாவது கொடுக்க வேண்டும். ஜனங்களிடத்திலே லட்சக்கணக்கில் செலவு செய்து, கஷ்டப்பட்டு இங்கே வந்திருக்கும்போது இங்கே கொடுக்கிற பணம் போதுமானதாக இல்லை. உணவுப் பொருள் விலை விஷம் போல ஏறியிருக்கிறது. மருந்துகளை எடுத்துக் கொண்டால் விலை மிக உயர்ந்திருக்கிறது. உலகத்தில் இப்போது ஜீவனம் பண்ணுவதே கஷ்ட மாக இருக்கிறது. அதுவும் விவசாயத் தொழிலாளர்கள் மிகவும் கஷ்டப் படுகிருர்கள். அரைப்படிகூடக் கேட்டால் போதும், வேலைக்கே வேண்டாம் என்கிருர்கள். இப்படி உரையூர், சாத்தனூர் முதலிய இடங்களில் எல்லாம் நடக்கிறது. பசியும், பட்டினியுமாகச் சாகிருர்கள். ஆகையால் விலைவாசி யைக் குறைப்பது அவசியம். தொழில் மந்திரி அவர்கள் வேண்டுமானல் சர்வாதிகாரத் தன்மையை வாங்கிக்கொண்டு 1950-ம் வருஷத்தில் என்ன விலைவாசி இருந்ததோ அதே விலைக்கு இப்போது விலையை இறக்க முயற்சி க்கவேண்டும். விலைவாசி இறங்கிப் போய்விட்டால் பஞ்சப்படியைநிறுத்தி விடலாம். இப்படி ஜனங்களுக்கு சௌகர்யமாகப் பல காரியங்களைச் செய்ய வேண்டும். நான் இந்த மானியத்திற்காக ஒதுக்கப்படும் தொகையைப் பூர்ணமாக ஆதரிக்கின்றேன். இவ்வளவு சிக்கனமாக நமது அமைச்சர் அவர்கள் நடந்து கொண்டு வரும்போதே அவர்களைப் பற்றி தவருக பேசுவது தகாது என்று சொல்லிக்கொண்டு இந்த மானியத்தை ஆதரிக் கின்றேன்.

*Sri T. S. RAMASWAMY PILLAI: தலைவர் அவர்களே, வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொள்ள விரும்புகிறேன். பல உறுப்பினர்கள் இந்த அரசாங்க நிர்வாகத்தைப் பற்றியும், குறிப்பாக அமைச்சர் அவர்கள் எம்.எல்.ஏ.க்களிடமும், நாட்டு மக்களிடமும் நடந்து கொள்கிற முறையைப் பற்றியும் கூறினர்கள். என்னைப் பொறுத்த வரையில் ஒரு சில வார்த்தைகள் கூறிக்கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன்.

பொதுவாக இந்த நாட்டிலே நாம் விவசாயத்தைப் பெருக்க வேண்டும். தொழிற்சாலைகளை வளர்க்கவேண்டும். இப்போதுள்ள சமுதாயத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளை மாற்றி சமதர்ம சமுதாயத்தை சமாதானமான முறை யில் அமைக்கவேண்டும் என்ற உன்னதமான லட்சியத்தை நோக்கி சென்று கொண்டிருக்கிறோம். இதில் கட்சி வேறுபாடு இல்லாமல் எல்லோரும் ஒத்துழைக்கவேண்டிய கடமை உண்டு. ஆனல் லட்சியம் என்ன இருந்த போதிலும், கொள்கை என்ன இருந்த போதிலும் நடைமுறையில் காரியங்களைச் செயல்படுத்தும்போது தவறுகள் வருகின்றன. சில சமயங் களில் உயர்ந்த இடங்களில் இருந்தே தவறுகள் வருகின்றன. அவற்றில் ஒரு சிலவற்றை எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

பொதுவாக அமைச்சர் அவர்கள் டூர் புரோகிராம் போடுவதைப்பற்றி பல அங்கத்தினர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். எல்லா இடங்களிலும் என்னென்ன பிரச்சினைகள் இருக்கின்றன என்பதைப் பற்றி ஜில்லாவாரி யாக டூர் புரோகிராம் போட்டு அவரவர்களுடைய குறைபாடுகளை நேரடியாக விசாரித்து அதை நீக்குவதற்கான வழிவகை செய்யவேண்டும். இதை முக்கிய பிரச்சினைகளாக எடுத்துக்கொண்டால் மிகவும் நல்லதுதான். இவ்வாறு நான் முன்னிருந்த ராஜ்யத்தில் அதாவது கேரள ராஜ்யத்தில்

ஆங்காங்கே உள்ள ஜனப் பிரதிநிதிகளை கலந்து டூர் புரோகிராம் போட்டிருக்கிறார்கள். இதை என் சொல்லுகின்றேன் என்றால் நான் பல வருஷங்களாக அந்த மந்திரி சபைகளைப் பார்த்திருக்கிறேன். அதாவது, ஏழு மந்திரி சபைகளைப் பார்த்திருக்கிறேன். ஒவ்வொன்றும் ஒன்றரை வருஷ காலத்திற்குள் மாறி விடக் கூடியதாக இருந்தன. ஆனால் இங்கே டூர் புரோகிராம் கலெக்டர் மூலமாகத்தான் போடப்பட்டு வருகிறது. அதாவது ஜில்லாக்களிலே கலெக்டர்கள்தான் பெரிய அதிகாரிகள். அவர்கள்தான் மானார்க் போன்று அதிகாரம் செலுத்தி வருகிறார்கள். அவர்களை ஆலோசனை கேட்டு விட்டு டூர் புரோகிராம் போட்டு விடுகிறார்கள். ஜனநாயகத்திற்கு அடிப்படையாக உள்ள ஜனப் பிரதிநிதிகளை ஆலோசனைக் கேட்பதே இல்லை. அவர்களைக் கலந்து ஆலோசித்து பிரயாணம் செய்வதுதான் முறை. கலெக்டர்களில் சிலர் நல்லவர்களாகவும் சிலர் கெட்டவர்களாகவும் இருக்கலாம். அவர்கள் தங்கள் கீழுள்ள சிப்பந்திகளைக்கொண்டு கலெக்டரும் அமைச்சர் அவர்களும் டூர் புரோகிராம் பற்றி முடிவு செய்வது சரியல்ல. என்னுடைய தொகுதிக்கு மந்திரி அவர்கள் வந்தார்கள், அப்போது கலெக்டர் அவர்கள் கூட்டத்திற்கு தலைமை தாங்குவதாகவும் மந்திரி அவர்கள் பேசுவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. ஒரு கிராமத்தின் தலைவர்களுக்கு கூட்டத்தில் கலந்து குறைகளைக் கூற அவகாசம் கொடுக்கவில்லை என்று கூட்டத்திற்கு போகமாட்டோம் என்றார். பின்னால் அவர்களிடம் நல்ல வார்த்தை கூறி கூட்டத்தில் கலந்துகொள்ள ஏற்பாடு செய்தோம். என்னுடைய ஜில்லாவில் கட்சி வேறுபாடின்றி ஆறு அங்கத்தினர்கள் மந்திரி அவர்களுக்கு சில குறைபாடுகளை எடுத்துரைத்திருந்தும் அது கவனிக்கப்படவில்லை. வருந்தி வருந்தி அமைச்சர் அவர்களுக்கு எடுத்துரைத்திருந்தும்கூட எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அதாவது ஒரு ஹைவேஸ் என்ஜினியரை மாற்றக்கூடாது என்று சொன்னோம். ஒரு சிறிய கண்ட்ராக்டர் முயற்சியால் அவர்கள் மாற்றப்பட்டு விட்டார்கள். ஜனநாயகத்தினுடைய பிரதிநிதிகள் எத்தனையோ மனுக்கள் போட்டிருந்தாலும் அவர்கள் அந்த என்ஜினியரை மாற்றி விட்டார்கள். குறிப்பாக 6 எம்.எல்.எக்கள் அமைச்சர் அவர்களிடம் கூறி இருந்தும்கூட மாற்றிவிட்டார்கள். ஜனப்பிரதிநிதிகள் கூறியிருந்தும்கூட ஒரு விதமான பலனும் ஏற்படவில்லை. ஸ்ரீ விஸ்வநாதம் அவர்களும்கூட இது சம்பந்தமாக கேள்வி நேரத்தில் கேள்வி கேட்டிருந்தார்கள். இவ்வாறு என்ஜினியரை மாற்றுவது என்ற கொள்கை யார் நிர்ணயிப்பது என்று தெரியவில்லை. அங்குள்ள பிரதிநிதிகள் என்ன சொல்லுகிறார்களோ அவ்விதம் சர்க்கார் நடவடிக்கை எடுக்க வேண்டும். ஒரு சமயம் முதல் முதலாக நமது நிதி அமைச்சர் அவர்கள் எங்கள் ஜில்லாவிற்கு வந்தபோது ஒரு கூட்டத்தில் "கலெக்டர் அவர்களே, பொதுமக்களே" என்று ஆரம்பித்தார்கள். இன்னும் மற்றொரு அமைச்சரும் கலெக்டரை கலெக்டர் துரை என்று அழுத்தி சொல்லியிருக்கிறார். அவ்வாறு அழைப்பதால் அங்குள்ள மக்கள் என்ன நினைத்துக்கொள்ளுகிறார்கள் என்றால் கலெக்டர்தான் எல்லாவற்றிற்கும் தலைவர் என்று தவறாக புரிந்துகொள்ளுகிறார்கள். அப்பொழுது ஜனநாயக பிரதிநிதிகளை கவனித்து அவர்களுக்கு அதிக மதிப்பு கொடுப்பதாக தெரியவில்லை.

கல்லூரிகளில் அட்மிஷன், உத்தியோக நியமனம், உத்யோக உயர்வு இவைகளில் உள்ள ஊழல்களைப் பற்றி ஏற்கெனவே நான் முன்னால் கூறியிருக்கிறேன். இது மாதிரி பல விஷயங்களிலே **favouritism** ஓரளவு இருக்கிறது. ஆபீசர்கள் நேர்மையாக நடப்பது சர்க்காருடைய நேர்மையினால்தான். ரூ. 8,600 கூட்டுறவு சங்கத்தில் டிபால்கேஷன் ஏற்பட்டதாக, அதைக் கண்டு பிடித்துக் கொடுத்த ஒரு கோவாபரேட்டிவ் டிபார்ட்மெண்ட் சீனியர் இன்ஸ்பெக்டர், சம்பந்தப்பட்ட **Inspector** அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஆப் பிஷரிஸ் அவர்களின் உத்தரவின் பேரில் மாற்றப்பட்டார். கையாடல் செய்ததாக கூறப்பட்டவர் மீது 8 ரிமைண்டர்கள் அனுப்பப்பட்டன. வேறு நடவடிக்கைகள் எடுக்கவில்லை. ஆனால் நேர்மையாக நடந்த, கடமையைச் செய்த இன்ஸ்பெக்டர் மாற்றப்பட்டார். சாதாரணமாக இது மாதிரி செய்யவேண்டுமென்றால் ரிஜிஸ்ட்ரார் ஆப்

கோவாப்பரேட்டிவ் சொசைட்டியைத்தான் கலந்து ஆலோசித்துச் செய்ய வேண்டும். அந்தக் காலத்திலே இப்பொழுது அமைச்சராக இருக்கும் ஸ்ரீமதி லூர்தம்மாள் அவர்களின் புருஷன்தான் அந்த நிர்வாகத்திற்குப் பிரசிடெண்டு. அவர்கள் சொன்னதின் பேரில்தான் இந்த சீனியர் கோவாப்பரேட்டிவ் இன்ஸ்பெக்டரை மாற்றியிருக்கவேண்டும். . அவர்களை கடலூருக்கு மாற்றி விட்டார்கள்.

MR. SPEAKER : Is the hon. Member sure that the Hon. Minister interfered, because her husband was the President? Otherwise this sort of allegation would not be correct. He is joining 1 and 1 and making it 2. Is he sure that his allegation is correct?

SRI T. S. RAMASWAMY PILLAI : I am speaking with all responsibility, Sir. ஏன் அவரை மாற்றவேண்டும், அவர் என்ன குற்றம் செய்தார் என்று நான் கேட்க விரும்புகிறேன்.

MR. SPEAKER : I am sorry to intervene. If any other Minister, within whose jurisdiction he is, had transferred that gentleman, the hon. Member cannot blame the Minister for Local Administration. But if she had transferred, then the hon. Member is entitled to . . .

SRI T. S. RAMASWAMY PILLAI : I do not say that she did it.

MR. SPEAKER : Why does the hon. Member drag in somebody's name?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is an insinuation that the Local Administration Minister transferred a particular officer. I do not know the facts, and I do not also know how far the hon. Member is correct even with regard to the fact. Even taking for granted that all this is a fact or what he says is true, how does he infer that the Local Administration Minister transferred him, because her husband was involved? All this is an insinuation unless supported by facts. Simply because he has got the privilege of speech, he should not abuse that privilege.

SRI T. S. RAMASWAMY PILLAI : I am fully responsible for what I say. I am not abusing the privilege.

MR. SPEAKER : The hon. Member may take the responsibility. But I think it is not correct to say that the transfer was made by the Minister for Local Administration.

SRI T. S. RAMASWAMY PILLAI : I did not say that.

MR. SPEAKER : It is a veiled method of saying that she is responsible.

SRI T. S. RAMASWAMY PILLAI : அவர் ஒருமனு கொடுத்திருந்தார். இதைப்பற்றி ஒரு ஷார்ட் நோட்டீஸ் கேள்வி கொடுத்திருந்தேன். அதை ரிஜக்ட் செய்து விட்டார்கள். அதன்பின் என் நண்பர் கோவிந்தசாமி அவர்கள் இரண்டு மாதங்களுக்கு முன் கேள்வி அனுப்பினார்கள். இது வரையில் பதிலில்லை.

MR. SPEAKER : How can the hon. Member say that?

SRI T. S. RAMASWAMY PILLAI : ஏன் மாற்றவேண்டும்? அவர்கள் என்ன குற்றம் செய்தார்கள் என்று நான் கேட்கவிரும்புகிறேன்.

MR. SPEAKER : The hon. Member cannot make an allegation and get off with it. If it is a short notice question, it is the duty of the Speaker to admit it or reject it. If a question is not answered, it may be that the answer is not ready in the department. The hon. Member is not correct in joining 2 and 2 and saying that it is the Minister for Local Administration who has done it, or as a result of her intervention some other Minister has done it. This is very wrong. I hope the hon. Member would not proceed on this line.

12-30 p.m.

SRI T. S. RAMASWAMY PILLAI : இது எப்படி முடிந்தது என்று அரசாங்கம் நிச்சயம் பார்க்க வேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். இதற்கு கனம் அமைச்சரும் பதில் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இவ்வாறு அந்த அதிகாரி தம் கடமையை நிர்ப்பயமாகவும் நிர்தாட்சன்யமாகவும் செய்தார் என்பதைத் தவிர அவரைப் பற்றி வேறு என்ன சொல்ல முடியும் ? எதற்காக அவரை அர்ஜெண்டாக, ஒரே நாளில், மாற்ற வேண்டும் என்பது பற்றி விளக்க வேண்டும் என்று கனம் அமைச்சரைப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். அவரை மாற்றுவதில் என் அவ்வளவு அர்ஜென்ஸி ? அவர் என்ன தப்புச் செய்துவிட்டார் ? சாதாரணமாக இந்த இலாகாவிலுள்ள அதிகாரிகளை கோவாப்ரேடிவ் ரெஜிஸ்டிராரின் அனுமதியின்றி "பேரெண்ட்" டிபார்ட்மெண்டிற்கு மாற்ற முடியாது. அப்படி இருக்க, கனம் முதல் அமைச்சரிடம் நேரிடையாகச் சென்று சொன்னதன் பிறகு அவர் மாற்றப்பட்டார். அதற்குப் பிறகு வேறு விஷயங்களும் நடந்தன.

SRI K. ANBAZHAGAN : மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, இந்த ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையையொட்டி அரசாங்கத்தலைவர்கள் பெறுகின்ற ஊதியத்தையும் தேர்தல் இவைகளையொட்டிச் செலவாகிற தொகையையும் குறித்த மானிய கோரிக்கையை இந்த மன்றம் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற பிரேரேபணைக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்துப்பேசும் முறையில் சில கருத்துக்களைத் தெரிவிக்கிறேன். சட்ட மன்றத்தில் பேசும்போது பொதுவாக ஏற்படும் ஒரு முறையைத் தெரிவிக்க நான் விரும்புகிறேன். குற்றச்சாட்டுகளைச் சொல்வது என்பது ஒரு வகை. குறைகளை எடுத்து மொழிவது என்பது மற்றொரு வகை. குறைகளை எடுத்துச் சொல்லும்போது கூட அவைகளையெல்லாம் குற்றச்சாட்டுகள் என்று கருதி அவைகளைச் சொல்லவொட்டாது தடுக்க மதிப்பிற்குரிய அமைச்சர்கள் முயன்றால், அரசாங்கத்திலுள்ள குறைகள் அப்படியே அரசாங்கத்திற்குள்ளேயே இருந்து அரசாங்கத்திற்குள் புறையோடிப் போகுமே தவிர, அத்தகைய செய்கை நாடு சீர்திருந்துவதற்கோ அரசாங்கம் சீர்திருந்துவதற்கோ பயன்படாது என்பதை முதலில் தெரிவிக்க விரும்புகிறேன். அரசாங்கத்தார் செய்யும் நன்மைகளை ஆளும் கட்சியினர் பாராட்டினாலும், மக்களிடம் குறைகள் மலிந்திருப்பதால் மக்களின் சார்பில் பேசும்போது ஆளும் கட்சி அங்கத்தினர்கள் கூட குறைகளை தெரிவித்திருக்கிறார்கள். மாற்றுக் கட்சியினர் குறைகளை மட்டுமே சொல்கிறார்கள் என்று ஆளும் கட்சியினர் வருந்துவது நாட்டுக்கு நல்லதல்ல.

மதிப்பிற்குரிய அமைச்சர்கள் உத்தியோகஸ்தர்களைப் போல் பல கடமைகளைச் செய்கிறார்கள் என்பதில் எனக்கு எந்த விதமான கருத்து மாறுபாடும் இல்லை. மதிப்பிற்குரிய அமைச்சர்கள் வெறும் உத்தியோகஸ்தர்கள் மட்டும் அல்லர். அவர்கள் வெறும் உத்தியோகஸ்தர்களாய் மட்டும் இருந்தால் அவர்கள் அலுவலகத்தில் செய்யும் காரியங்களை மட்டும் செய்வது போதுமானதாக இருக்கும். அமைச்சர்கள் எந்தக் கட்சியை

13th March 1959] [Sri K. Anbazhagan]

சார்ந்திருந்தாலும் அவர்கள் காரியங்களை ஜனநாயக பூர்வமாக நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறார்கள். நாட்டில் ஜனநாயகம் தழைத்தோங்கச் செய்வதற்கும், காரியங்கள் ஜனநாயக முறையில் நடைபெறுவதற்கும் அவர்கள் வழிகாட்டிகளாக இருக்க வேண்டும். மதிப்பிற்குரிய அமைச்சர்கள், சட்ட மன்றத்தில் மாற்றுக் கட்சிகளுக்கு சில அறிவுரைகளைக் கூறுவதால் மட்டும் ஜனநாயகத்தை வளரச் செய்ய முடியாது; கட்சிகளுக்கு நல்லுபதேசங்கள் செய்வதால் மட்டும் ஜனநாயகத்தை வளரச் செய்ய முடியாது. அமைச்சர்கள் நாட்டு மக்களை சந்தித்துப் பேசும்போது ஜனநாயகத் தத்துவத்தை உணர்ந்து பேசினால்தான் ஜனநாயகம் வளரும். மதிப்பிற்குரிய அமைச்சர் திரு. பக்தவத்சலம் திருச்சியில் பேசியதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். அங்கே அவர் பேசியபோது "ஊராட்சி மன்றத்திற்கு நல்ல தகுதியுள்ளவர்களைத் தேர்ந்தெடுங்கள்" என்று சொல்லியிருந்தால் நான் வருத்தப்படமாட்டேன். அப்படி இல்லாவிட்டால், "ஊராட்சி மன்றத்திற்கு காங்கிரஸ்காரர்களையே தேர்ந்தெடுங்கள், ஏனென்றால் அவர்கள் நல்லவர்களாக இருக்கிறார்கள்" என்று சொல்லியிருந்தாலும், கட்சி ஆசை அவரை விட்டுப் போகவில்லை என்றுதான் கருதியிருப்பேன். ஆனால் அவர் "ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுக்காமல் மாற்றுக் கட்சிகளைத் தேர்ந்தெடுத்து அதன் விளைவாக நகரசபை மாற்றுக் கட்சிகளிடம் செல்கிறபோது பல நல்ல காரியங்களைச் செய்ய முடியாது" என்று சொல்லியிருக்கிறார். இதன் உட்பொருளை மதிப்பிற்குரிய அமைச்சர்கள் புரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். நீங்கள் மாற்றுக் கட்சிகளைச் சேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுத்தால், சுயேச்சையாளர்களையும் எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த அங்கத்தினர்களையும் நகர சபைக்குள் விட்டு விட்டால், உங்கள் விருப்பங்களும் உங்களுடைய எந்தத் திட்டங்களும், கக்கூஸ் திட்டம், சாக்கடைத் திட்டம் ஆகிய எந்தத் திட்டங்களும், நிறைவேறாது, நகர சபைக்கு சர்க்காரின் மானியத் தொகை கிடைக்காது என்ற கருத்துப்பட ஒரு மதிப்பிற்குரிய அமைச்சர் பேசினால் நீங்கள் ஜனநாயகத்தை எப்படிக் காப்பாற்ற முடியும் என்று கேட்க விரும்புகிறேன். நீங்கள் காங்கிரசுக்கு தாராளமாக வோட்டுக் கேளுங்கள். "நாங்கள் அமைச்சர்கள், சாமானியமானவர்கள் அல்லர், பிச்சைக்காரர்கள் அல்லர், பெரும் பீடத்தில் உள்ளவர்கள்; உங்களுக்கு நல்லது செய்திருக்கிறோம்; எங்களை ஆதரியுங்கள்; எங்கள் கட்சிக்காரர்களுக்கு வோட்டுப் போடுங்கள்" என்று வோட்டுக் கேளுங்கள். அதை விடுத்து "மாற்றுக் கட்சியினரை நீங்கள் ஆதரித்தால் உங்கள் நகரசபை நல்ல திட்டங்களை நிறைவேற்றுவதற்குரிய வாய்ப்பைப் பெறாது" என்று சொல்வது மக்களை அச்சுறுத்துவதாகும். மதிப்பிற்குரிய உள்துறை அமைச்சர் அங்கே அவ்வாறு பேசவில்லை என்று மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் சொல்கிறார். ஆனால் மக்களிடத்தில் அந்தக் கருத்துப் பரவியிருக்கிறது. அதை மாற்ற மதிப்பிற்குரிய அமைச்சர்கள் என்ன செய்திருக்க வேண்டும்? மதிப்பிற்குரிய உள்துறை அமைச்சர் "ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுக்காமல் மாற்றுக் கட்சிகளைச் சேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுத்து, அதன் விளைவாக நகரசபை மாற்றுக் கட்சிகளிடம் செல்கிறபோது பல நல்ல காரியங்களைச் செய்ய முடியாது என்று நான் சொல்லவில்லை. அந்தச் சொற்கள் என் சொற்பொழிவில் இல்லை. அப்படிப்பட்ட அச்சுறுத்தல் என் சொற்பொழிவில் இல்லை. எங்கள் கட்சிக்கு வோட்டளியுங்கள் என்றுதான் நான் சொல்லியிருக்கிறேன்" என்று ஒரு அறிக்கை விட்டிருக்க வேண்டும். பத்திரிகைகளில் தவறான செய்திகள் வந்தால் அதைத் திருத்துவதற்கு இத்தகைய வாய்ப்புகள் ஜனநாயகத்தில் இருக்கின்றன. அந்தச் செய்தி எந்தப் பத்திரிகையில் வந்தது என்பதுபற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. எப்படி இருந்தாலும் அப்படிப்பட்ட செய்தி பத்திரிகையில் வந்திருக்கிறது. பத்திரிகையில் வந்த செய்தியை இங்கே குறிப்பிட வேண்டாம் என்று மதிப்பிற்குரிய அமைச்சர்கள் சொன்னால், எந்தப் பத்திரிகையைக் குறிப்பிட்டு அவர்கள் இங்கே பேசுகிறார்களோ அந்தப் பத்திரிகையைக் குறிப்பிட்டே இச் செய்தியை நான் இங்கே குறிப்பிட்டேன் என்று சொல்லிக்கொள்கிறேன். நாம் பேச்சுக்களில் வெளியிடும் கருத்துக்கள் ஜனநாயகத்தைப் பாதுகாக்கக் கூடியவையாக இருக்க

[Sri K. Anbazhagan] [13th March 1959

**வேண்டும்.** அப்படிப்பட்ட கருத்துக்களையே நாம் **தெரிவிக்க வேண்டும்.** அமைச்சர்கள் அதிகார பீடத்திலிருந்து மக்களை அச்சுறுத்தக் கூடாது, அச்சுறுத்த இடம் தரக் கூடாது. ஜனநாயகத்தை அந்த முறையில் பாது காக்க வேண்டும் என்று ஆட்சியாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து ஒன்று தெரிவிப்பேன். மக்களுடைய விருப்பம் என்ன என் பது தெரியுமானால் மதிப்பிற்குரிய அமைச்சர்களுக்கு அதை நிறைவேற்ற என்ன தடை இருக்கிறது ? இந்த மாநிலத்தில் கன்னியாகுமரி முதல் வேங்கடம் வரை உள்ள மக்களில் யாரும், இந்த மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர்வைக்க வேண்டாம் என்று சொல்லவில்லை. வேண்டு மானால், மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் சுற்றுப் பிராயணம் செய்யும் போது என்னை உடன் அழைத்துச் செல்லட்டும். அவர் பேசும் அதே கூட்டத்தில், " இந்த மாநிலத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று மதிப்பிற்குரிய நிதி அமைச்சரிடம் சொல்ல நீங்கள் தயாராயிருக்கிறீர்களா " என்று அங்கே கூடியுள்ள மக்களை நான் கேட் கிறேன். " சொல்லத் தயார் " என்று அவர்கள் சொன்னால், இந்த மாநிலத்திற்கு தமிழ்நாடு என்ற பெயரை மறு நாளே வைத்திவிட வேண் டும். " சிறு கட்சிகள் சொல்வதைக் கேட்டு இம்மாநிலத்திற்கு அப்பெயரை வைப்போமா " என்று மதிப்பிற்குரிய அமைச்சர்கள் கேட்கிறார்கள். இந்தக் கோரிக்கையை விடுப்பவை, சிறு கட்சிகளாக இருக்கலாம். சிறு கட்சியாக இருப்பதில் அவமானம் ஒன்றுமில்லை. ஒரு கட்சி பெரிய கட்சி யாக இருந்தபோதிலும் அக்கட்சி தன் கடமையை நிறைவேற்றாததுதான் அவமானம். இந்த மாநிலத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர் வைக்க முடியாத நீங்கள் வேறு எந்தக் காரியத்தைத்தான் செய்யப் போகிறீர் கள் ? மாற்றுக் கட்சிகள் கோருவது ஒருபுறம் இருக்கட்டும். இது மாற்றுக் கட்சிகளின் தனிப்பட்ட விஷயம் அல்ல. இந்த மாநில மக்கள், இந்த மாநிலத்திற்கு தமிழ்நாடு என்று பெயரிடப்பட வேண்டுமென்று விரும்புகிறார்கள். நீங்கள் ஒரு பெரிய பேராசிரியரைப் பாராட்டினாலும், ஒரு நாடகத் தந்தையைப் பாராட்டினாலும், " என் வாழ்நாள் முடிவ தற்கு முன்னால் ' தமிழ்நாடு வாழ்க ' என்று நான் மனமார வாழ்த்த வேண்டும் ; அப்போது தமிழ்நாடு என்று அரசாங்கத்தால் இந்த மாநிலத்திற்குப் பெயரிடப்பட்டிருக்க வேண்டும். இந்த மாநிலத்திற்கு தமிழ்நாடு என்று பெயரிடப்படுவதை நான் பார்க்க வேண்டும் " என்று ஒரு பெரியவர் சொல்லியிருந்த போதிலுங்கூட, இந்த மாநிலத்திற்குத் தமிழ்நாடு என்று பெயரிட இந்த ஆட்சியாளர்கள் மறுக்கிறார்கள். இது ஜனநாயகமா ?

அதற்கடுத்தபடியாக, கவர்னருக்காக இவ்வளவு பணம் செலவழிக்க வேண்டியது அவசியமா? ஜனநாயக வளர்ச்சியில் கவர்னருக்கு இடம் தரக்கூடாது என்று மதிப்பிற்குரிய அம்மையார் பேசினார். " கவர்னர் பதவி என்பது ஒரு இன்ஸ்டிட்யூஷன் — அமைப்பு. திரும்பத் திரும்ப அதை எதிர்த்துப் பேசுவதில் என்ன பயன் " என்று மதிப்பிற்குரிய அமைச்சர் சொல்லலாம். சில இன்ஸ்டிட்யூஷன்கள், காலத்தையொட்டி தேவையில்லை. இந்தக் காலத்தில் ஜனநாயக வளர்ச்சியில் கவர்னர் இருக்க வேண்டியதில்லை. மேலே பாராளுமன்றம் இருக்கிறது. அதற்கு மேல் சூழ்நிலை காரணமாக ராஷ்டிரபதியாக இருக்கிறார் திரு. ராஜேந்திர பிரசாத். இந்த இரு அமைப்புகளுக்கும் இடையில் கவர்னர் இருக்கத் தான் வேண்டும் என்ற அவசியம் இன்றைய தினம் இல்லை. இதை பலர் பல்வேறு கோணங்களிலிருந்து எடுத்துச் சொல்லுகிறார்கள். கவர்னரை வைத்து அவருக்காக 67 லட்ச ரூபாய் செலவு செய்வது ஏழை மக்களுக்கு அதிருப்தியை உண்டாக்குகிறது. காந்திய தத்துவப்படி, இத்தகைய ஆடம் பரமான அமைப்புகள் தேவையில்லை, ஆடம்பரமான செலவுகள் தேவை யில்லை. ஆடம்பரமான அமைப்புகளும் ஆடம்பரமான செலவுகளும் வேண் டாம் என்று காந்தி அவர்கள் சொன்னார்கள். அவர் சொன்ன தத்து வத்தை இன்று காங்கிரஸ் ஆட்சியாளர்கள் காப்பாற்றவில்லை ஆனால் அவர்கள் மற்றவர்களைப் பார்த்து " உங்களுக்கு காந்தீயத் தத்வம் தெரி யாது " என்று சொல்லுகிறார்கள். கவர்னர் தகுதியுடையவர், பண்பு

13th March 1959] [Sri K. Anbazhagan]

உடையவர் என்று ஆட்சியாளர்கள் சொல்வார்களானல், ஆடம்பரமான செலவுகள் செய்யாதவரை, விளுேபா பாவே அவர்களைப் போன்றவரை, அந்தப் பதவியில் வைக்க வேண்டும். அந்தப் பதவியில், சம்பளம் வாங்க விரும்பாதவர்களை, விளுேபா பாவையைப் போன்றவர்களை நியமிக்க வேண்டும். அந்தப் பதவியை கௌரவப் பதவியாக வைத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் கவர்னர் சம்பந்தப்பட்ட வேறு செலவுகளைக் குறைத்து கவர்னர் மிகவும் சிக்கனமாக இருக்கிறார் என்று எடுத்துக் காட்ட வேண்டும். இந்தப் பதவியை நீக்குவதற்கு இந்த அரசாங்கத்திற்குத் தரம் இல்லை என்றால், இந்தப் பதவியை நீக்க வேண்டும் என்று மத்திய அரசாங்கத்திடம் இது வற்புறுத்தியிருக்க வேண்டும்; அப்படி இல்லாவிட்டால் மத்திய அரசாங்கமே முன்வந்து இந்தப் பதவியை நீக்கியிருக்க வேண்டும்.

கவர்னர் அமைப்பு தேவையில்லை. அது தேவையென்று கருதினல் மக்கள் அதை வெறுக்காத விதத்தில் நடத்திச் செல்வதற்கு முன்வர வேண்டும். அதேபோல் இன்றையதினம் இந்நாட்டிலிருக்கிற அதிகாரிகளின் சம்பள விகிதத்தில் எவ்வளவு ஏற்றத்தாழ்வு இருக்கிறதென்பதை, பட்டியலைப் புரட்டிப் பார்த்தால் தெரியவரும். அங்ஙனம் பட்டியலைப் புரட்டிப் பார்க்கும்போது, 25 ரூபாய் சம்பளத்திலிருந்து ஆண்டுதோறும் அரை ரூபாய் சம்பள உயர்வு செய்து 30 ரூபாய் வரை போகும் ஊழியர்கள் நம் அரசாங்கத்தில் பணியாற்றி வருகிறார்கள். 2,500 ரூபாய் வரை சம்பளம் வாங்கும் அதிகாரிகளும் இந்த அரசாங்கத்தில் இருக்கிறார்கள். ஆக, 25 ரூபாய்க்கும் 2,500 ரூபாய்க்கும் இடையே இருக்கிற வேறுபாட்டை அமைச்சர்கள் ஒரு கணம் எண்ணிப்பார்க்குமாறு கேட்டுக் கொள்கிறேன். நூறு மடங்கு வித்தியாசம் இருப்பதைக் காண முடியும். இந்த வித்தியாசத்தைப் போக்க வேண்டுமென்று ஆசை எங்களுக்கு இருந்தும்கூட எங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்பதையாவது அரசாங்கம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஏன் இவ்வளவு தாரதம்மியம் இருக்கிறது? 25 ரூபாய் என்பதை நூறு ரூபாய் என்ருவது ஆக்க வேண்டும். 25 ரூபாயில் எப்படி ஒரு குடும்பம் வாழ முடியும்? பல சட்டசபை உறுப்பினர்கள் எடுத்துச் சொல்கிறார்கள், உறுப்பினர்களுக்கு கொடுக்கப்படும் பன்னிரண்டரை ரூபாய் படி போதாது என்று. அந்தளவில் பார்ப்போமேயானல் இரண்டு நாள் படிதான் இந்த 25 ரூபாய் மாதச் சம்பளம் வாங்கும் அரசாங்க ஊழியர்களுக்குக் கிடைக்கிறது. அப்பொழுது அவர்களுக்கு மட்டும் மாதம் 25 ரூபாய் சம்பளம் போதுமா? என்று கேட்கிறேன். ஆகவே, அவர்கள் ஏதாவது தவறுதல் செய்வார்களேயானல் அதை நான் கண்டிக்க மாட்டேன். அவர்கள் தவறுகள் செய்தால் நான் அவர்களை பழிக்க மாட்டேன், அந்தப் பழியை நான்மற்றவர்கள் மேல் தான் போடுவேன். இப்பொழுது, நாட்டில் பாருங்கள், எவ்வளவு தற்கொலைகள் நடக்கின்றன என்று? ஏன் இப்படிப்பட்ட படுபாதகமான சூழ்நிலையை அரசாங்கம் வைத்திருக்க வேண்டும்? யார் மீது வரி போட வேண்டுமோ அவர்கள் மீது தாராளமாக வரி போடுங்கள். அதை நான் ஆட்சேபிக்க மாட்டேன். எங்கிருந்து பொருளைத் திரட்ட வேண்டுமோ அங்கிருந்து பொருளை திரட்டுங்கள். 2,500 ரூபாய் சம்பளம் வாங்கும் அதிகாரிகளின் சம்பளங்களை குறைக்கப் பாருங்கள். அமைச்சர்கள் வாங்கும் 1,500 ரூபாயை குறைத்துக்..........

**THE HON. SRI C. SUBRAMANIAM**: 25 ரூபாய்க்கு மேல் 35 ரூபாய் பஞ்சப்படியும் சேர்ந்து 60 ரூபாய் வாங்குகிறார்கள். ஆகவே 60 ரூபாய் என்று சொல்லி பேசுங்கள்.

**SRI K. ANBAZHAGAN**: அமைச்சர் அவர்கள், டி. ஏ. வையும் சம்பளத்தோடு சேர்த்து 60 ரூபாய் பெறுகிறார்கள் என்று சொல்கிறார்கள். அப்படி 60 ரூபாய் என்று வைத்துக்கொண்டாலும் சரி, இந்த 60 ரூபாயில் ஒருவன் தனது வாழ்க்கையை நடத்த முடியுமா? எண்ணிக்கையிலுள்ள வேற்றுமையை வைத்துக்கொண்டு அமைச்சர் அவர்கள் தப்பித்துக்கொள்ள முடிந்தால் தப்பித்துக்கொள்ளட்டும். ஆனல் நான் சொல்வதின் கருத்து அமைச்சர் அவர்களுக்குத் தெரியும். ஆகவே,

[Sri K. Anbazhagan] [13th March 1959

இந்த சம்பள விகிதத்திலுள்ள தராதரத்தைக் குறைப்பதற்கு தக்க நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். சட்டமன்ற உறுப்பினர்கள் பெறும் 150 ரூபாய் அலவன்ஸை குறைப்பதாகயிருந்தாலும் சரி நான் அதற்காக வருத்தப்படமாட்டேன். அதைக் குறைத்து 30, 40 ரூபாய் சம்பளம் பெறுகிறவர்களுக்கு சிறிது உயர்த்திக்கொடுத்தால் அதை அரசாங்கத்தின் பெருந்தன்மைக்கு ஒரு அடையாளமாக எடுத்துக்கொள்வேன். இன்று கிராம அதிகாரிகள் 30 ரூபாய்தான் சம்பளம் வாங்குகிருர்கள். எல்லாம் சேர்த்துத்தான் 30 ரூபாய். இன்று என்.ஜி.ஓ.க்களுக்கு தரப்பட்டிருக்கும் 5 ரூபாய் கூட அவர்களுக்குத் தரப்படவில்லை. இதைச் சொன்னல், கிராம உத்தியோகஸ்தர்கள், கௌரவ உத்தியோகஸ்தர்கள் என்று சொல்லப்படலாம். 30 ரூபாயை வாங்கிக்கொண்டு அவர்கள் எட்டு மணி நேரம் உழைக்கவேண்டியிருக்கிறது. சட்டமன்ற உறுப்பினர்களாக இருக்கும் நாம், கௌரவ உறுப்பினர்களாக இருக்கும் நாம் மாதம் 150 ரூபாய் அலவன்ஸ் பெறுகிருேம், அதே நேரத்தில் கிராமங்களில் இருக்கிற கௌரவ உத்தியோகஸ்தர்களுக்கு 30 ரூபாய் போதும் என்று சொன்னல் இந்த நியதியை என்னல் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகவே, ஆளும் கட்சியில் இருப்பவர்கள் இந்த நிலையை மாற்றுவதற்கு முயற்சிகள் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்து, இன்று அரசாட்சியில் இருக்கும் அரசாங்கத்தினிடம் விண்ணபங்கள் அளிக்கப்பட்டால் அவைகள் உடனடியாக கவனிக்கப்படுவதில்லை. என்ற குறை இருந்து கொண்டேயிருக்கிறது. இதைத் தீர்ப்பதற்கு கனம் காமராஜ் அவர்கள் பாகல்மேட்டில் ஒரு மகாநாடு நடத்திஞர்கள். இதற்கு எதிர்கட்சிகளில் இருப்பவர்கள் ஒத்துழைக்கவேண்டுமென்று கருதி அறிஞர் அண்ணு அவர்கள் தண்டலத்தில் ஒரு மகாநாடு கூட்டிஞர்கள். கட்சி சார்பற்ற முறையில் மகாநாடு ஒன்று கூட்டி பொதுமக்களை திரட்டி அவர்களின் விண்ணப்பங்களை முதலமைச்சர் அவர்களிடம் அவரே நேரில் தந்தார்கள். அந்நேரத்தில் தண்டலத்திற்கு செல்வதற்கு ஒரு பாதை அமைக்கப்பட்டது. முதல் அமைச்சர் அவர்கள் திரும்ப வந்தவுடன் மழை காரணமாக அந்த பாதையும் அழிந்துவிட்டது. இப்பொழுது அந்தக் கிராமத்திற்குச் செல்ல, பாதையே யில்லை. அங்கு கொடுக்கப்பட்ட மனுக்களின் மேல் யாதொரு நடவடிக்கைகளும் எடுக்கப்படவில்லை. அதைப்பற்றி சட்டமன்றத்தில் முதலமைச்சர் அவர்களிடம் சொன்னல், "நீங்கள் என்னை ஏமாற்றப் பார்த்தீர்கள், ஆனல் நான் ஏமாறவில்லை" என்று சொன்ஞர்கள். அப்படி ஏமாற்றுவதற்கு சட்ட மன்றம் தேவையில்லை. அதற்கு வேறு இடங்கள் இருக்கின்றன. முதலமைச்சர் அவர்கள் அறிஞர் அண்ணு அவர்களின் தொகுதியைக் கவனிக்கவில்லை என்று நான் குற்றம் சாட்டவில்லை. ஆனல் அன்று கொடுக்கப்பட்ட மனுக்கள் மீது நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லையென்றுதான் குற்றஞ்சாட்டுகிறேன். இதேபோன்று ஏராளமான மனுக்கள் வந்து கொண்டிருக்கின்றனவேயன்றி அவைகளின் மீது தக்க காலத்தில், விரைவில் நடவடிக்கைகள் எடுப்பதில்லை, "ரெட்டேப்பிஸம்" அதிகமாகிறது. பாவாடை நாடா என்று சொல்வதினல் சிலர் வருத்தப் படுகிருர்கள். அந்த நாடாவின் அளவு குறைக்கப்படவேண்டும் என்று எடுத்துச் சொன்னல் அதைக் குறைப்பதற்கு இந்த அரசாங்கம் இதுவரை என்ன முயற்சி எடுத்திருக்கிறது ? என்றுதான் நான் கேட்கிறேன். சாதாரண உத்தியோகஸ்தர்கள் மிகப் பாடுபட்டு உழைக்கிருர்கள். மேல் இடத்திலுள்ள பல அதிகாரிகள் நிம்மதியாக தூங்கிக் கொண்டிருப்பதை நான் பலவிடங்களில் பார்த்திருக்கிறேன். ஆகவே, அவர்கள் வீணுக அந்த இடத்தில் இருப்பதைக் குறைப்பதற்காகவாவது வழிவகைகள் செய்ய வேண்டும். அல்லது தாழ்ந்த நிலையில் உள்ள அதிகாரிகளுக்கு அதிகப் பொறுப்பைக் கொடுத்து அவர்கள் மூலம் காரியங்களை நிறைவேற்றுங்கள். தாமதத்தைத் தடுப்பதற்கு வழிவகைகள் காணுங்கள். செய்யவேண்டிய காரியங்களை வேண்டிய காலத்தில் செய்தாலன்றி ஜனநாயகம் வெற்றி பெருது. அதை நிறைவேற்ற அமைச்சர்கள் என்ன முயற்சிகள் எடுத்திருக்கிருர்கள் ? ஒரு உதாரணம் சொல்வேன், சென்னை நகரத்தை நூறு வட்டங்களாக பிரித்தபோது அவைகளை தவருனமுறையில் பிரித்திருந்தார்கள்.

13th March 1959] [Sri K. Anbazhagan]

அதுபற்றி நான் லோக்கல் அட்மினிஸ்ட்ரேஷன் செக்ரட்டரி அவர்களிடம் விளக்கி எடுத்துச் சொல்லி அதைத் திருத்துவதற்கு வழி உண்டானால் அதைக் கவனிக்கவேண்டுமென்று கேட்டேன். படம் போட்டுக்கூட காண்பித்தேன். அத்தவறுகளை இப்போழுது வேண்டுமானாலும் விளக்க முடியும். ஆனால் அதுபற்றி கவனிக்கப்படவில்லை. அதற்கு ஒரு பதிலும் வரவில்லை. பதில் தராததை நான் குற்றமாக சொல்லவில்லை. இந்தத் தவறுகளை நீக்கவேண்டுமென்று சொன்னால், அவைகள் தவறுகளாக இல்லாவிடில் அவைப்பற்றி விளக்கிச் சொல்ல வேண்டும். இல்லையெனில் அத்தவறுகளை திருத்தவேண்டும். செகரட்டிரியாக இருக்கிற ஒருவர் இப்படி நடந்துகொள்கிறார் என்றால் பின் சாதாரண உத்தியோகஸ்தர்களைப்பற்றி கேட்கவேண்டுமா ? ஆகவே இவைகளையெல்லாம் மாற்றியமைக்கவேண்டுமே அல்லாது அமைச்சர்கள் ஊர் ஊராக சென்று பேசினால்மட்டும் போதாது. ஜனநாயக பண்பாடுகளை அமைச்சர்கள் பேணி பாதுகாக்கவேண்டும். ஒவ்வொரு அலுவலகத்திற்குள்ளும் நுழைந்து வெளியே வரவேண்டும். அமைச்சர்களின் அறைகளில் பைல்கள் வருவது போதாது. பல அதிகாரிகளின் அறைகளிலும் சென்று பார்வையிட வேண்டும். பொறுப்பான, நல்ல அதிகாரிகளும் இருக்கிறார்கள். சென்னை அரசாங்க அதிகாரிகள் மிகச் சிறந்தவர்கள் என்ற பாராட்டை நானும் சொல்கிறேன். ஆனால் குற்றங்குறைகள் இருப்பின் அவைகள் தவிர்க்கப்படவேண்டும். அதற்கு வேண்டிய வழிவகைகள் காணப்படவேண்டும். அப்படி அமைச்சர்கள் செய்யாவிட்டால், பாகல் மேட்டிலும், தண்டலத்திலும் பொதுமக்களை கூட்டுவித்து அவர்களின் பாராட்டுதல்களை முதலமைச்சர் பெறமுடியுமேயல்லாது, மக்களுக்கு உண்மையிலேயே அது நன்மை பயப்பதாக இருக்காது. ஆகவே, நாட்டு மக்களுக்கு நன்மை செய்யும் விதத்தில் சில திருத்தங்கள் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு கடைசியாக நான் சொல்லவிரும்புவது, முனிசிபல் தேர்தல்கள் நடந்து கொண்டிருக்கின்றன. முனிசிபல் வாக்காளர்களின் பட்டியலில் ஏராளமான குறைகள் இருக்கின்றன, இப்பொழுதுகூட பலவேறு இடங்களில் லஞ்சம் தாண்டவமாடுகிறது இவைகளையெல்லாம் தவிர்க்கும் விதத்தில் நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். தேர்தல் மத்திய அரசாங்கத்தின் பொறுப்பு என்று சொன்னால் அவர்களிடம் சொல்லி அதிலுள்ள குறைபாடுகளைத் தீர்க்கவேண்டும். தேர்தலுக்கு நாமினேஷன் கொடுத்ததற்குப் பிற்பாடும் வாக்காளர்கள் பட்டியலில் புதிதாக ஆட்கள் சேர்க்கப்படுகிறார்கள். நாமினேஷன் தேதிக்குப் பின்னால் வாக்காளர்களைச் சேர்க்கும்போது தங்களுக்கு வாக்களிக்கக் கூடும் ஆட்களை, வெளியிடங்களில் உள்ளவர்களைச் சேர்க்கும் அநீதி நடக்கிறது. இந்த அநீதியைத் துடைப்பதற்கு ஜனநாயக அரசாங்கம் என்றால், அது தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்குத் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : தலைவர் அவர்களே, பட்ஜெட் விவாதத்தில், பொதுவிவாதத்திற்கு அடுத்தாற்போல் இந்த தலைப்பின் கீழ் நடக்கக் கூடிய விவாதம்தான் மிகவும் முக்கியமானது என்பதுதான் என் கருத்து. ஏனெனில் மந்திரிசபை ஏற்று நடத்தக் கூடிய கொள்கைகளைப்பற்றி, அந்தக் கொள்கைகள் எவ்வாறு நிறைவேற்றப் படுகிறது என்பதைப்பற்றி எடுத்துச் சொல்வதற்கு இந்தத் தலைப்பு உதவுகிறது. ஆகவே தான், இதில் பல அங்கத்தினர்கள் பல கருத்துக்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். எந்தெந்த கருத்துக்களை எடுத்துக் கொள்ள முடியுமோ அவைகளை ஏற்றுக்கொள்ள நாங்கள் தயாராயிருக்கிறோம், என்ற முறையில் தான் பொது விவாதத்திற்கு பதில் சொல்லும்போது நான் சொன்னேன். மிக முக்கியமாக, மறுபடியும் இந்த விவாதத்திலும் கவர்னர் பதவி அவசியமா என்பதுபற்றிய விவாதம் இப்போழுது கிளப்பப்பட்டிருக்கிறது. முன்னாலேயே நான் சொல்லியிருக்கிறேன். இதில் ஒன்றுபட்ட கருத்து இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. கவர்னர் பதவி அவசியம் இல்லை என்று நினைக்கக் கூடியவர்களும் இருக்கிறார்கள், அவசியம் என்று

நினைக்கக் கூடியவர்களும் இருக்கிறார்கள். ஆனால் இதுதான் சரியான கருத்து, இன்னொரு கருத்து தவறானது என்று சொல்வது மிகப் பெரிய தவறாகும் என்று முதலில் எடுத்துச் சொல்ல விரும்புகின்றேன். இதுமாதிரி கவர்னர் ஒருவர் அவசியமா என்பது பற்றி இப்பொழுது திராவிட முன்னேற்றக் கழகத்தினர் இங்கே விவாதத்தில் எழுப்பியதுமட்டு மல்ல, இது பல சமயங்களில் இந்த சட்டசபையில் விவாதிக்கப்பட்டது மட்டுமல்ல, நமது அரசியல் சட்டம் உருவான காலத்திலேயே இரண்டு வித கருத்துகள் உலாவின. அதற்குப் பிற்பாடு இந்த விஷயம் தீர ஆலோசிக்கப்பட்டு, மெஜாரிடியாக இருக்கக்கூடியவர்கள் இப்பொழுது இருக்கக் கூடிய நிலைமையிலே கவர்னர் பதவி அவசியம் என்கின்ற ஒரு முடிவு எடுத்தார்கள். இன்றைக்கு நாம் சில அமைப்புகளை ஏற்படுத்தும்பொழுது, பழங்காலத்தில் ஏற்பட்டிருந்த மரபுகளை அடிப்படையாகக் கொண்டு தான் சில முடிவுகளை எடுக்கவேண்டியிருக்கிறது. திடீரென்று புது அமைப்பு வரும்பொழுது அதனால் பல கஷ்டங்கள் ஏற்படக்கூடும். ஆகையினால் அரசியல் நிர்ணய சபை இதுபற்றி ஆராயும்பொழுது 50, 60 வருஷ காலமாக கவர்னர் என்ற ஒரு பதவியை வைத்து நடத்திய மரபு ஏற்பட்டிருக்கிறது, அதை அழித்துவிடவேண்டுமா, அல்லது வைத்துக்கொள்ளுவது நல்லதா என்பது பற்றி ஆலோசனை செய்து, மாறுபட்ட கருத்துக்களையெல்லாம் பரிசீலனை செய்த பிற்பாடு, கவர்னர் பதவி இருப்பது நல்லது என்ற முடிவுக்கு வந்தது. மாறுபட்ட கருத்துக்கு இடம் இருக்கும்பொழுது, அதில் அநேகமாக எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையிலே ஒரு முடிவு செய்யப்பட்ட பிற்பாடு, திரும்பத் திரும்ப அதே கருத்தை எடுத்துச் சொல்லிக்கொண்டிருப்பது ஜனநாயகப் பண்புக்கு விரோதம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அன்பழகன் அவர்கள் ஜனநாயகத் தத்துவத்தை நாம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று ரொம்ப அழகாக வற்புறுத்திப் பேசினார். ஜனநாயகத்தில் அவ்வளவு அக்கரை உடையவர்கள், ஜனநாயகப் பண்பு உடையவர்கள், இரண்டுபட்ட கருத்துக்கள் இருக்கும்பொழுது அதிகமாக இருக்கக் கூடியவர்கள் கருத்தை அனுசரித்து ஒரு முடிவு எடுத்தபிற்பாடு மறுபடியும் திரும்பத் திரும்ப ஒரு பக்கத்தில் இருக்கிற கருத்தையே எடுத்துச் சொல்லி கவர்னர் பதவி கூடாது என்று பேசுவது ஜனநாயகப் பண்புக்கு உகந்ததா என்பதுபற்றி யோசித்துப்பார்க்கவேண்டும். அப்படிமுடிவு ஏற்பட்ட பிறகு கவர்னர் பதவி அனாவசியம் என்று பேசுவது தவறு. அதற்கு அவசியம் இருக்கிறது என்பதை உணர்ந்துதான், அதற்காக ஓரளவுக்கு செலவு ஏற்பட்டாலும்கூட, அந்தச் செலவையும் ஏற்று அந்தப் பதவி இருப்பது அவசியம் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இம்மாதிரி என்னை போல் ஒன்றும் தெரியாதவர்கள் எடுத்த முடிவு அல்ல. நாட்டிலுள்ள மாபெரும் தலைவர்களும், அறிஞர்களும் ஒன்று கூடி இம்மாதிரி முடிவு செய்தார்கள். ஆகவே, இம்மாதிரி ஒரு அமைப்பு அவசியம் என்று முடிவு ஏற்பட்ட பிறகு அதைப்பற்றி திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருப்பதனால் நம்முடைய பண்புதான் குறையுமே தவிர, உடனடியாக சட்டத்தை மாற்றி கவர்னர் பதவியை எடுத்துவிடப்போவதில்லை. அதனால் வீண் மனக்கசப்புக்கும் வெறுப்புக்கும்தான் இடம்ஏற்படுமே தவிர வேறு ஒன்றும் இல்லை. அம்மாதிரி ஒரு அமைப்பை ஏற்படுத்திய பிற்பாடு, அந்த அமைப்பு நல்ல முறையில் நடக்கிறதா என்பது பற்றிப் பேசுவதுதான் காரியத்தைச் சாதித்துக்கொள்ள சாதகமாக இருக்குமே ஒழிய, திரும்பத் திரும்ப என்னுடைய கருத்தைத்தான் மற்றவர்கள் ஒப்புக்கொள்ளவேண்டும். அதுதான் ஜயநாயகப் பண்பு என்கின்ற முறையில் பேசிக்கொண்டிருந்தால், அது ஜனநாயகப் பண்புக்கு மிகவும் புறம்பானது என்பதை மறுபடியும் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ளுகிறேன்.

மற்றொரு அங்கத்தினர் கவர்னருக்கு இவ்வளவு சம்பளமா என்று கேட்டார்கள். சம்பளத்தில் தாரதம்மியம் இருப்பதைப் பற்றி அன்பழகன் அவர்களும் சொன்னார்கள். மலைக்கும் மடுவுக்கும் உள்ள இந்த ஏற்றத் தாழ்வை நீக்குவதற்கு நாம் எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொண்டிருக்கிறோம். அதற்கு மூன்றாவது திட்டத்தில் நாம் என்னென்ன

13th March 1959] [Sri C. Subramaniam]

திட்டங்களை ஏற்கவேண்டுமென்பதுபற்றி ஆலோசனை செய்யலாம் என்று சொன்னேன். இன்றைக்கு கவர்னர் அவர்களுக்கு அவ்வளவு சம்பளம் நிர்ணயிக்கபட்டிருக்கிறது என்றால், இன்றைக்கு இருக்கிற எல்லோருக்கும் அவர் தலைவராக இருக்கிற காரணத்தினால் அவர்களுக்கு சம்பளம் ஒரு படி மேல் இருக்கவேண்டும் என்ற முறையில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஜகன்னாதன் அவர்கள் கணக்குப் போட்டு அவர்களுக்கு வருமான வரியெல்லாம் போக எவ்வளவு மிச்சப்படும் என்பதைச் சொன்னார்கள். அவர்களுக்கு மற்ற சலுகைகள் இருக்கின்றன. அவைகளினால் அதிகச் செலவு ஏற்படுகிறதே, அவர் மூலம் மற்ற நிர்வாக அமைப்பினால் அதிகச் செலவு ஆகிறதே என்றெல்லாம் சொன்னார்கள். கவர்னர் பதவியில் இருப்பவர் அவர் பொறுப்பை நிறைவேற்றுவதற்கு வேண்டிய எல்லாவிதமான வசதிகளையும் செய்துகொடுக்க வேண்டியிருக்கிறது. அதை வைத்துக்கொண்டு கவர்னருக்கு 9 லட்சம் செலவழிகிறதே, 10 லட்சம் செலவழிகிறதே என்று சொல்வதில் பயன் இல்லை. எனக்கு உதவியாக இருக்கக்கூடிய எல்லா நிர்வாக இலாகாக்களுக்கும் ஆகக்கூடிய செலவையும் சேர்த்துக்கொண்டு, நிதி இலாகாவுக்கு இவ்வளவு செலவு ஆகிறதே, நிதி அமைச்சருக்கு சம்பளம் 10 லட்சம் என்று சொல்லக்கூடாது. எனக்கு உதவியாக இருக்கக்கூடிய காரியதரிசி, துணைக் காரியதரிசி எல்லோருடைய சம்பளத்தையும் சேர்த்துக்கொண்டு எனக்கு 10 லட்சம் ரூபாய் சம்பளம் என்று சொல்லுவது எவ்வளவு உண்மையாக இருக்குமோ அதுபோல்தான் கவர்னருக்கு 9 லட்சம் சம்பளம் என்று சொல்லுவதும் இருக்கும். கவர்னர் அவர்களுக்கு இருக்கக்கூடிய பல்வேறு பொறுப்புக்களை நிறைவேற்றுவதற்காகத்தான் பல அமைப்புக்கள் ஏற்படுத்தவேண்டியதாயிற்று. அந்த அமைப்புகளின் காரணமாகத்தான் செலவு ஏற்படுகிறதே தவிர, இவைகளெல்லாம் கவர்னர் அவர்களுடைய சொந்த செலவு அல்ல என்பதை பரிசீலனை செய்துபார்த்தால் நன்றாகத் தெரியவரும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே, திரும்பத் திரும்ப கவர்னர் பதவி வேண்டியதில்லை என்ற கருத்தைத் தெரிவித்துக்கொண்டிருந்தால் பயன் இல்லை. அரசியல் சட்டம் மாற்றி அமைக்கப்படும் வரையில் கவர்னர் பதவி இருந்துதான் ஆகும், வேண்டுமானால், பிரசாரத்திற்கு உபயோகப்படுத்திக்கொள்ளுவதற்காக திருப்பித்திருப்பி சொல்லிக்கொண்டே இருக்கலாமே தவிர, அதன் மூலம் வேறு ஒன்றும் நன்மை ஏற்படப்போவதில்லை. ஒருவரை தலைவர் என்று கொண்டுவந்து வைத்த பிற்பாடு அவர் வேண்டியதில்லை, அவசியமில்லை, என்று சொல்லிக்கொண்டிருந்தால் நிர்வாகம் நல்ல முறையில் நடப்பதற்குக்கு கூட தடங்கலாக இருக்கும் என்ற கருத்தைத்தான் உங்கள் முன்னிலையில் வைக்க விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மந்திரிசபையில் நடக்கக்கூடிய விஷயங்களைப்பற்றி, மந்திரி சபைக்கு உதவியாக இருக்கக்கூடிய ஆட்சி நிர்வாகத்தைப்பற்றி, அதாவது அட்மினிஸ்டிரேடிவ் டிபார்ட்மெண்டு செக்ரடேரியட் பற்றி பேசினார்கள். இன்றைக்கு ஆட்சி நடக்கிற முறையிலே, அது பல பகுதிகளாகப் பிரிந்திருப்பதை அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். சட்டசபை இருக்கிறது. அதிலே பல்வேறு சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. திட்டங்களை ஏற்படுத்துவதற்கும், அதே சமயத்தில் திட்டங்கள் எந்த அளவிலே இருக்கவேண்டும் என்பதற்கும், எந்தெந்த விஷயங்களுக்காக எவ்வெளவு செலவழிக்கவேண்டுமென்பதற்காகவும் சட்டசபை அனுமதி கொடுக்கக் கூடிய முறையிலே இயங்குகிறது. அங்கே எல்லா முக்கியமான விஷயங்களைப்பற்றியும் முடிவு எடுக்கப்படுகிறது. அவ்வாறு முடிவு எடுக்கப்பட்ட பிற்பாடு அந்த முடிவுகளை நிறைவேற்றக்கூடிய பொறுப்பு இன்னொரு பக்கத்தில் நிர்வாகத்தினிடம் ஒப்படைக்கப்படுகிறது. அந்த நிர்வாகத்தில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒரு பகுதி செக்ரடரியேட், அதாவது ஆட்சித் துரை என்று சொல்லலாம். அங்கு இருக்கக்கூடியவர்களுக்கு நேரடியாக எந்தக் காரியத்தையும் செய்வதற்கு பொறுப்பு கிடையாது, அதிகாரமும் கிடையாது, சர்க்கார் ஆணைகள் இடவேண்டியதற்காகவே இந்தப் பகுதி அமைந்

திருக்கிறது. இந்த ஆணைகளை நிறைவேற்றி வைக்கக்கூடிய பகுதி நிர்வாகப் பகுதி என்று வைத்துக்கொள்ளலாம். அதற்காகத்தான் வெவ்வேறு இலாகாவில் தலைவர்கள், தலைவர்களுக்குக் கீழ் ஜில்லா அளவிலே வேலை செய்யக்கூடிய அதிகாரிகள், அவருக்குக்கீழ் சிறு சிறு பகுதிகளிலே இருக்ககூடிய அதிகாரிகள், பல ஜில்லாக்கள் அதன் சொந்த ஒரு மண்டலத்திற்காக இயங்கக்கூடிய அதிகாரிகள் இருக்கிறார்கள். இந்த அடிப்படையிலே நிர்வாகப் பகுதிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. இம்மாதிரி இந்த மூன்று பகுதிகளும் ஒத்து வேலை செய்தால்தான் உண்மையிலேயே பல காரியங்கள் நன்றாக நிறைவேற முடியும் என்பதை நாம் நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும்.

சிவப்பு நாடாவைப் பற்றி பலர் பேசினார்கள். சிவப்பு நாடா முறையினால் அதிகமாக தாமதம் ஏற்படுகிறது என்றெல்லாம் சொன்னார்கள். வெகு சுலபமாக இம்மாதிரி சொல்லிவிடலாம். நான்கூடசில சமயத்தில் பொறுமை இழந்து இவ்வளவு தாமதமாகிறதே, இதற்கு குறுக்கு வழி கண்டுபிடிக்க முடியாதா, இந்த பைலை கிழித்தெறியுங்கள் என்று சொல்லியிருக்கிறேன். நிர்வாக அனுபவத்தைக் வைத்துக்கொண்டு இம்மாதிரி பல விஷயங்களையும் ஆராய்ந்து நன்றாக பரிசீலித்த பிற்பாடு உத்தரவு போடுவது நல்லதா, அல்லது மனதிற்கு உடனடியாக என்ன தோன்றுகிறதோ, மற்ற விஷயங்கள் எப்படியிருந்தாலும் சரி, உடனடியாக மனதிற்கு எது நல்லது என்று தோன்றுகிறதோ அம்மாதிரி உத்தரவு பிறப்பிப்பது நல்லதா என்பதை கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அப்படி உடனடியாக மனதிற்குத் தோன்றுகிறபடி உத்தரவு போடுவது சில விஷயங்களில் நன்மையாக இருக்கக்கூடியதாக இருந்தாலும், பெரும்பாலான விஷயங்களில், ஒரு விஷயம் சர்க்காருடைய கவனத்திற்கு வரும்போது, இதற்கு முன்பு இந்த விஷயம் சர்க்காருடைய கவனத்திற்கு வந்திருக்கிறதா, அப்பொழுது எத்தகைய உத்தரவு பிறப்பிக்கப்பட்டது, அந்த உத்தரவினால் ஏற்பட்ட விளைவுகள் என்ன என்பதைப் பற்றி யெல்லாம் பரிசீலனை செய்து, எல்லா புள்ளி விவரங்களையும் தெரிந்து கொண்ட பிற்பாடு உத்தரவு பிறப்பித்தால், அதில் அநேகமாக தவறுதல் ஏற்படுவது இல்லை. அப்படி உத்தரவு போடும்பொழுது ஏதோ ஒன்று, இரண்டு தவறுதலாகப் போகாமல் இருப்பதில்லை. எத்தனைதான் கவனமாகச் செய்தாலும், நம்மையும் மீறி சில குறைபாடுகள் ஏற்படத்தான் செய்யும். அந்தத் தவறுகளையெல்லாம் குறைப்பதற்கு அடிப்படையாக இருக்கக்கூடியது இந்த பரிசீலனை அமைப்பு. இந்த அடிப்படையில் தான் நிர்வாக அனுபவம் உள்ளவர்கள் படிப்படியாக இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறார்கள். இப்பொழுது இருக்கக்கூடிய முறைகளில் பல முறைகள் சீக்கிரம் வேலை நடப்பதற்கு தடங்கலாக இருக்கின்றன என்பதை அறிந்து, இந்தத் தடங்கலை ஓரளவுக்கு நீக்கியிருக்கிறோம். பழைய முறைகள் எல்லாவற்றையும் அப்படியே அனுசரித்துக் கொண்டு வருகிறோம் என்பதில்லை. ஒரு பக்கத்தில் இருக்கக்கூடிய அதிகாரியிடமிருந்து மற்றொரு பக்கத்தில் இருக்கும் அதிகாரிக்கு "பைல்" போகவேண்டுமென்றால் முன்பெல்லாம் எங்கேயோ சுற்றிக்கொண்டு வரும். அம்மாதிரி ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்கு போகவேண்டிய பைல்களெல்லாம் உடனே போகவேண்டும். இவ்வளவு மணி நேரத்திற்குள் போகவேண்டும், இவ்வளவு நாட்களுக்குள் போகவேண்டும் என்றெல்லாம் கால அளவு நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது, சில பைல்கள் "ப்ளு பாடில்" போகும், சில "எல்லோ பாடில்" போகும் , சில "வைட் பாடில்" போகும், சில "பாடில்" சிவப்பு நாடா கட்டியிருக்கும். சிலவற்றில் வெள்ளை நாடா கட்டியிருக்கும். இம்மாதிரி எது அவசரம், எது முக்கியம் என்பதையெல்லாம் குறிப்பதற்கு பலவேறு தாப்பட்ட "பாடுகளில்" பைல்கள் வருகின்றன. ஏதாவது தாமதம் ஏற்பட்டிருந்தால், அம்மாதிரி தாமதம் ஏற்பட்டதற்கான காரணத்தையும் "பைலில்" எழுதவேண்டும் என்று உத்தரவு போட்டிருக்கிறோம். மந்திரிகளுக்கு "பைல்கள்" வரும்பொழுது வெறுமனே கையெழுத்து மட்டும் போடுவதில்லை. தாமதம் ஏற்பட்டிருந்தால் தாமதத்திற்கான காரணத்தைக்

கேட்கிறோம். மற்றவர்கள் கவனிக்காவிட்டாலும், எங்களுக்கு "பைல்கள்" வரும்பொழுது தாமதம் ஆகியிருந்தால் அதைப்பற்றி கேட்கத்தான் செய் கிறோம்.

இந்த முறையில் இப்போது தாமதம் ஏற்படுவதை எவ்வளவோ குறைக்கப்பட்டிருக்கின்றது என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன் இன்னும் திறமையாக வேலை செய்து காலதாமதத்தை குறைத்துக் கொள்ள முடியும் என்று நான் நம்புகிறேன். அதற்கான முறையிக் வேலை செய்து வருகின்றோம். இப்போது இருக்கின்ற அனுபவத்தைக் கொண்டு எந்தெந்த முறைகளிலெல்லாம் காலதாமதத்தை குறைக்க முடியுமோ அந்த அளவில் குறைப்பதற்கு முயற்சி செய்து வருகின்றோம். வேறு யாராவது ஆட்சியில் வந்தால் சிலவேளை இதைவிட சீக்கிரமாக நடவடிக்கை எடுப்பதற்கு முயற்சி செய்யலாம். நான் முடியாது என்று சொல்ல முன் வரவில்லை. ஏதோ தமிழ் நாட்டிலுள்ள மக்கள் ஒரு சிலரைதான் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். ஆகவே இப்போது அவர்கள் இந்த காரியங்களை செய்து கொண்டிருக்க முடியும். அதல்லாமல் மற்ற வர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்து இந்த காரியங்களை எல்லாம் செய்ய முடியாது என்று சொல்ல நான் தயாராக இல்லை. அதற்கும் சந்தர்ப்பம் உண்டு என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The question is:

ஏதோ எல்லா காரியங்களிலும் நடவடிக்கை எடுப்பதற்கு காலதாமதம் ஆகிறது என்று கனம் அம்மையார் அவர்கள் சொன்னார்கள். அப்படியிருந்த நிலைமை இப்போது மாறிவிட்டது என் பதை எண்ணிப் பார்க்கவேண்டும். பிப்ரவரி-மார்ச் மாதங்களில்தான் ஜாஸ்தியாகவேலை நடந்து கொண்டிருக்கிறது, ஆரம்பத்தில் எல்லாம் சரி யாக வேலை நடப்பதில்லை என்று சொன்னார்கள். இதைப் பற்றி, நாலைந்து வருடங்களாக பரிசீலனை செய்து பார்த்து இப்போது அந்த நிலைமை கழிந்த இரண்டு மூன்று வருடங்களாக மாறியிருக்கிறது என்பதை இப் போதுள்ள அனுபவத்திலிருந்து அறிந்துகொள்ள முடியும். முன்பெல்லாம் பட்ஜெட் மார்ச் 31-ம் தேதி நிறைவேற்றிப் பின்னால்தான் ஸெக்ரட்டேரி டியட்டுள்ள எல்லா தலைமை அதிகாரிகளுக்கும் அறிவிக்கப்படும். அதன் பின்னால் இதில் எவ்வாறெல்லாம் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என் பதைப் பார்த்து அதற்கப்புறம் நடவடிக்கை எடுப்பதற்கு ஜூலை—ஆகஸ்டு மாதமாகிவிடும். அதன் பின்னால் அந்தந்த இடங்களுக்கு அறிவித்து வேலை நடத்தும்போது அவசர அவசரமாக வேலைகளைச்செய்ய வேண்டிய நிலைமையிருந்தது. இந்த நிலைமை இருந்து கொண்டிருந்ததினால் அந்தந்த இலாகாக்காளிலுள்ளவர்கள் அந்த ஆண்டுக்குள் வேலையை முடிப்ப தற்காக பிப்ரவரி-மார்ச் மாதங்களில் பரீட்சைக்கு படிப்பது போல அவசர மாக டெண்டர்களை எல்லாம் வரவழைத்து அவசரமாக வேலை செய்வார்கள். இப்போது அந்த நிலைமை இல்லை. பட்ஜெட்டை தயார் செய்து சட்டசபையில் கொண்டு வந்து நிறைவேற்றுவதற்கு முன்னால்—சட்டசபையில் நிறைவேற்ற முடியும் என்ற நம்பிக்கையிருப்பதினால்—இல்லையென்றால், நிறைவேற்ற முடியவில்லையென்றால் மந்திரிசபை உடனே ராஜிநாமா செய்ய வேண்டும், அது வேறு விஷயம்—சட்டசபை மறுக்காது என்ற நம்பிக்கையில்—காபினெட் பட்ஜெட்டை பாஸ் செய்தவுடன் எல்லா இலாகா தலைமையினருக்கும் அனுப்பிவைக்கப்படுகிறது. அதன் படி எல்லா இலாகாவினரும் முடிவு எடுப்பதற்கு வசதியாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது. அவ்விதம் முடிவு எடுப்பது மட்டுமல்ல, மூன்று மாதங்களுக்கு ஒரு முறை பலவேறு இலாகா தலைவர்களையும் அழைத்து அவர்கள் அந்தந்த காலத்திற்குள் எவ்வளவு தூரத்திற்கு தங்கள் வேலைகளை நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதைக்கேட்டு, அவ்விதம் வேலை கள் சரியான முறையில் நடத்தப்படவில்லையானால் என் போடப்பட்டிருக்கிற திட்டத்தின்படி நிறைவேற்ற முடியவில்லை, அதற்கு காரணம் என்ன என்பதையும் கேட்டு பரிசீலனை செய்யப்படுகின்றது. ஒவ்வொரு வரு ஷத்திற்கும் எவ்வளவு செலவு செய்யப்பட்டிருக்கிறது என்று பார்க்க

வேண்டும் என்று அங்கத்தினர்கள் சொன்னார்கள், அவ்விதம் கூட இல்லாமல் ஒவ்வொரு மூன்று மாதங்களுக்கும் எவ்வளவு வேலைகள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன என்பதை பார்த்து, வேலைகள் எல்லாம் சரியாக நடைபெறுகின்றனவா என்பதை பரிசீலிப்பதற்கும் வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது. இதன் காரணமாக காரியங்கள் எல்லாம் சரிவர நடத்தப்பட்டு வருகின்றன என்பதை கனம் அங்கத்தினர்களுக்கு ஓரளவு மகிழ்ச்சியுடன் நான் தெரிவித்துக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர் டி. எஸ். ராமசாமி பிள்ளை போன்றவர்கள் வேண்டுமென்றால், அவ்விதம் ஒன்றுமில்லை, வேறு நாட்டில் தான் அப்படியெல்லாம் நடக்க முடியும் என்று சொல்லலாம். அதைப்பற்றி கவலையில்லை....(திரு. டி. எஸ். ராமசாமி பிள்ளை : நான் அவ்விதம் சொல்லவில்லையே)........எவ்விதமிருந்தாலும் எங்களால் முடிந்தவரை சில காரியங்களைச் செய்திருக்கிறோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். இப்போது செய்து கொண்டிருப்பதும் போதாது, இன்னும் கூடுதலாகச் செய்யவேண்டும் என்று சொன்னால் அதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இப்போதிருக்கின்றவர்களுக்கு போதிய திறமையில்லை என்று சொன்னால், தமிழ் நாட்டு மக்களுக்கே இவ்வளவுதான் திறமையிருக்கின்றது என்று சொல்வது போல்தான் ஆகும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே முன்னால் இருந்து கொண்டிருந்தது மாதிரியே இப்போதும் எல்லா காரியங்களிலும் நடவடிக்கை எடுப்பதற்கு காலதாமதம் ஏற்படுகிறது என்று சொல்லுகின்ற கருத்து தவறான கருத்து என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இந்த மந்திரிகளுக்கெல்லாம், திறமையில்லை, இந்த மந்திரி சபைக்கு திறமையில்லை என்று சொல்வதற்கு இந்த சபையிலுள்ள அங்கத்தினர்களுக்கு பூரண உரிமை இருக்கிறது. அதை நான் மறுக்கவில்லை, மற்றவர்களுக்கு எல்லாம் இதைவிட திறமை இருக்காது என்று சொல்லுவதற்கும் நான் தயாராகயில்லை. பொதுவாக எங்களால் இயன்றவரை வேண்டியதைச் செய்துதான் வருகிறோம் என்பதை மீண்டும் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக இந்த அதிகார வர்க்கத்தில் கொடுக்கப்படுகின்ற சம்பளங்களில் மிகவும் ஏற்றத்தாழ்வு இருப்பதாகச் சொன்னார்கள். சிலருக்கு 25 ரூபாய் சம்பளம் கொடுக்கின்ற அதே சமயத்தில் ஒரு சிலருக்கு 2,500 ரூபாய் 3,000 ரூபாய் என்று சம்பளம் கொடுக்கப்பட்டு வருகிறது. இது முறையல்ல என்றும் தெரிவிக்கப்பட்டது. இது உண்மைதான். ஐ.ஸி.எஸ். அதிகாரிகளாக இருக்கின்றவர்கள் அதிகமாகத்தான் வாங்குகிறார்கள். நம் நாடு சுதந்தரம் பெற்ற காலத்திலேயே இவர்களுக்கு கொடுக்கப்படும் உரிமைகள் ஒன்றும் பாதிக்கப்படக்கூடாது என்று சொல்லப்பட்டது. அதற்கு நாம் உறுதி கொடுத்திருக்கிறோம். இவ்விதம் ஒரு சில அதிகாரிகளுக்கு மட்டும் அதிக சம்பளம் கொடுத்துக்கொண்டிருப்பதில் பெரிய நஷ்டம் ஒன்றும் வந்துவிடப்போவதில்லை. கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டியது நம்முடைய பொறுப்பு. அதோடு இப்பொழுது இருந்து கொண்டிருக்கின்ற ஐ.ஏ.எஸ். அதிகாரிகளுக்கு கொடுக்கப்படும் சம்பளம் 2,250 ரூபாய் அதிக பட்சமாய் இருக்க வேண்டும் என்று நாம் நிர்ணயித்திருக்கிறோம். இவ்விதம் வேண்டுமென்றால் கொடுக்கக்கூடாது என்று சொல்லலாம், பலருக்கு 60 ரூபாய் கொடுத்துக்கொண்டிருக்கும் போது ஒரு சிலருக்கு மட்டும் 2,250 என்று கொடுத்துக்கொண்டிருப்பது அதிகம்தான். இதில் ஏற்றத்தாழ்வு இருக்கத்தான் செய்கிறது. ஆனால் இவ்விதம் திறமையாக இருக்கின்றவர்களை எல்லாம் நீக்கிவிட்டு குறைந்த சம்பளம் பெறுவதற்கு தயாராக இருக்கக்கூடியவர்களை மட்டும் நியமித்து சர்க்காரை நடத்திக்கொண்டிருந்தால் சர்க்கார் திறமையான முறையில் நடந்து கொண்டிருக்குமா என்பதையும் நாம் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்றைக்கு தனியார் துறையை எடுத்துக்கொள்ளுங்கள். அங்கு எவ்வளவு ஏற்றத்தாழ்வு இருக்கின்றது என்பதையும் எடுத்து நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். இப்படிப்பட்ட தனிப்பட்ட துறைகளில் வேலை செய்யக் கூடியவர்கள் கூடுதல் அளவில் சம்பாதிக்க முடியும். முதலாளிகளை விட்டுவிட்டாலும்கூட அவர்களுக்கு கீழே வேலை பார்த்து வருகின்றவர்களுக்கு எவ்வளவு ஊதியம் கொடுக்கப்படு

13th March 1959] [Sri C. Subramaniam]

கின்றது என்பதையும் நாம் பார்க்கவேண்டும். நமது நாட்டிலேயே பல வெளிநாட்டு வர்த்தக ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அதே போன்று பல தொழில் ஸ்தாபனங்கள் இங்கே இருக்கின்றன. இந்த ஸ்தாபனங்களிலெல்லாம் இந்தியர்களை வேலைக்கு வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த ஸ்தாபனங்களில் எல்லாம்கூட ஓரளவு நல்ல திறமையுள்ளவர்களும் ஆற்றல் உள்ளவர்களும் அறிவு படைத்தவர்களும்தான் மேல் தட்டில் இருந்து வருகிறார்கள். இவர்களுக்கு எல்லாம் அதிகமாக ஊதியம் கொடுக்கப்பட்டு வருகின்றன. அதே போன்றுதான் அரசாங்கத்திலும் பல திறமையுள்ளவர்கள் இருக்கிறார்கள், அதே போன்றுதான் நல்ல ஆற்றல் படைத்தவர்களும் அறிவுபடைத்தவர்களும் நமது அரசாங்கத்தில் வேலை செய்து வருகிறார்கள். அவர்களை யெல்லாம் வேண்டாம், 50 ரூபாய்க்கு வேலை செய்யக்கூடியவர்கள் வந்தால் வரட்டும், அவர்களை வைத்துக்கொண்டு, அவர்களையெல்லாம் காரியதரிசிகளாக நியமித்து வேலை நடத்துவதில் கஷ்டம் ஒன்றுமில்லை. ஆனால் அதே சமயத்தில் அரசாங் நிர்வாகம் ஒழுங்காகவும், திறமையாகவும், நடைபெறுமா என்பதையும் நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டும். இந்த முறையில் நடத்துவதாக இருந்தால் நிச்சயமாக பல கஷ்டங்கள் ஏற்படலாம், அதன் காரணமாக கோடிக்கணக்கான ரூபாய்கள் நஷ்டம் ஏற்படலாம். அதன் காரணமாகத்தான் திறமையானவர்களை, நல்ல ஆற்றல் படைத்தவர்களை, நல்ல அறிவு படைத்தவர்களை அவர்களுக்கு கூடுதலான ஊதியம் கொடுத்தாலும் பரவாயில்லை. அவர்களை நிர்வாகத்தில் வைத்திருக்கவேண்டும் என்ற முறையில்தான் நாம் அவர்களை வைத்திருக்கிறோம். அவர்களை நாம் வைத்துக் கொள்ளவில்லை என்றால் அவர்கள் தங்களுக்கு ஊதியம் அதிகமாக கிடைக்கும் இடத்திற்குத்தான் செல்வார்கள். அதல்லாமல் அரசாங்கத்திற்குத்தான் வேலை செய்யவேண்டும் என்ற அடிப்படையில் இங்கு வந்து வேலை செய்யமாட்டார்கள். அந்த முறையில் பார்த்தால் அவர்களுடைய ஊதியத்தைக் குறைக்க முடியாத நிலைதான் இப்போது இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இன்றைக்கு நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்கான பல திட்டங்களை வகுக்க வேண்டியிருக்கிறது. அதற்குத் தகுந்தபடி வேலைத் திட்டங்களை வகுக்க வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம் தகுதியான ஆட்களை நியமித்தால்தான் நமது வேலைகளைச் சரியாக நிறைவேற்றிவைக்க முடியும். அதல்லாமல் இந்த அதிகாரிகளின் சம்பளத்தைக் குறைப்பதினால் மட்டும்......

**Sri K. ANBAZHAGAN:** தலைவர் அவர்களே, நான் பேசிய போது இப்படிப்பட்ட அதிகாரிகளின் சம்பளத்தைக் குறைக்க வேண்டும் என்று சொன்னதாக அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டு பேசுகிறார்கள். நான் எடுத்துக்காட்டியது, தாழ்ந்த நிலையிலுள்ளவர்களின் ஊதியத்தை உயர்த்தவேண்டும் என்பதைதான் வலியுறுத்தினேனே தவிர உயர்ந்த அதிகாரிகள் 2,500 ரூபாய் சம்பளம் பெறக்கூடாது என்று நான் குறிப்பிடவில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM:** இதைப்பற்றி யார் குறிப்பிட்டாலும் சரி இவ்விதம் உயர்ந்த சம்பளம் கொடுக்கக்கூடாது என்கிற கருத்துக்கு நான் பதில் சொல்லவேண்டியவனாக இருக்கிறேன். அந்த முறையில் தான் நம்முடைய அரசாங்க நிர்வாகம் சரியான முறையில் இயங்குவதற்கு இப்படிப்பட்ட அதிகாரிகளை வைத்திருக்க வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு இப்போது இருக்கின்ற நிலையில் உயர்ந் சம்பளம் கொடுக்க வேண்டியிருக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்தபடியாக குறைந்த ஊதியம் பெறுபவர்கள் எல்லோருக்கும் ஊதியத்தை உயர்த்த வேண்டும் என்று சொல்வதையும் எடுத்துக்கொள்ளலாம், இவ்விதம் குறைந்த ஊதியம் பெறுகின்ற எல்லோருக்கும் குறைந்தது 100 ரூபாயாவது கொடுக்க வேண்டும் என்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. இப்போது, அதாவது சமீபத்தில் கொடுத்த சம்பள உயர்வின் காரணமாக வருடம் ஒன்றுக்கு 181 லட்சம் ரூபாய் செலவு ஏற்படுகின்றது. அதே சமயத்தில் குறைந்தது 100 ரூபாய் என்ற அளவுக்கு எல்லோருக்கும் கொடுக்க வேண்டும் என்றால் குறைந்தது

ஏழரைக் கோடி ரூபாய் ஆகும் என்று தெரிகிறது. இதைப் பற்றி நாம் கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும். இவ்விதம் ஏழரைக்கோடி ரூபாயும் செலவு செய்து இவர்களுடைய சம்பளத்தை எல்லாம் உயர்த்துவது நல்லதா அல்லது பல திட்டங்களை போட்டு அவைகளை எல்லாம் நிறைவேற்றி இந்த நாட்டிலுள்ள மக்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவது நல்லதா என்பதைப் பற்றி நாம் முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால் 100 ரூபாய் குறைந்த சம்பளம் இருக்க வேண்டும் என்று சொல்லுகின்ற அதே சமயத்தில் கிராமப்புறத்தில் வேலை செய்துகொண்டிருக்கிறவர்களுக்கு எந்த முறையில் ஊதியம் கிடைத்துக்கொண்டிருக்கிறது என்பதையும் நாம் பார்க்கவேண்டும். சென்னையிலிருந்து கொண்டு சொல்வதை மட்டும் கணக்கில் எடுத்துக்கொள்ளக்கூடாது. இன்றைக்கு கிராமங்களில் இருக்கின்ற விவசாயிகளுக்கு கிடைக்கின்ற ஊதியத்தையெல்லாம் கணக்கெடுத்துப் பார்க்கும்போது இப்போது இருக்கின்ற 60 ரூபாய் சம்பளத்தை கூட குறைக்கவேண்டிய நிலை ஏற்படுமோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது. ஆகவே இன்றுள்ள நிலைமையில் இப்போது இருக்கின்ற ஊதியத்தை அதிகப்படுத்திக் கொடுக்கவேண்டுமென்றால் வரிகளை இன்னும் அதிகமாக வசூல் செய்யவேண்டும். இந்த முறையில் இப்போது வசூலிக்க வேண்டிய வரிகளை எல்லாம் இரண்டு மடங்காக்கி வசூலித்து ஊதியத்தை அதிகப்படுத்திக் கொடுக்க முடியுமா என்பதைப் பார்க்கும்போது கொடுக்க முடியாது என்கின்ற நிலைமைதான் வந்து சேருகிறது. இந்த இக்கட்டான நிலைமையை இப்போது இருக்க கூடிய நிலைமையில் எவ்வாறு சமாளிப்பது என்றால் அவர்களுடைய கஷ்டங்களை உணர்ந்து அவர்களுக்கு நிவாரணம் கொடுக்க வேண்டுமென்பதை ஒப்புக்கொள்கிறேன். நிவாரணமெல்லாம் ஒரு புறம் இருக்க, நான் முன்னமேயே சொன்னது போல பொருளாதார வாழ்வு உயர்ந்தாலொழிய, மத்தியில் இருப்பதை ஒருவருக்கொருவர் பங்கு போட்டுக்கொள்வதால் இருக்கக் கூடிய பற்றாக்குறையை பங்கு போட்டுக் கொள்வதால் கோடிக் கணக்கான மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து விடாது. மேலும் மேலும் நாட்டின் செல்வத்தை எப்படி உயர்த்துவது, நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை எப்படி உயர்த்துவது, அதற்காக எந்த முறையில் பாடுபடுவது என்று முதலில் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. உற்பத்தி பெருக்க அடிப்படையில் திட்டம் போட்டு அதற்கு முதலிடம் கொடுக்கிறோம் என்றால் மற்றவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம் என்பதற்காகவல்ல. இதன் மூலமாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை நல்ல முறையில் உயர்த்த முடியும் என்று, விவசாயத் துறையாக இருந்தாலும், தொழில் துறையாக இருந்தாலும், எதுவாக இருந்தாலும், உற்பத்தியை எப்படிப் பெருக்குவது என்று நினைக்க வேண்டியவர்களாக இருக்கிறோம் அதிலே பல திட்டங்களைச் சொன்னார்கள் கனம் அண்ணாதுரை அவர்கள். பேசும்போது சொன்னார்கள் சர்க்காருக்கு வரும்படி வருவதற்கு பஸ் துறையை என் எடுததுக் கொள்ளக் கூடாது என்று சொன்னார்கள். சர்க்காருக்கு வரும்படி வருவதற்கு சினிமா துறையை என் எடுத்துக் கொள்ளக் கூடாது என்று கேட்டார்கள். பஸ் துறையும், சினிமா துறையும் பொருள் உற்பத்தி செய்யக்கூடியதுறைகள் அல்ல இருக்கக் கூடிய வசதிகளைக் கொடுக்கக் கூடிய துறைகள் மக்களிடத்திலே எந்த வகையிலே வரி வாங்குவது, மக்களிடத்திலே எவ்வளவு இருக்க வேண்டும், சர்க்காரிடத்திலே எவ்வளவு இருக்கவேண்டும் என்பதெல்லாம் வேறு விஷயம் ; இந்த வருவாயை சர்க்கார் எடுத்துக் கொள்ளவேண்டும், இது பொது மக்களிடம் போகக்கூடாது என்று சொல்வது அது வேறு விஷயம். இதை ஒரு திட்டமாக வைத்து, அதன் மூலமாக பொருளாதாரம் உயர்ந்துவிடும் என்றால் அது தவறான காரியம். உற்பத்தி பெருகக் கூடிய காரியமல்ல. தொழில் துறை வளரக் கூடிய கார்ய மல்ல. இவைகளெல்லாம் வசதி செய்து கொடுக்கக் கூடிய துறைகள். இப்போது தாற்காலிகமாக இவைகளை மக்களிடத்திலே விட்டு வைப்பதில் தவறில்லை. சினிமா துறையை எடுத்துக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டால், அதை எடுத்துக் கொள்வதில் தவறில்லை. அவர்களுக்கெல்லாம் நஷ்ட ஈடு கொடுத்து கோடிக் கணக்கான ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்தும் கூட அதனால்

13th March 1959] [Sri C. Subramaniam]

உற்பத்தி பெருகப்போவதில்லை. அப்படி கோடிக்கணக்கான ரூபாயை நஷ்ட ஈடாகக் கொடுப்பதற்கு பதில் வசதி ஏற்படுமானால் வேறு துறைகளில் பயன்படுத்தி தொழில் துறையில் பயன்படுத்தி பொருளாதார வளர்ச்சியில் ஈடுபடுத்த வேண்டுமே தவிர மற்றவர்கள் கொடுக்கக் கூடிய வசதியை நாம் எடுத்துக் கொண்டு கொடுக்கவேண்டும், வரும்படி அதிகமாக இருக்கிறது என்று பார்ப்பது சரியான கணக்கல்ல என்று நான் வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சர்க்கார் வேறு, சமுதாயம் வேறு என்பதல்ல. எல்லோரும் சேர்ந்து உழைப்பதன் மூலம், செல்வம் பெருகுகின்ற முறையில் அபிவிருத்தி அடைகிற முறையில் பொருளாதார வளர்ச்சி ஏற்படுகின்ற முறையில் உற்பத்தி பெருகுகின்ற முறையில என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று பார்க்க வேண்டுமே தவிர, பஸ்காரர்கள், இருக்கிறார்கள், சினிமாக்காரர்கள் இருக்கிறார்கள், அவைகளை எடுத்துக் கொண்டால் போகிறது என்று சொன்னால், அதனால் புதிய உற்பத்தி ஒன்றும் ஏற்படுவதில்லை புதிய வசதி ஒன்றும் சமுதாயத்திற்குக் கிடைப்பதில்லை. இருப்பதே சர்க்கார் பக்கம் வேண்டுமானால் வந்து விடலாம். திட்டம் என்று சொல்லும்போது, " நாங்கள் திட்டங்களைச் சொல்லி விட்டோம் " என்று பார்க்காமல், உற்பத்தி பெருகுகிற திட்டங்கள் செல்வம் பெருகுகிற திட்டங்கள் என்ன என்று சொன்னால், அதற்கு முதலிடம் கொடுத்து மற்றவர்கள் ஆரம்பிக்க வில்லையானால் அந்தத் திட்டங்களை சர்க்கார் ஆரம்பித்து, முன்னேறக் கூடிய திட்டங்களை நிறைவேற்றவேண்டுமென்று நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அதே மாதிரி இன்றைக்கு தனியார் துறை பற்றி பலர் பல கருத்துக்களைத் தெரிவித்தார்கள். தனியார் துறை கூடாது என்று சிலர் சொல்லுகிறார்கள். தனியார் துறை இருக்கவேண்டுமா அல்லது இருக்கக் கூடாதா என்பதில் முதலிலிருந்தே என்னுடைய கருத்து ஒரே மாதிரியாக இருக்கிறது. எல்லோரும் யோசனை செய்து பார்த்து, தனியார் துறை இருக்க வேண்டுமென்று சொல்லும்போது, தனியார் துறை " கூடாது, கூடாது " என்ற கருத்தையே வலியுறுத்தி வருவதால் மட்டும் தனியார் துறை போகாது. தனியார் துறை கூடாது என்ற முடிவு எடுத்து, அதை நிறைவேற்றினால் தான் தனியார் துறை போகும். கம்யூனிஸ்ட் கட்சி கூட தனியார் துறை உடனடியாகப் போகவேண்டுமென்று விரும்பவில்லை என்று தெரிவித்திருக்கிறார்கள். அந்தத் துறைக்கு இன்னென்ன கட்டுப்பாடுகள் இருக்க வேண்டுமென்று அவர்களிடம் சில கருத்துக்கள் இருக்கின்றன. மற்றவர்களிடம் அதற்கு வேறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன. ஒன்று தனியார் துறை வேண்டுமென்று வைக்கவேண்டும், அல்லது தனியார் துறையே வேண்டாம், எல்லாமே சர்க்காருக்குச் சொந்தமாக இருக்க வேண்டும் என்று வைக்கவேண்டும். அழகாக தனித்துறை என்று சொல்லி விட்டு அதிலே பல சங்கடங்களை வைத்திருப்பதை விட தனியார் துறையே வேண்டாமென்று சொல்லி விடலாம். இதனால் சமுதாயத்திற்கு நஷ்டமே தவிர லாபம் இல்லை. ஒரு ஸ்தாபனம் வேண்டு மென்று சொல்லும்போது அதற்கு எல்லாவித வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டும். அப்படிச் செய்து கொடுக்கும்போது முதலாளிகளுக்கு ஏதோ சாதகமாக இருக்கிறார்கள் என்று சொல்லும்போது . . . .

Sri P. S. CHINNADURAI : இது நியூ மாடல் சோஷலிஸமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : சின்னதுரை சோஷலிஸம் எப்போதுமே வரப்போவதில்லை. அவர் மனதில் நினைத்துக் கொண்டிருப்பது வேறு வித சோஷலிஸம். அவர் தலைமையில் இருந்தால் தான் அந்த சோஷலிஸம் நிறைவேறுமோ என்னவோ தெரியவில்லை. அதற்கு நான் பதில் சொல்ல வேண்டியதில்லை.

பொருள்களை உற்பத்தி செய்வதில் தனியார் துறை இயங்க வேண்டுமென்று சொன்னால் அந்தத் துறை திறமையாக இயங்க அதற்குத் தீங்குகள் வராமல் பாதுகாப்புகள் எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம். ஒன்றும் செய்ய முடியாத முறையில் உற்பத்தி பெருக முடியாத முறையில் பல்வேறு தடங்கல்கள் போடுவதால் சிறிய முதலாளிகள் கஷ்டப்

[Sri C. Subramaniam] [13th March 1959

படுவதால், உற்பத்தி குறைகிற காலத்தில் சமுதாயம் பாதிக்கப்படுகிறது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அப்படியில்லையானால் தனியார் துறைக்கு எந்த வித பாகுபாடும் இருக்கக் கூடாது, எல்லாத் துறைகளுக்கும் பொதுவாக இருக்க வேண்டும் என்ற முடிவுக்குத் தான் வரவேண்டும். கம்யூனிஸ்ட் கட்சி தனியார் துறை இருக்க வேண்டுமென்று ஒப்புக் கொள்ளும்போது, அது சரியாக நடக்காத முறையில் பலவித நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்று சொல்லும்போது தான் எனக்குப் புரியவில்லை. தனியார் துறை வேண்டுமென்றால் அதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுக்கவேண்டும். இன்றைக்குத் தனிப்பட்டவர்கள் மட்டும் நன்றாக நடத்தவில்லையா ? பலவேறு முறைகளில் உற்பத்தி பெருக வேண்டும் என்று சொன்னால், அதிலே தனியார் துறையும் இருக்க வேண்டுமென்று சொல்வது ஜனநாயக ரீதியிலே அமைந்திருக்கிறது என்று வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

ஆகையால் தான் இன்றைக்கு இப்போது இருக்கக்கூடிய தொழில்கள் மட்டும் இருந்தால் போதாது. இன்னும் பல பெரும் தொழில்கள் வேண்டும் அதற்கு இருக்க வேண்டிய சலுகைகள் என்ன, என்ன வசதிகள் வேண்டும் என்று பார்த்து இன்றைக்கு சர்க்கார் அதற்கு முதலிடம் கொடுக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு சமுதாயத்திலே இயங்கிக் கொண்டிருக்கக் கூடிய ஸ்தாபனங்களை விட்டு, புதிய ஸ்தாபனங்கள் பல நம் மாகாணத்தில் வரவேண்டும் என்று சொல்லும்போது, இப்போது இருக்கக் கூடியதை சர்க்கார் எடுத்துக் கொள்வதில் கவனம் செலுத்தக் கூடாது, அதில் மட்டும் கவனம் செலுத்தினால் நாம் முன்னேற்றம் காண முடியாது என்று பார்க்கும் போது தான் தனியார் துறைக்கு இன்றைக்கு ஒரு இடம் இருக்கிறது. சர்க்கார் செய்வதற்குப் பல காரியங்கள் காத்துக் கொண்டிருக்கின்ற காரணத்தினால் இப்போது இருப்பதில் கை வைக்க வேண்டிய அவசியமில்லை. நான் இப்படிச் சொல்லும் போது முதலாளிகள் பேரில் ஏதோ அக்கறை கொண்டு சொல்கிறேன் என்பதல்ல. இன்று இருக்கக் கூடிய சூழ்நிலையில் அவர்களுடைய முயற்சி உற்பத்திப் பெருக்கத்திற்குப் பயன்படக் கூடிய முறையில் நாம் நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது. சமுதாயத்தில் எல்லா சக்திகளையும் பயன் படுத்தி, நல்ல முறையில் உற்பத்தி பெருகினால், நாட்டிலே இருக்கக் கூடிய ஏற்றத் தாழ்வுகள் நீங்கக் கூடியது மட்டுமல்ல, பல குறைகள் அப்போது தான் நீங்கப் போகிறதே தவிர எங்கள் பக்கத்தில் ஒரு பழமொழி சொல்வார்கள், இங்கே என்ன சொல்வார்களோ என்னமோ எனக்குத் தெரியாது—ஆடிக் குளிருக்கு பற்றாத போர்வையை இழுத்துப் போர்த்தினால், காலுக்கும் போதாது, தலைக்கும் போதாது என்று சொல்வார்கள்—அந்த முறையில் தான் ஆகும்.

ஒரு பக்கம் நாம் சலுகைகள் கொடுக்க வேண்டுமென்று சொல்லும் போது, சலுகைகள் என்று நமக்குத் தோன்றுகிறது. அதே அளவுக்கு இன்னொரு பக்கத்தில் இருக்கக் கூடிய சலுகைகளை எடுத்துக் கொள்கிறோம் என்பதை நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். என்.ஜீ.ஓ.-க்களுக்கு குறைந்தது 100 ரூபாயாவது கொடுக்க வேண்டுமென்று கூறுவதை யாரும் மறுக்க முடியாது. அப்படிக் கொடுக்கும் போது அது யாரை பாதிக்கிறது என்று யோசிக்க வேண்டும். ஒரு பகுதியை மட்டும் பார்த்துப் பிரயோசனம் இல்லை. நாம் பூரா சமுதாயத்தையும் இயக்கி வருகிறோம், ஆகையால் சமுதாயத்திலே இருக்கிற சூழ்நிலையை அனுசரித்து நடக்க வேண்டியிருக்கிறது. அரசாங்கத்தில் உள்ளவர்களால் சமுதாயத்தின் சூழ்நிலையை மறந்து வாழ முடியாது என்று வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

எங்களால் இயன்ற அளவுக்கு இந்தத் திட்டங்களை வகுத்து நிறைவேற்றி வர முயற்சி செய்து வருகிறோம். மந்திரிகள் நடந்து கொள்ளும் விதம் பற்றி குறைகூறினார்கள். யார் வேண்டுமானாலும், யார் மீது வேண்டுமானாலும் குற்றம் கண்டு பிடித்து விடலாம். எங்களைப் போன்ற மந்திரிகளிடம் குற்றம் இருக்காது என்று சொல்லிக் கொள்ள வில்லை.

13th March 1959] [Sri C. Subramaniam]

எதிர் கட்சி அங்கத்தினர் ராமசுவாமி பிள்ளை போன்ற மகான்களைக் கேட்டுக் கொள்வது, அவர்களை நினைத்துக் கொள்வதைப் போல் எங்களை நினைத்துக் கொள்ளாமல், மனிதர்கள் என்று நினைத்து, மன்னித்து விட்டு, பெரிய மனது பண்ணி, எங்களுடைய குற்றங்களைத் திருத்தி நல்ல முறையில் முயற்சி செய்து காந்திஜி அவர்கள் சொல்வதுண்டு, இன்னொருவரைத் திருத்த நாம் முன்னர் வலிமையைப் பெற்று, மனத்தூய்மை இருக்கவேண்டும் என்று அப்படி நல்ல மனப் பண்பாடு, நல்ல மனத் தூய்மை இருக்குமானால், அதன் காரணமாக நாங்கள் திருந்தி பணியாற்றுவதற்கு செய்யுங்கள் என்று நான் அவர்களை அடி பணிந்து கேட்டுக் கொள்கிறேன். அந்தத் துறையிலே அவர்கள் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இது ஒரு புறமிருக்க, மந்திரிகள் சுற்றுப்பிரயாணம் செய்வதைப் பற்றி பலர் குறைகூறிப் பேசினார்கள். ஒரு பக்கத்திலே ஒரு அங்கத்தினர் சொன்னார். "எல்லாம் காங்கிரஸ் கட்சியாலே நடக்கிறது; மந்திரிகள் சுற்றுப்பிரயாணத்திற்கு காங்கிரஸ்காரர்கள் ஏற்பாடு பண்ணுகிறார்கள்; வேறு ஒருவரையும் கவனிப்பதே இல்லை" என்று. இப்படி ஒருவிதம். நண்பர் ராமசாமிப் பிள்ளை அவர்களைப் போன்றவர், "மக்களுடைய பிரதிநிதிகளைக் கவனிப்பதில்லை; கலெக்டரைக் கேட்டுத் தான் செய்கிறார்கள்; கலெக்டரைக் காரில் பக்கத்தில் வைத்துக்கொண்டு மந்திரிகள் போகிறார்கள்" என்று சொல்கிறார்கள். அப்படிச் செய்வது அத்தியாவசியம் என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு நிர்வாகம் நல்ல முறையில் நடைபெறவேண்டுமானால், அங்கங்கே நியமிக்கப்பட்டிருக்கிற அதிகாரிகள் தவறு செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது மிக அவசியம். அதே சமயத்தில் அவர்கள் பொறுப்பை உணரக்கூடிய முறையிலே அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்பை உணர்ந்து, அவர்களுக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்பை மக்களும் உணர்ந்து, நல்லமுறையில் பணியாற்றுவதற்கு நம்பிக்கையை அவர்களுக்கு ஏற்படுத்தியாகவேண்டும். இன்றைக்கு இருக்கும் அமைப்பிலே ஜில்லாக் கலெக்டர் தான் எல்லாவற்றுக்கும் பொறுப்பாக இருந்து நடத்தவேண்டிய பொறுப்பு இருக்கிறது. அது சிலருக்குப் பிடிக்கலாம். அல்லது பிடிக்காமல் இருக்கலாம். அந்த அமைப்பிலே அந்த அதிகாரிக்குப் போதுமான முக்கியத்துவம் கொடுத்து, பொறுப்பை உணரக்கூடிய முறையிலே மக்கள் ஒத்துழைக்கக் கூடிய முறையிலே, அவர்களுக்குத் தகுதியை ஏற்படுத்திக் கொடுக்கவில்லையென்றால், நாம் இன்றைக்கு எடுத்துக்கொண்டிருக்கும் பல காரியங்கள் பாழாகி விடும். கலெக்டரைப் பற்றி மட்டும் அல்ல நான் சொல்வது. ஒரு சிறு அதிகாரியாக இருந்தாலுங்கூட, அவருக்குக் கொடுத்திருக்கும் பொறுப்பைப் பற்றியவரையில் அவருடைய பகுதியில் அவர் தான் மேலான அதிகாரி என்னும்போது, அவருக்கும் அத்தகைய தகுதியை ஏற்படுத்திக் கொடுக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. "கலெக்டர் அவர்களே" என்று கூப்பிட்டால் நான் கலெக்டருக்கு மட்டமாகி விட வேண்டும் என்பது அவசியம் இல்லை. யாரையும் பொதுவாக "அவர்களே" என்று அழைப்பதுண்டு. அது போல கலெக்டரையும் "அவர்களே" என்று சேர்த்துச் சொல்வதிலே ஒருவருடைய மதிப்பு குறைந்துவிடப் போவதில்லை. பரந்த மனப்பான்மையோடு இருக்கக்கூடிய திரு. ராமசாமிப் பிள்ளை அவர்கள் இதிலே ஒரு சிறு மனப்பான்மையைக் காண்பிக்கிறாரே என்று நான் வருத்தப்படுகிறேன். அதிகாரிகள் என்றால், அவர்கள் வேறு எங்கேயோ இருந்து வந்தவர்கள் அல்ல; நம்மிடத்தில் பழகிக்கொண்டிருக்கிறவர்கள் தான் அவர்களும். அவர்களுக்கும் ஒரு மதிப்பு கொடுக்கும் போது தான் அவர்களும் நன்றாகப் பணியாற்றுவார்கள். அத்தகைய சூழ்நிலையை ஏற்படுத்துவதில் தவறு ஒன்றும் இல்லை. காரில் அமைச்சர்கள் தங்கள் பக்கத்தில் கலெக்டரையோ காங்கிரஸ்காரர்களையோ உட்கார வைத்துக்கொண்டு செல்கிறார்கள் என்றால், இப்படிச் சொல்கிற அங்கத்தினர்கள் வந்து உட்காரமாட்டேன் என்கிறார்களே (சிரிப்பு) அதற்கு என்ன செய்வது ?

**Sri T. S. RAMASWAMY PILLAI :** நான் சொல்வது—அதிகாரிகள் கூட்டத்திலே கலெக்டர் தலைமை தாங்கி நடத்தினால் அவர்களைப் பார்த்து " கலெக்டர் அவர்களே " என்று பேசுவதை நிச்சயமாக நான் ஆட்சேபிக்க வில்லை. ஆனால், பொது மக்களுடைய கூட்டத்திலே கலெக்டர் தலைவர் அல்ல. பொது மக்களுடைய தலைவர்கள் எம்.எல்.ஏ.க்கள் என்பதை மாத்திரம் நான் இங்கே தெரிவித்துக்கொள்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** பொது மக்களுடைய தலைவர்கள் எம்.எல்.ஏ.-க்கள் என்பதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால், அதிகாரிகளுக்குள்ளே முன்னால் இருக்கக்கூடியவர் கலெக்டர் தான். அதிகாரிகளைப்பற்றியே குறிப்பிடுவது தவறு என்றால் நான் அதை ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை. அங்கே இருப்பவர்களை அறிமுகப்படுத்தும்போது " கலெக்டர் அவர்களே " என்று சொல்கிறார்கள் என்றால், அதிலே தவறு இருப்பதாகத் தெரியவில்லை. எந்த மனப்பான்மையோடு பார்க்கிறோமோ அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

முக்கியமாக, " எம்.எல்.ஏ.-க்கள் சொல்லும் விஷயத்தை மந்திரிகள் கவனிக்கவில்லை ; பல மனுக்கள் கொடுக்கப்பட்டிருந்தும் அதிலுள்ள காரியங்கள் நிறைவேற்றப்படவில்லை " என்று சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். நான் ஒப்புக்கொள்கிறேன். என்ன காரணம் ? இன்றைக்கு இன்னும் தீராமல் இருக்கும் குறைகள் எவ்வளவு என்பதைத் தெரிந்திருப்பாரானால், திரு. அன்பழகன் அவர்கள் அந்தக் குற்றச் சாட்டைச் சொல்லியிருக்கமாட்டார்கள். மற்ற அங்கத்தினர்கள் சிலரும் சொல்லியிருக்கமாட்டார்கள். இன்றைக்கு எங்கள் பக்கத்தில் இருக்கும் அங்கத்தினர்களும் குறைகளை எடுத்துச் சொல்கிறார்கள் என்றால் அவ்வளவு குறைகள் இருக்கின்றன. அவைகளைத் தீர்ப்பதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். சுதந்திரம் பெற்று பத்து ஆண்டுகளில் பல காரியங்களை நிறைவேற்றி வருகிறோம் என்று பெருமைப்படலாம். ஆனால், அத்தனை காரியங்களும் ஒரு பெரிய மலையிலே எதோ ஒரு சிறு பகுதி செதுக்கப்பட்டதாகத்தான் கொள்ள வேண்டும். இன்னும் மலைபோல் இருக்கிறது. போகப் போக மலை வளர்ந்துகொண்டே தான் இருக்கும். எந்தக் காலத்திலும் இந்தப் பிரச்னையைத் தீர்த்துவிட்டோம் என்ற நிலைமை எப்போதும் ஏற்படப் போவதில்லை.

அது ஒருபுறமிருக்க, இன்றைக்கு குறைகள் இருக்கும் காரணத்தால், மக்கள் பிரதிநிதியாக வரக்கூடியவர்கள் அங்கே இருக்கும் குறைகளை எடுத்துச் சொல்ல வேண்டியதாகத்தான் இருக்கும். அதை மறைக்க முடியாது. அதில் எத்தனை காரியங்களை நிறைவேற்ற முடியுமோ, அவைகளை—இருக்கும் வசதியை வைத்துக்கொண்டு—தீர்க்க முயற்சி செய்கிறோம். எதற்கு முதல் இடம் கொடுப்பது என்பதைப்பற்றி பட்ஜெட்டிலே தீர்மானம் செய்திருக்கிறோம். ஐந்தாண்டுத் திட்டத்திலே தீர்மானம் செய்திருக்கிறோம். மேலும் புதிய வசதிகளைக் கண்டுபிடித்து புதிய காரியங்களை எடுத்துச் செய்துகொண்டிருக்கிறோம். அவ்வப்போது செய்கின்ற காரியகளில், எது ரொம்ப அவசியம் என்று தோன்றுகிறதோ அதை உடனடியாகச் செய்கிறோம், சிலவற்றைப் பொருத்துத்தான் செய்யவேண்டி ஏற்படுகிறது. அப்படிச் செய்வது குற்றமானால், அந்தக் குற்றத்தை ஏற்றுக்கொள்வதற்கு நாங்கள் தயாராக இருக்கிறோம். இப்படிக் கொடுத்தும் பிரயோஜனம் இல்லையென்றால், இப்பொழுது இருக்கும் சூழ்நிலை காரணமாக இப்பொழுது தவிர்க்க முடியாத நிலைமை என்பதைத்தான் இந்தச் சபையிலே சொல்லிக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது.

இன்னொரு விஷயத்தைப் பற்றியும் குறையாகச் சொல்லிக்கொண்டு வந்தார்கள். பல அங்கத்தினர்கள் பேசும்போது, " எல்லாம் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் இருக்கும் தொகுதியிலே நடக்கிறது, எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் தொகுதியிலே நடக்கவில்லை ; அதிலும் முக்கியமாக தேசிய விஸ்தரிப்புத் திட்டம், சமுதாய நலத் திட்டம் எல்லாம் காங்கிரஸ்

13th March 1959] [Sri C. Subramaniam]

அங்கத்தினர்கள் இருக்கும் இடத்திற்குப் போய்விடுகிறது" என்கிறார்கள். இதிலே பார்க்கவேண்டியது இதுதான். நீங்கள் அதைப்பற்றி எப்படி நினைத்தாலும் சரி, 150 பேர் காங்கிரஸ்காரர் ஒரு பக்கத்திலும், 50 பேர் இன்னொரு பக்கத்திலும் இங்கே இருக்கிறார்கள். மற்றவர்கள் பகுதியில் ஒரு பங்கு காரியங்கள் நடந்தால், காங்கிரஸ்காரர்கள் இருக்கும் பகுதியில் மூன்று பங்கு நடந்தால்தான் எல்லோருக்கும் நியாயமாகப் பிரித்துக்கொடுத்த மாதிரி ஆகும். அதை மறந்துவிட்டு, "நான் எதிர்க் கட்சிக்காரன், எதிர்க்கட்சியினர் இருக்கும் தொகுதிக்கே பூராவும் வசதி செய்து கொடுக்க வேண்டும்; காங்கிரஸ்காரர் இருக்கும் தொகுதிக்கு செய்து கொடுக்கக்கூடாது" என்றால் காங்கிரஸ்காரர்களே வரவேண்டாம் என்று சொல்லிவிடலாம். அதை மனதில் வைத்துப்பார்த்தால், எந்த விதத்திலும் "ஏதோ காங்கிரஸ்காரர் தொகுதியிலே செய்யப்படுகிறது எதிர்க்கட்சிக்காரர்கள் இருக்கும் தொகுதி புறக்கணிக்கப்பட்டிருக்கிறது" என்ற குற்றத்தை யாரும் சொல்ல முடியாது. ஆனால், அவர்கள் நினைக் கிறது என்னவென்றால், "நாம் எதிர்க்கட்சிக்காரர்கள்; ஆகவே நடக்க வேண்டிய காரியங்களெல்லாம் எங்கள் தொகுதியிலேயே நடக்கவேண்டும்" என்று எதிர்பார்த்தால், அது நியாயமல்ல, மனிதப் பண்பும் அல்ல. எங்கள் பக்கத்தில் இருப்பவர்களுடைய பகுதிகளைக் கவனிக்காமல் இருந்து விடமுடியாது. எதிர்க் கட்சிக்காரர்கள் திட்டுகிறார்கள் என்பதற்காக அவர்கள் பகுதிக்கே செய்யவேண்டும் மற்ற பகுதிக்குச் செய்யக்கூடாது என்று அவர்கள் எதிர்பார்க்க முடியாது. ஒருவர் திட்டாமல் இருக்கவேண்டும் என்பதற்காக அப்படிச் செய்வது நியாயமா என்பதைப்பற்றி யோசிக்க வேண்டும். திட்டுவதைத் தவிர்க்க வேண்டுமென்பதற்காக, கடுமையான வார்த்தைகள் சொல்வதைத் தவிர்த்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக, காங்கிரஸ்காரர்களின் தொகுதிகளை ஒதுக்கிவிட்டு, அங்கிருக்கும் மக்களெல் லாம் மக்கள் அல்ல, காங்கிரசை எதிர்த்து வோட்டு போட்டவர்களுடைய பகுதிகளுக்குத்தான் முதல் சலுகை செய்ய வேண்டும் என்ற முறையிலே பணியாற்றினால் சர்க்காரே இருக்கமுடியாது. ஆகையால்தான், இப்பேர்ப் பட்ட சூழ் நிலைக்கு மத்தியிலே எங்களால் இயன்ற அளவு எங்கள் சேவையைச் செய்து வருவதற்கு முயற்சி செய்து வருகிறோம். "அந்தச் சேவையை இன்னும் கொஞ்சம் நன்றாக நடத்துவதற்கு உங்கள் உதவி இருக்குமா?" என்று எதிர்க்கட்சியிலே உள்ளவர்களையும் கேட்கிறேன். அவர்கள் இல்லையென்று சொல்லிவிட்டால், இப்பொழுது இருக்கிற மாதிரி நாங்கள் நடத்திக்கொண்டு போகிறோம் என்று தெரிவித்துக்கொள்கிறேன். எல்லோரும் சேர்ந்து, அடிக்கடி இல்லாத குறைகளையும், வெறுமனே தீர்க்க முடியாத குறைகளையும் திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு இருப் பதைவிட, ஆகக்கூடிய காரியத்திலே நல்ல முறையிலே யோசனை சொன்னால் இப்பொழுது செய்வதைவிட இன்னும் கொஞ்சம் திறமையாக செய்ய முடியும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. அந்த ஒத்துழைப்பு இருக்குமா? என்று உங்களைப் பார்த்துக் கேட்கிறோம். அப்படிக் கேட்கும் போது, "ஒத்துழைப்புக் கேட்கிறார்கள், ஆனால், அது செய்வதில்லை இது செய்வதில்லை" என்று குற்றம் சொல்லிக்கொண்டிருந்தால் என்ன செய்வது? எல்லாக் குறைகளையும் நாங்கள் தீர்த்த பிற்பாடு தான் ஒத்துழைப்பு தருவோம் என்று அவர்கள் சொன்னால் அந்த ஒத்துழைப்பு எப்பொழுது கிடைக்க முடியும்? குறைகள் என்பது ஒன்றன் பின் ஒன்றாக, சங்கிலித் தொடர்போல் இருந்துகொண்டே இருக்கும். அவைகளையெல்லாம் ஒவ் வொன்றாகத் தீர்த்துக்கொண்டு வருகிறோம்.

மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவேண்டும் என்பது நாமெல் லாம் ஏற்றுக்கொண்டிருக்கிற பணியாகும். அதற்காக என்ன என்ன செய்யவேண்டும் என்பதிலே நாம் கவனம் செலுத்திக்கொண்டு, திட்டங்களை நிறைவேற்றிக்கொண்டு வரும்போது, இந்தக் கட்சியைச் சேர்ந்த வர்கள், அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்று பார்த்து காரியங்களைச் செய்வதில்லை. நாட்டிலே பொருளாதாரம் மொத்தமாக பரவலாக எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்பதை வைத்துக்கொண்டுதான் பல்வேறு

[Sri C. Subramaniam] [13th March 1959

துறைகளிலும் இருக்கக்கூடிய மக்கள் முன்னேறி வரச் செய்ய முடியுமே தவிர, ஒரு பகுதி மட்டும் முன்னேறி, மற்ற பகுதிகள் பின்னே இருக்கும் நிலையில், இன்னும் அதிகமாக பங்கு கிடைக்கவேண்டுமென்று நினைத்துப் பார்ப்பது தவறு என்று நான் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

இந்த விவாதத்தில் பல விஷயங்கள் சொல்லப்பட்டன. அவைகளைப் பற்றியெல்லாம் நான் இங்கே விவரிக்க முடியவில்லையென்றால், அவை யெல்லாம் முக்கியக் குறைவு ஏன்ற காரணத்தால் அல்ல, காலக் குறைவு தான் காரணமே தவிர வேறு அல்ல. இங்கே கனம் அங்கத்தினர்கள் சொல்வதையெல்லாம் ஒருவரும் ஏற்றுக்கொள்ளவில்லை என்று யாரும் நினைக்கக்கூடாது. அவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டே இருக்கும் போது, நல்ல கருத்துக்கள் வரும்போது எங்களையும் அறியாமல் பல காரியங்களைச் செய்யத் தூண்டுவதாக அவை அமைகின்றன என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

Sri K. ANBAZHAGAN : தமிழ்நாடு . . . . . . . . .

The Hon. Sri C. SUBRAMANIAM : பெயரிலே ஒரு சில பேருக்கு நம்பிக்கை. பெயர் மாற்றினவுடனே பெரியதாகிவிடுகிறதாக. பெயர் மாற்றி விடுவதினால் உண்மையிலேயே ஏதாவது காரியம் ஆகும் என்றால் நான் செய்வதற்குத் தயாராக இருக்கிறேன். பெயர் மாற்றுவதால் ஒன்றும் இல்லை என்பதை வலியுறுத்துவதற்காகவே ''மெட்ராஸ்'' என்ற பெயரே இருப்பது நல்லது. மெட்ராஸை ''தமிழ்நாடு'' என்று சொல்வதை யார் தடுக்கப்போ கிறார்கள்? யாரும் தடுக்கப்போவதில்லை. தமிழ்நாடு என்று நான் பேசுகிறேன். அம்மாதிரி இரண்டு பெயர்கள் இருப்பதாலே தவறு இல்லை. என் வீட்டிலே என்னை ''சுப்ரமண்யம்'' என்று அழைப்பதில்லை. பழைய செல்லப் பெயரை வைத்துத்தான் அழைக்கிறார்கள் (சிரிப்பு) ஆகையால், ''தமிழ்நாடு'' என்று சொல்வதைப்பற்றி யாரும் மறுக்கமாட்டார்கள். எல்லோரும் தமிழ்நாடு என்று சொல்வோம். ஆனால், ரிகார்டிலே ''மெட்ராஸ்'' என்ற வார்த்தை கையாளப்பட்டு வந்துகொண்டிருக்கிறது. ரிகார்டில் ''மெட்ராஸ்'' என்று இருந்துகொண்டிருப்பதை ''தமிழ்நாடு'' என்று மாற்றவேண்டுமானால், கெஜட் டில் பதிவு பண்ணி பெயரை மாற்றவேண்டிய அவசியம் எல்லாம் ஏற்படும். அதெல்லாம் செய்யவேண்டாம். நான் இப்படிச் சொல்வதினால், எனக்குத் தமிழ்ப்பற்றுக் குறைவு என்று யாரும் எண்ணமாட்டார்கள் என்று நினைக் கிறேன். தமிழ்நாடு என்று சொன்னால், என் காதில் தேன் வந்து பாய்வதற்குப் பதிலாக ஈயம் வந்து பாய்கிறது என்று யாரும் நினைக்க வேண்டாம். தமிழ்ப்பற்றுக்குறைவினால் அல்ல நான் இப்படிச் சொல் வது. ''மெட்ராஸ் ஸ்டேட்'' என்று அபிஷியல் ரிகார்டுகளில் எழுதுவதே தவிர, தமிழ்நாடு என்று சொல்கிறோம், தமிழ்நாடு என்று பேசுகிறோம். எல்லோரும் தமிழ்நாடு என்று சொல்லலாம். தமிழ்நாடு என்ற பெயர் தான் நம்முடைய நாட்டுக்கு இப்பொழுதே ஏற்றுக்கொண்டிருக்கிற பெயர். ஆனால் ரிகார்டிலே இருக்கிறபடி இருக்கட்டும். பெயரை மாற்றுவதினால் நமக்கு நன்மை வரப்போவதில்லை. இதற்காக பெரியதொரு இயக்கம் நடத்தி, குற்றச்சாட்டு சொல்லிக்கொண்டிருக்கவேண்டிய அவசியம் இல்லை என்று தெரிவித்துக்கொண்டு, இதற்குப் பிறகும் வெட்டுப் பிரேரணைக்கு அவசியம் இல்லை என்று நான் நினைக்கிறேன். அத்துடன் விட்டுவிடுகிறேன்.

DEPUTY SPEAKER : I shall now put the cut motion to vote. The question is :

"That the allotment of Rs. 1,02,67,100 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff—be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

13th March 1959]

DEPUTY SPEAKER : The question is :

"That the Government be granted a sum not exceeding Rs. 1,02,67,100 under Demand IX—Head of State, Ministers and Headquarters Staff."

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The question is—

"That the allotment of Rs. 16,96,700 under Demand XI—Elections be reduced by Rs. 100."

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 16,96,700 under Demand XI—Elections."

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again to-morrow morning at 8-30.

1-30 p.m.

The House then adjourned.